


# மின்தமிழ்மேடை

29

எளிய வகையில் வரலாற்றை மக்களிடம் கொண்டு சேர்ப்போம்!



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு


வெளியிடும் காலாண்டிதழ் காட்சி: 29 ஏப்ரல் - 2022

https://www.tamilheritage.org/




# மின்தமிழ்மேடை

29

எளிய வகையில் வரலாற்றை மக்களிடம் கொண்டு சேர்ப்போம்!



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

வெளியிடும் காலாண்டிதழ் காட்சி: 29 ஏப்ரல் - 2022

https://www.tamilheritage.org/

*பொறுப்பாசிரியர்: முனைவர் தேமொழி*

# தலையங்கம்: எளிய வகையில் வரலாற்றை மக்களிடம் கொண்டு சேர்ப்போம்

— முனைவர் க.சுபாஷிணி



வணக்கம்.

தொல்லியல் மற்றும் வரலாற்று ஆய்வுத்துறை என்பது அத்துறை ஆய்வாளர்களின் கவனத்தில் மட்டுமே இருந்த ஒரு துறை என்ற நிலை மாறி கடந்த சில ஆண்டுகளில் பொது மக்களின் கவனத்தையும், ஆர்வத்தையும் ஈர்க்கும் ஒரு துறையாகப் பரிணாம மாற்றம் அடைந்துள்ளது. இந்த நிலைக்கு பல்வேறு செயல்பாடுகளைக் காரணமாகக் கூறலாம்.

குறிப்பிடத்தக்க வகையில் வரலாற்று மற்றும் தொல்லியல் கள ஆய்வுச் செய்திகள் பத்திரிக்கை மற்றும் சமூக ஊடகங்களில் வெளிவருவது பொதுமக்களின் கவனத்திற்கு அவை பற்றிய செய்திகளைக் கொண்டு சென்றிருக்கிறது. அடுத்து பல்வேறு சமூக மற்றும் கல்வி நிறுவனங்களும் சமூக ஆர்வலர்களும் ஏற்பாடு செய்யும் மரபுப் பயணங்கள், கல்விச்

சுற்றுலா, வரலாற்றுப் பயணங்கள் ஆகியன குறிப்பிடத்தக்க வகையில் பொதுமக்களிடையே வரலாற்றுச் செய்திகளை நேரில் பார்த்து அறிந்து கொள்ளவும் அவற்றின் சிறப்பைப் புரிந்து கொள்ளவும் தங்கள் வாழ்க்கையோடு அவற்றை தொடர்புப்படுத்திக் காணும் வாய்ப்பையும் நமக்கு ஏற்படுத்தியிருக்கின்றன.

இதற்கு அடுத்ததாக, தற்சமயம் வெளிவருகின்ற ஏராளமான வரலாறு மற்றும் தொல்லியல் துறை சார்ந்த பொதுமக்கள் வாசிப்பிற்கான நூல்களைக் கூறலாம். இத்தகைய நூல்கள் பொதுமக்களின் கைகளில் கிடைக்கும் வகையில் தமிழகமெங்கும் புத்தகக் கண்காட்சி நிகழ்ச்சிகள் நடத்தப்படுவது பொதுமக்களிடையே ஆர்வத்தை ஏற்படுத்தி இருக்கின்றன. வரலாறு மற்றும் தொல்லியல் துறை சார்ந்த அறிஞர்களின் நூல்கள் மட்டுமன்றி சமூகவியல், மானுடவியல் மற்றும் செய்தித்துறை, தமிழ்த்துறை போன்ற மாறுபட்ட துறைகளைச் சார்ந்த அறிஞர்களது தீவிரமான ஆர்வம் என்பது தரமான ஆய்வுத் தரம் கொண்ட நூல்கள் உருவாக்கம் பெறுவதில் பங்களித்திருக்கின்றன. இதுவே இன்று குறிப்பிடத்தக்க வகையில் வரலாற்று ஆய்வு நூல்கள் வெளிவருவதற்குக் காரணமாகின்றன எனலாம்.

பொதுமக்களிடம் வரலாற்றுச் செய்திகளைத் தரமான வகையில் உறுதியான சான்றுகளுடன் கொண்டு சேர்க்க

*வேண்டும் என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு அதன் ஒரு பிரிவாகப் பதிப்பகப் பிரிவை 2019ஆம் ஆண்டு தொடங்கினோம். இப் பதிப்பக பிரிவின் முதல் நூலாக 'திருவள்ளுவர் யார்- கட்டுக்கதைகளைக் கட்டுடைக்கும் திருவள்ளுவர்' என்ற நூல் வெளியீடு கண்டது. இதன் தொடர்ச்சியாக கடந்த மூன்று ஆண்டுகளில் 13 நூல்கள் தமிழ் மரபு அறக்கட்டளையின் வெளியீடுகளாக வந்துள்ளன.*




*தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் நூல்கள் ஆய்வுத் தரமும் வரலாற்றுச் செய்திகளின் உண்மைத் தன்மையும் கொண்ட வகையில் அமைந்திருக்க வேண்டும் என்பதில் பதிப்புத்துறை மிகுந்த அக்கறையுடன் செயல்பட்டு வருகின்றது. இப்பதிப்பகத் துறையின் பொறுப்பாளராகச்*

செயல்படும் என்னுடன் இணைந்து தமிழ் மரபு அறக்கட்டளையின் செயலாளர் முனைவர் தேமொழி, மற்றும் மலர்விழி பாஸ்கரன், முனைவர் பாப்பா, முனைவர் பாமா, ஹேமலட்சுமி ஆகியோர் கொண்ட குழு சிறப்பாக பணியாற்றி வருகின்றது.

வரலாறு மற்றும் தொல்லியல் துறை செய்திகள் என்பன கல்வித் தளத்தில் இருக்கின்ற அறிஞர்களுக்கு மட்டுமல்ல, மாறாக எல்லா தளத்திலும் இயங்கும் பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்கள், பொதுமக்கள் ஆகியோருக்கும் எளிய வகையில் வரலாற்றைக் கொண்டு சேர்ப்பது தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகப் பிரிவின் நோக்கமாகும்.



*தமிழகத்தில் இருக்கின்ற வரலாற்று ஆர்வலர்களுக்கு புத்தகக் கண்காட்சிகளின் வழியாகவும், இணைய வழி புத்தக விற்பனையாளர்களின் வழியாகவும் தமிழ் நூல்கள் வாசிக்கக் கிடைக்கின்றன. இதேநிலை உலகில் அதிலும் குறிப்பாகத் தமிழ் மக்கள் மிக அதிகமாக வாழ்கின்ற மலேசியா, சிங்கை, இலங்கை, அமெரிக்கா, ஐரோப்பா, ஆஸ்திரேலியா, கனடா போன்ற நாடுகளிலும் புத்தகக் கண்காட்சிகளை ஏற்படுத்துவதன் வழி நூல்கள் வாசிப்பது, அதிலும் குறிப்பாக வரலாற்றுத் தகவல்கள் கொண்ட நூல்களைப் பொதுமக்கள் வாசிக்கும் வழி செய்வது அவசிய தேவையாகின்றது. தமிழக அரசின் சீரிய பற்பல பணிகளில் இதனையும் ஒன்றாகக் கொண்டு, தமிழகத்திற்கு வெளியே புத்தகக் கண்காட்சிகளை ஏற்பாடு செய்ய அரசு முன்வந்தால் தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகம் போன்ற தரமான பல்வேறு நூல்களை உருவாக்கி வழங்கும் பதிப்பகங்கள் அதனை நல்வாய்ப்பாகப் பயன்படுத்தி தரமான ஆய்வு நூல்களைத் தமிழ்நாட்டிற்கு வெளியே வாழும் மக்களுக்கும் கொண்டு சேர்ப்பதில் வெற்றி பெற முடியும். இது தமிழ் நூல் வாசிப்பில் ஒரு மாபெரும் புரட்சியை நிச்சயம் உருவாக்கும்! தமிழால் இணைவோம்.*

*அன்புடன்*
*முனைவர் க. சுபாஷிணி*
*தலைவர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு*

இந்த இதழின் முகப்புப் படம்
ஓவியர் திரு. சந்தோஷ் நாராயணன்
அவர்களின்  கைவண்ணத்தில் உருவான

"தமிழணங்கு"

அவருக்கு
தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின்
நன்றிகள் உரித்தாகிறது

*'மின்தமிழ்மேடை ' இதழுக்கு படைப்புக்களை அனுப்ப விரும்புபவர் .....*
*editorthf journal@gmail.com என்ற மின்னஞ்சல் முகவரிக்கு தாங்கள் உருவாக்கிய படைப்புகளை அனுப்பலாம்.*

*தமிழ் மரபு, இலக்கியம், வரலாறு, தொன்மை, வாழ்வியல் என தமிழ் மற்றும் தமிழர் தொடர்பான படைப்புகள் மின்தமிழ்மேடை காலாண்டிதழுக்காக ஏற்றுக் கொள்ளப்படும்.*

*காலாண்டிதழாக ஒவ்வொரு ஆண்டும் ஜனவரி, ஏப்ரல், ஜூலை, அக்டோபர் 3ஆம் வாரத்தில் மின்தமிழ்மேடை வெளியாகும்.*

*தமிழில் ஒருங்குறி(unicode) வடிவில்; வர்ட் டாகுமெண்ட்டாக அனுப்புக - பக்கம், சொற்கள் கட்டுப்பாடு இல்லை; பொருண்மை தமிழர் - தமிழ் தொடர்பானவை மட்டுமே.*

~*~*~*~*~*

குறிப்பு:

*தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவின் வெளியீடு இது. இந்த நூல் தமிழ் ஆய்வுப்புலத்தின் தேவை கருதி அனைவருக்கும் இலவசமாக வழங்கப்படுகிறது. இந்நூலை மறுபதிப்பு செய்ய விரும்புவோர் அல்லது ஏதாவது ஒரு வகையில் தங்கள் படைப்புகளில் பயன்படுத்த விரும்புவோர் தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பினைத் தொடர்பு கொண்டு அனுமதி பெற்று உசாத்துணைகளை வழங்கி மீள்பதிப்பு செய்யலாம்.*
*- தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் பதிப்பகப் பிரிவு*

~*~*~*~*~*

*கூகுள் புக்ஸ் தளத்தில் மின்தமிழ்மேடை இதழ்கள் கிடைக்கும்*

# இந்த இதழில் ...

## *மின்தமிழ்மேடை - காட்சி: 29; ஏப்ரல் – 2022*

"எளிய வகையில் வரலாற்றை மக்களிடம் கொண்டு சேர்ப்போம்"

(*மின்தமிழில் ஜனவரி 16, 2021 – ஏப்ரல் 15, 2022 வரை*
பதிவான படைப்புகளின் தொகுப்பு)

**மின்தமிழ்மேடை - காட்சி: 29: ஏப்ரல் – 2022**
**இந்த இதழில் ...**

# 1. தமிழ்த்தாய்: ஒரு கலை விமர்சனப் பார்வை

— இந்திரன் ராஜேந்திரன்

*ஏ. ஆர். ரகுமான் சமூக வலைத்தளத்தில் பதிவு செய்த, ஓவியர் சந்தோஷ் நாராயணன் வரைந்த தமிழணங்கிற்கு பழுப்புத் தோல் மேனி, கையில் 'ழ' எனும் எழுத்து ஆயுதம், வெள்ளை உடை, விரிந்த கூந்தல், காலில் சிலம்பு, இடையில் மேகலை, உக்கிர தாண்டவம், காதில் குண்டலம் இல்லை. ஓவியர் சந்தோஷ் படைப்பு புதுமைக்குப் புதுமை செய்கிறது. ஆனால் இதற்கு முந்திய தமிழ் அன்னையை சிவந்த மேனியுடன் ஓவியர் மணியம் செல்வன் ஓவியமாகத் தீட்டி இருக்கிறார்.*




ஓவியர் மணியம் செல்வன்




ஓவியர் சந்தோஷ் நாராயணன்

*தமிழன்னையை கவியோகி சுத்தானந்த பாரதியார் கீழ்க்கண்டவாறு வர்ணிக்கிறார்.*

*"காதொளிரும் குண்டலமும் கைக்குவளை*
*யாபதியும் கருணை மார்பின்*
*மீதொளிர்சிந் தாமணியும் மெல்லிடையில்*
*மேகலையும் சிலம்பார் இன்பப்*
*போதொளிரும் திருவடியும் பொன்முடிசூ*
*ளாமணியும் பொலியச் சூடி*
*நீதியொளிர் செங்கோலாய்த் திருக்குறளைத்*
*தாங்குதமிழ் நீடு வாழ்க"*

*தமிழ் முன்னர் ஓவியமாகத் தீட்டப் பட்டதற்கும் இன்று தீட்டப் படுவதற்கும் தான் எத்தனை வேறுபாடு. அன்று திருக்குறளைச் செங்கோலாய்த் தாங்கியது. இவ்வாறு தமிழ் மொழி காலம் தோறும் மாறி வருவதால் தான் என்றுமுள தென்தமிழ் என தொடர்ந்து வளர்கிறது.*

*1. 1891இல் தமிழ் எனும் ஒரு மொழியை ஒரு தமிழ்த் தாயாக முதல் முதலில் உருவகப்படுத்தியவர் மனோன்மணியம் சுந்தரனார் (1855 – 1897). இவர் தனது மனோன்மணீயம் நூலில் உள்ள பாயிரத்தில் தமிழ்த்தாய் வாழ்த்து எழுதினார். இது எம். எஸ். விஸ்வநாதனால் இசையமைக்கப்பட்டது. 1967 இல் தி.மு.க. வெற்றிபெற்று ஆட்சியமைத்தபோது தமிழ்நாட்டின் முதலமைச்சரான அறிஞர் அண்ணாதுரை*

*“நீராரும் கடல் உடுத்த” எனும் இப்பாடலைச் சில திருத்தங்களோடு தமிழ்த் தாய் வாழ்த்தாக தேர்வு செய்தார். அவர் மறைவிற்குப் பிறகு இப்பாடலை 1970 மார்ச் 11 அன்று தமிழக அரசு தமிழ்த்தாய் வாழ்த்தாக அறிவித்தது. இதன் மூலம் தமிழ்த்தாய் எனும் சொல்லாடல் புகழ் அடைந்தது. “பிதா, சுதன் ஆவி “ என்பதில் தந்தையை முன்னிறுத்தியதுபோல் அல்லாமல் மொகஞ்சதாரோ ஹரப்பா காலத்திலிருந்து தொடரும் தாய்த்தெய்வ வழிபாட்டை இது அடியொற்றியது.*

GOVERNMENT OF TAMIL NADU
1971.



PUBLIC (POLITICAL) DEPARTMENT

Memo. No. 3584/70-4, 23rd November 1970

Prayer Song—Singing of Tamil piece from "Manonmaneeyam", written by Thiru P. Sundaram Pillai as prayer song at the commencement of all functions organised by Government Departments, Local bodies and educational institutions—Tune in which the song is to be sung—Orders issued.

READ—the following papers :—

G.O. Ms. No. 1393, Public (Political), dated 17th June 1970.

Memo. No. 3584/70-4, Public (Political), dated 23rd November 1970.

In the Government Order cited, orders were issued that the piece from "Manonmaneeyam", written by Thiru P. Sundaram Pillai mentioned therein, should be sung as a prayer song at the commencement (and not at the end) of all functions organised by Government Departments, Local Bodies and educational institutions.

2. The Government now direct that the above prayer song should be sung in the Raga "Mohanam" (ராகம்—மோகனம்) and in the Thisra Tala (தாளம்—திஸ்ரம்) as composed by Thiru M. S. Viswanathan. A copy of the song with the swaras as composed by Thiru M. S. Viswanathan is appended to this order for guidance.

T. V. VENKATARAMAN,
*Joint Secretary to Government.*

To all Heads of Departments (including Collectors), District Magistrates, District Judges and Superintendents of Police.
" " Departments of Secretariat (all Sections).
" the Registrar, High Court, Madras-1 (with covering letter).
" " Secretary, Tamil Nadu Public Service Commission, Madras-2 (with covering letter).
" " Secretary, Tamil Nadu State Housing Board, Madras (with covering letter).
" " Secretary, Tamil Nadu Khadi Village Industries Board, Madras (with covering letter).
" " Commissioner, Corporation of Madras, Madras-3 (through Mayor).
" " Commissioners of Municipalities and Panchayat Unions (through Chairmen).
" " Executive Officers of Town Panchayats (through President).
" " Director of Information and Publicity-in-charge, Madras-9.
" " Public Relations Officer, Rural Development and Local Administration Department (with enclosure to all).




கங்கை கொண்ட சோழபுரம் கோயில் சோழர் காலத்திய ஞான சரஸ்வதி | காரைக்குடி தமிழ்த்தாய் கோயிலின் தமிழ்த்தாய் திருவுருவச் சிலை | மதுரை தமுக்கம் மைதான நுழைவுவாயிலில் தமிழ்த்தாய் திருவுருவச் சிலை

*2. இதன் அடுத்த கட்டமாக தமிழ்த்தாய் கோயில் காரைக்குடியில் அமைக்கப்பட்டு, 1975, ஏப்ரல் 23 அன்று தமிழ்த்தாய்க் கோயிலுக்குக் கால்கோள் விழா நடந்து, கட்டுமானப் பணிகள் தொடங்கப்பெற்றன. பின்னர் 16 ஏப்ரல் 1993 இல் அன்றைய தமிழக முதல்வர் கலைஞர் மு. கருணாநிதியால் திறந்து வைக்கப்பட்டது. அதில் தமிழன்னைக்கு சிற்பி வை.கணபதி ஸ்தபதி வடிவம் கொடுத்தார். இதனை கங்கை கொண்ட சோழபுரம் கோயிலில் உள்ள சோழர் காலத்திய ஞான சரஸ்வதி வடிவத்தை அடியொற்றி படைத்ததை கணபதி ஸ்தபதியும், சோழமண்டல ஓவியர் கிராமத்துச் சிற்பி கே.எம் .கோபாலும் நேரில் சந்தித்தபோது எங்களிடம் தெரிவித்தனர். இதில் தமிழ்த்தாய் உருவம் நான்கு கைகளுடன் வலக்கால் கீழே தொங்க இடக்கால் மடித்த நிலையிலும், தாமரைப் பீடத்தில்*

*அமர்ந்தவாறு செதுக்கப்பட்டது. நான்கு கைகளில் சுவடி, செங்கோட்டு யாழ், சுடர், உருத்திராட்ச மாலை ஆகியவை சித்தரிக்கப்பட்டன. கால்களில் சிலம்பும், தண்டையும் உள்ளன. மூவேந்தர்களின் சின்னங்களான வில், புலி, மீன் ஆகியவை பின்புறத்தில் திருவாச்சியில் பொறிக்கப்பட்டுள்ளன.*

*3. இதன் அடுத்த கட்டமாக ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டுக்காக 1981 இல் மதுரையில் அமைக்கப்பட்ட சிலை தாமரையில் இரண்டு கைகளுடன் அபய முத்திரையுடன் அமர்ந்திருப்பது போன்று உருவாக்கப்பட்டது. உலகத் தமிழ் மாநாட்டின் நிறைவு நாளான 10.1.1981-ம் நாள் அன்று இச்சிலையை அன்றைய முதல்வர் பாரத ரத்னா எம்ஜிஆர் முன்னிலையில் அப்போதைய பிரதமர் இந்திராகாந்தி திறந்து வைத்தார். இன்றைக்கும் தமுக்கம் மைதான நுழைவுவாயிலில் தமிழன்னை தேரில் அமர்ந்திருப்பது போன்ற சிலையை நீங்கள் காணலாம்.*

*தமிழ்ச் சமூகத்தில் இப்போதுதான் தமிழ் அழகியல் கூறுகளுடன் கூடிய படைப்புச் செயல்பாடு தீவிரம் அடைந்துள்ளது. ஓவியர் சந்தோஷ் நாராயணனின் பழுப்பு நிறம் கொண்ட "தமிழணங்கு" ஓவியம் அத்தகைய ஒன்று. ஏ.ஆர் ரகுமான் டுவிட்டரில் பதிவிட்ட பின்னர் என் பிறந்த மண் புதுச்சேரி அரசுப் பள்ளியில் பயிலும்*

முத்தமிழ்ச்செல்வன், பாரதியார் ஆண்கள் பாகூர் அரசு மேல்நிலைப் பள்ளி 11 வகுப்பு மாணவன் அதைச் சிற்பமாக வெளிப்பாடு செய்திருக்கிறான்.



ஒரு கலை விமர்சகன் என்ற வகையில் இதனை மிக உன்னதமான தமிழ் மண்ணின் அடையாளத்தோடு கூடிய அசல் படைப்புக் கலை வெளிப்பாடாக கருதுகிறேன். மேல்நாட்டுச் சூரியனிடமிருந்து கடன் வாங்கித்தேய்ந்து போகும் நிலாக்களாக நிறைய படைப்புகள் நவீனத் தமிழ் ஓவியர்களால் செய்யப்படும்போது மாணவன் முத்தமிழ்ச் செல்வனைன் படைப்பு மிகவும் அசல் உயிரோட்டத்துடன் விளங்குவதாக நான் கருதுகிறேன். முற்றிலும் தமிழ் மண்ணில் இயற்கைப் பொருட்களைக் கொண்டு செய்யப்பட்ட தமிழன்னையின் தமிழணங்கு வடிவம் சோள இலை மற்றும் மூங்கிலால் செய்யப்பட்டது (ஆடை வடிவமைப்பு: குணா).

*இதனை ஏ.ஆர் ரகுமான் பகிர்ந்திருப்பது மிகவும் சிறப்பு. நமது கலை தமிழ் அடையாளம் கொண்டதாக மாற வேண்டும் என்று கடந்த 30 ஆண்டுகளாக நான் எனது "தமிழ் அழகியல்" நூலில் வற்புறுத்தி வருவது இன்று இயல்பாகவே கள்ளம் கபடமற்ற நிலையில் நனவாகிறது.*

## 2. கருத்தான தமிழணங்கு

— ஆர்.பாலகிருஷ்ணன்

*கருத்தான தமிழணங்கு*
*கறுத்திருக்கிறாள்.*
*ஏனெனில் அவள்*
*பொறுப்பாக இருக்கிறாள்.*
*அதனால் பொங்கி எழுகிறாள்.*
*சினத்தின் நிறம்*
*சிவப்பு மட்டுமல்ல.*
*கறுப்பும் சிவப்பும்.*
*ஐயம் இருந்தால்*
*தொல்காப்பியரை*
*கேளுங்கள்...*
*"கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள*
*நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப"**
*தாலாட்டி பாலூட்டும் போது*
*அவள் தாய்*
*தாக்கும் போது அணங்கு.*
*அதனால் தான்*
*" தாக்கணங்கு" என்றார்*
*வள்ளுவர்.*

தமிழணங்கின்
கையில்
தனித்துவ படைக்கலம்.
ழகர வேல்!
எவரும் இதை மறவேல்.

-- ஆர். பாலகிருஷ்ணன்

* "கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள
நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப". ( தொல். 855)

## 3. தமிழகத்தின் நாயகி

— கவிஞர் அமீர்

*தமிழகத்தின் தாயாகி*
*அம்மக்களின் செல்லச் சேயாகி*
*மொழி தாகத்தைத்*
*தீர்க்கும் வற்றா காவிரியே...*
*தமிழே.....*
*இன்று நீ*
*கோபம் கொண்டது ஏன்?*

*பணிவுக்கும்*
*அன்பிற்கும் அடையாளமான நீ*
*ஆவேசமாவது ஏன்?*

*ஆதிக்கக் கும்பலின்*
*சத்ரிய போதையின்*
*மொழிவெறியைக் கண்டா?*

*சுயமரியாதை சுடர்விடும் மண்ணில்*
*உன்னை சூறையாட வந்த*
*சாஸ்திரத்தை கண்டா?*

அல்லது

கட்டங்களில் கணக்கிட்டு
உன்னை வழிப்பறி செய்யவந்த
கோத்திரத்தை கண்டா?

தூறையாடப்பட
நீ சொப்பன சுந்தரியல்ல
கட்டடக்கரர்கள்
நினைப்பது போல்
நீ பத்தாண்டு திட்டமும் அல்ல

சான்றோருக்கு அழகு
சான்றாண்மை
அதை மறந்து
மத வேற்றுமை போல்
மொழி வேற்றுமைக்கு
நடக்கிறது இன்று
ஒரு ராஜசூய யாகம்

யாணர்களோ
வாணர்களோ
அரசியலில் பிழை செய்தோருக்கு
அறமே எமன் என்பது முதுமொழி

*பூவின் மென்மையை*
*மேலுடுத்திய திருமகளே*
*பாரதி சொன்னது போல்*
*தண்டச் சோறுண்ணும்*
*அவர்களுக்குத் தெரியாது*
*நீ*
*ஆபரணங்கள் விரும்பும்*
*ஆரணங்கு அல்ல*
*கண்ணகி எனும் தீயை ஈன்ற*
*தமிழணங்கு என்று*

# 4. மலேசியா கெடா மாநில பவுத்த சுவடுகள்

– முனைவர் க.சுபாஷிணி

*அறிமுகம்:*

*கி.பி. 2 ஆம் நூற்றாண்டு முதல் கிழக்காசிய நாடுகளில் பௌத்தம் மிக வேகமாகப் பரவத் தொடங்கியது. அதில் தமிழகத்தின் நாகப்பட்டினம் மற்றும் காஞ்சிபுரம் பகுதியிலிருந்து வந்த பௌத்த பிக்குகளும் பௌத்த சமயம் பரப்பும் பணியில் முக்கியப் பணியாற்றியுள்ளார்கள். தமிழ்நாட்டு வணிகர்களின் பங்களிப்பும் இதில் முக்கியமானதாகும். சீனா, ஜப்பான் கொரியா, என நீண்ட தூரம் தமிழ் நிலத்திலிருந்து பயணித்திருக்கின்றார்கள். இத்தகைய பயணங்கள் கிழக்காசிய நாடுகளிலும் தூரக் கிழக்காசிய நாடுகளிலும் பௌத்தம் ஆழ வேரூன்றி வளர்ச்சி பெற அடித்தளம் அமைத்தது.*

*ஸ்ரீவிஜயா போன்ற மிகப்பெரிய பேரரசு, மிகப்பெரிய பௌத்த அடிப்படை கொண்ட நாடாக இருந்த இந்தோனீசியா கி.பி. 12ஆம் நூற்றாண்டு முதல் சிறிது சிறிதாக இஸ்லாமிய மதத்தை உள்வாங்கிக்கொண்டு இஸ்லாமிய நாடாக மாறத் தொடங்கியது. மலாயா கி.பி. 14ஆம் நூற்றாண்டு முதல் இதே அரசியல் சமய மாற்றத்தை அடையத் தொடங்கி இவை*

இரண்டும் இன்று கிழக்காசிய நாடுகளில் இஸ்லாமிய மதத்தை அரசியல் மதமாகக் கொண்ட நாடுகளாக விளங்குகின்றன. ஏனைய கிழக்காசிய, தூரக்கிழக்காசிய நாடுகள் தொடர்ந்து பௌத்த சமயத்தைத் தங்கள் அரசியல் மதமாகக் கொண்ட நாடுகளாக விளங்கி வருகின்றன.



மலேசியாவின் பல பகுதிகளில் பௌத்த ஆலயங்கள் இருக்கின்றன என்பதை நம்மில் பலரும் கேள்விப் பட்டிருப்போம். ஆனால் கெடா மாநிலத்தில் ஏராளமான பௌத்த விகாரைகள் இருக்கின்றன என்பதை எனது இந்தப்

*பயணத்தில் தான் நான் அறிந்து கொண்டேன். பண்டைய பௌத்த சமய ஆதிக்கத்தின் தொடர்ச்சி முழுமையாக அழிந்து விடாமல் பலபகுதிகளில் அதிலும் குறிப்பான கெடா மாநிலத்தின் மலைப்பாங்கான பகுதிகளில் இன்னமும் உயிர்ப்புடன் செயல்பட்டு வருகின்றன என்பதைக் காணும் போது வியப்பு மேலிடுகிறது.*

*கெடா மாநிலத்தின் சிக், ஜெனியாங் ஆகிய இரு பகுதிகளில் மட்டுமே உள்ள பௌத்த விகாரைகளுக்குச் சென்று வருவோம் என புறப்பட்டபோது ஆச்சரியப்படத்தக்க வகையில் ஏறக்குறைய 12 பௌத்த விகாரைகளை நான் நேரில் காணும் வாய்ப்பைப் பெற்றேன். பெரும்பாலானவை தாய்லாந்து பௌத்த அடிப்படையில் அமைக்கப்பட்ட பௌத்த விகாரைகளாக அமைந்திருக்கின்றன.*

***வாட் காலாய் பௌத்த விகாரை (Wat Kalai):***

*கெடா மாநிலத்தின் ஜெனியாங் பகுதியில் இருக்கின்றது வாட் காலாய் (Wat Kalai) என்ற பெயர் கொண்ட இந்த பௌத்த விகாரை. செழிப்பான வளமான மலைப் பகுதியில் அடர்ந்த காடுகள் சூழ்ந்த வகையில் அமைந்த பகுதியில் இந்தப் பௌத்த விகாரை அமைக்கப்பட்டுள்ளது. சாலையிலிருந்து மிக எளிதாக இந்த விகாரையை அடையாளம் கண்டுகொள்ள முடிகிறது. இந்தப் பௌத்த விகாரைக்குப் பின்புறம் காட்டாறு ஒன்று மிக வேகமான நீர் பாய்ச்சலுடன்*

ஓடிக்கொண்டிருக்கும் காட்சியும் நம் மனதைக் கவர்கிறது. மிகப்பெரிய வளாகத்தில் பல்வேறு சிறு சிறு சன்னதிகளாக புத்தரின் வடிவங்கள், தாய்லாந்து பௌத்த சின்னங்கள், போதிசத்துவர் சிற்பம், தியான மண்டபம், பிக்குகள் தங்கும் வீடு என இக்கோயில் அமைக்கப்பட்டுள்ளது.



*இக்கோயிலின் மிகச் சிறப்பான ஒரு சிற்பம் என்றால் அது 21 மீட்டர் உயரம் கொண்ட புத்தரின் சிலை எனலாம். புத்தரின் சிலைக்குக் கீழ் ஒரு மண்டபம் அமைந்துள்ளது. அதனுள் சிறுசிறு பெட்டிகள் போல் அமைக்கப்பட்ட அலமாரிக்குள் இறந்த பௌத்த சமயத்தைப் பின்பற்றுபவர்களின் சாம்பல் குடுவைகளில் வைக்கப்பட்டு அலமாரிகளில் வைக்கப்பட்டுள்ளன. இக்கோயில் அமைக்கப்படுவதற்கு முன்பு இருந்த பழைய கட்டுமானத்தில் சிதிலமடைந்த பகுதிகள் சில ஓரிரு இடங்களில் தென்படுகின்றன.*

*ஒரு பகுதியில் பௌத்த பிக்கு ஒருவரது சிலை வைக்கப்பட்டு அதன் பின் பாம்புப் புற்று ஒன்று வைத்து வழிபாடு செய்யப்படுகிறது. சீனர்களின் வழிபாட்டில் அமைந்திருக்கக் கூடிய 12 மாதங்களுக்கான 12 விலங்குகளின் சிறிய அளவிலான சிற்பங்கள் வைக்கப்பட்டு அமைக்கப்பட்ட பூங்கா ஒன்றும் இந்த வளாகத்தில் அமைந்திருக்கின்றது. தாமரைக்குளம் மீன் குளம் ஆகியவையும் வெவ்வேறு பகுதிகளில் அமைந்திருக்கின்றன.*

*இப்போது இருக்கின்ற கட்டுமானம் ஏறக்குறைய இருநூறு ஆண்டுகள் பழமையானவை என்ற தகவல் கிடைக்கின்றது. தாய்லாந்து அதாவது சயாமிய பௌத்த அடிப்படையில் அமைந்த கோயில் இது. கெடா மாநிலத்தின் சிக் பகுதியில் வசிக்கின்ற மக்களும் குறிப்பாக சீன, தாய்லாந்து இன*

மக்களும் பல்வேறு நாடுகளிலிருந்து வருகின்ற பக்தர்களும் இந்தக் கோயிலுக்கு வருகிறார்கள்.

இந்த பௌத்த விகாரை முகவரி:
*Wat Kalai*
*Mk Jenari, Jeniang, Gurun, Kedah*

வாட் சாரோக் பாடாங் - **Wat Charok Padang (Glass bottle temple):**



வாட் சாரோக் பாடாங் எனப் பெயர் கொண்ட இந்த பௌத்த விகாரை கண்ணாடி பாட்டில் விகாரை என்றும் அழைக்கப்படுகிறது. இந்த பௌத்த விகாரை தாய்லாந்து பௌத்த கட்டுமானக் கலை அமைப்புடன் அமைந்தது. இது கெடா மாநிலத்தின் சிக் பகுதியில் அமைந்திருக்கின்றது. அடர்ந்த காடுகள் கொண்ட பகுதியில் நேர்த்தியாக அமைந்திருக்கும் கிராமத்துச் சாலையிலிருந்து சற்று காட்டுப்பகுதிக்குள் செல்லும் வழியில் இந்த பௌத்த விகாரை அமைந்திருக்கின்றது.

இதன் சிறப்பு வியக்கத்தக்க வகையில் ஒன்றுள்ளது. அதாவது, இங்குள்ள ஒரு விகாரையின் கூரைப் பகுதி ஒரு லட்சம் (100,000) பச்சை மற்றும் பழுப்பு நிறக் கண்ணாடி பாட்டில்களால் உருவாக்கப்பட்ட கூரை அமைப்புடன் அமைந்துள்ளது. (இதனை மேலே உள்ள புகைப்படத்தில் காணலாம்) தாய்லாந்திலும் இதேபோல கண்ணாடி பாட்டில்களில் அமைக்கப்பட்ட பௌத்த விகாரை ஒன்று உள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தச் சிறிய கண்ணாடி பாட்டில் கூரை அமைப்பு கொண்ட விகாரை மட்டுமன்றி விரிவான பெரிய 2 மாடிக் கட்டிடம் ஒன்றும் அதோடு சிறிய சிறிய வழிபாட்டுப் பகுதிகளும், போதிசத்துவர் சிலையும், பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் உருவச் சிலைகளும் இந்த பௌத்த விகாரை

*உள்ள வளாகத்திற்குள் அமைந்துள்ளன. இந்த ஆலயத்திற்கு உள்ளே மிகப் பழமையான உடைந்த படகு ஒன்றும் பாதுகாக்கப்படுகின்றது. அதன் சிறப்பு என்ன என்ற தகவல் தெரியவில்லை.*

*இந்த வளாகத்திற்குள் சீன நாட்காட்டியில் இடம்பெறுகின்ற 12 விலங்குகளின் சிறிய உருவங்களும் சிலைகளாக வடிக்கப்பட்டுள்ளன. அங்குள்ள குளத்தில் ஆமைகள் நீந்திக் கொண்டிருக்கின்றன.*

*இந்த பௌத்த விகாரை அமைந்திருக்கும் பகுதியின் முகவரி: Kampung Charok Padang, 08200 Sik, Kedah*

**தம்ம ஸ்ரீ வரராம் பௌத்த விகாரை - Wat Thammasirivararam (Wat Kura/wat Ruesee Kura):**

*இது கெடா மாநிலத்தின் சிக் வட்டாரத்தில் அமைந்திருக்கும் மேலும் ஒரு பவுத்த விகாரையாகும். முதலில் பார்த்த இரண்டு பவுத்த விகாரைகளிலிருந்து மாறுபட்ட வகையில் இந்த பௌத்த விகாரை அமைந்துள்ளது. ஆமையின் வடிவம் கோயிலின் எல்லாப் பகுதிகளிலும் ஆக்கிரமித்திருக்கிறது. விகாரையின் உள்ளே செல்லும்போது வாசலில் இரண்டு பெரிய ஆமை உருவங்கள் நிற்கின்றன. உள்ளே நுழைந்தால் ஒவ்வொரு பகுதிகளிலும் ஆமை உருவங்கள் பொன்*

வண்ணத்தால் வர்ணம் பூசப்பட்ட வகையில் காட்சி அளிக்கின்றன.



*இந்த பௌத்த விகாரை கடந்த 200 ஆண்டு காலகட்டங்களில் கட்டப்பட்ட ஒன்றாக இருக்க வேண்டும். ஆயினும் இந்தப் பகுதியில் பழைய கட்டுமானங்களில் சிதிலமடைந்த பகுதிகள் பின்புறத்தில் இன்றும் காணப்படுகின்றன. பௌத்த விகாரையில் புத்தரின் சிலை என்பதைவிட ஓர் அவலோகிதரின் பொன் வண்ணச் சிலை பிரமாண்டமான வகையில் பெரிய அளவில் அமைக்கப்பட்டுள்ளது. ஏனைய பௌத்த விகாரைகளில் தென்படும் சிறிய சிறிய பௌத்த விகாரைகள் இந்தக் கோவில் வளாகத்திலும் அமைந்திருக்கிறது. ஒரு சிறிய அறைக்குள் இளம் வயது புத்தர் நடப்பது போன்ற அழகிய பளிங்கு நிறச் சிலை ஒன்று வைக்கப்பட்டுள்ளது.*

*ஆமைகளுக்கு முக்கியத்துவம் தரும் வகையில் அமைந்திருக்கும் இந்த பௌத்த விகாரை தனித்துவத்துடன் காட்சியளிக்கிறது. இந்த விகாரை அமைந்திருக்கும் ஒரு பகுதியும் மலைகள் நிறைந்த பகுதியாக உள்ளது. முற்காலத்தில் மலைகள் நிறைந்த இப்பகுதியில் தியானம் செய்வதற்காகவும் பௌத்த நெறிகளைக் கற்பதற்காகவும் பௌத்தர்கள் வந்து தங்கிச் சென்ற இடமாக இது அமைந்திருக்கலாம். இதனை வெளிப்படுத்தும் வகையில் பெரிய கல்லூரி போன்ற ஒரு கட்டடம் ஒன்றும் இந்த வளாகத்தின் ஒரு பகுதியில் அமைந்துள்ளது.*

இந்த பௌத்த விகாரையின் முகவரி:
*Kura*
*08210, Jeniang Kedah*

**வாட் புக்கிட் பேராக் பவுத்த விகாரை (*Wat Bukit Perak / Samnak Ratchakhiri*) :**



இப்பகுதியில் சாலையில் பயணித்துக் கொண்டிருக்கும் போது இரண்டு பக்கமும் ரப்பர் தோட்டங்கள் நிறைந்திருப்பதைக் காணலாம், இது மலைப்பாங்கான ஒரு பகுதிதான். சாலையை ஒட்டியவாறு 12 ஏக்கர் நிலப்பரப்பில்

அமைந்திருக்கிறது இந்த பௌத்த விகாரை என்பது ஆச்சரியப்பட வைக்கிறது.

தாய்லாந்து வகை பவுத்த சமயத்தை அடிப்படையாகக் கொண்டது இந்த பௌத்த விகாரை. இங்கு வழிபாட்டிற்கு வருபவர்கள் தாய்லாந்து மட்டுமன்றி குறிப்பாகக் கெடா மற்றும் பினாங்கு மாநிலத்தில் வசிக்கின்ற சீன மக்கள் என்று அங்கு பேசிய போது அறிந்து கொண்டேன். வளாகம் அமைந்திருப்பது காட்டுப் பகுதி என்றாலும் சீர்படுத்தி தோட்டங்கள் உருவாக்கி அதற்குள் ஆங்காங்கே சிறிய சிறிய சன்னதி போல பௌத்த விகாரைகளை அமைத்திருக்கின்றார்கள்.

சாய்ந்து உறங்கும் நிலையில் அமைந்த புத்தரின் சிலை மற்றும் ஒரு சிறிய கோயிலில் தாரா தேவியின் சீன வடிவச் சிற்பம், ஆங்காங்கே புத்தரின் சிற்பம் மற்றும் நின்ற நிலையில் அமைந்திருக்கும் சிற்பங்கள் இங்கு அமைத்திருக்கின்றார்கள். உள்ளே பொதுமக்கள் வந்து வழிபடும் வகையில் அமர்ந்து தியானம் செய்யும் வகையிலும் தியான மண்டபமும் ஏற்படுத்தி இருக்கின்றார்கள்.

பௌத்த பிக்குகள் அங்கும் இங்கும் நடந்து கொண்டிருப்பதைக் காண முடிந்தது. ஏனைய பௌத்த விகாரைகளில் இருப்பது போல யானை, புலி போன்ற

வடிவங்களுடன் குரங்கின் சிற்பமும் இங்கே புத்தர் சிலைகளோடு இணைந்த வகையில் அமைக்கப்பட்டுள்ளன.

இந்த பௌத்த விகாரையின் முகவரி:
*K 556, Kampung Gajah Putih, 08210 Sik, Kedah, Malaysia*

**வாட் விசுத்திப்ரதராம் (*Wat Visuthipradittharam*) பௌத்த விகாரை:**



*இந்த பௌத்த விகாரையின் வரலாற்றைப் பற்றி இணையத்திலும் கோவில் வளாகத்திலும் தேடிப்பார்த்தேன். ஆனால் தகவல்கள் கிட்டவில்லை. ஓர் ஆய்வுக் கட்டுரை மட்டும் கெடா மாநில பௌத்த விகாரைகளின் பட்டியலில் இந்த விகாரையின் பெயரையும் இணைத்து வழங்கியிருக்கிறது. மேலும் ஒரு கட்டுரை இந்த பௌத்த விகாரை கெடாவில் இருக்கும் அனைத்துப் பௌத்த விகாரைகளிலும் மிகப்பெரியது என்று குறிப்பிடுகிறது. விகாரையின் வளாகத்தில் அமைந்திருக்கும் பள்ளி மிகப்பெரிய வடிவில் அமைக்கப்பட்டிருப்பது இதற்குக் காரணமாக இருக்கலாம்.*

*ஆனால் இந்த விகாரை அமைந்திருக்கும் நிலப்பகுதியின் சுற்றளவு நான் நேரில் சென்று பார்த்த ஏனைய விகாரைகளுடன் ஒப்பிடும்போது பள்ளி அமைந்திருக்கும் நிலப்பகுதி அவ்வளவு பெரிதாக இல்லை என்றே எனக்குத் தோன்றியது. கோயிலின் அமைப்பு தாய்லாந்து பவுத்த விகாரை கட்டுமான பாணியில் அமைந்துள்ளது. பௌத்த பள்ளியின் சன்னிதிகள், மைய விகாரையைச் சுற்றி ஆங்காங்கே அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பௌத்த விகாரையில் தினமும் வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன என்பதற்குச் சான்றாக ஆங்காங்கே பவுத்த பிக்குகள் நடந்து கொண்டிருப்பதைக் காண முடிந்தது. நான் சென்றிருந்த நேரம் நன்பகல் 12:00 மணி என்பதால் பௌத்த பிக்குகள்*

மதிய உணவிற்காக அவர்கள் இருப்பிடம் சென்று கொண்டிருந்தார்கள். ஒரு பௌத்த பிக்கு நான் கோயில் பகுதிக்குச் செல்லும் பொழுது எனக்கு கோயிலின் கதவைத் திறந்து விட்டு மலாய் மொழியில் உள்ளே சென்று என்னை வழிபடச் சொல்லிவிட்டு அவர் தங்குமிடம் சென்றுவிட்டார்.

இந்தப் பௌத்த விகாரையில் மிகப் பெரிய வடிவிலான நாக வடிவம் வாயில் பகுதியில் இரண்டு புறங்களிலும் அமைக்கப்பட்டுள்ளன. மூன்று தலைகள் மற்றும் ஏழு தலைகள் கொண்ட நாகத்தின் வடிவம் அங்கே வைக்கப்பட்டுள்ளன. இதே வகை உருவ அமைப்பில் புத்தரின் தலைப் பகுதியைச் சுற்றி பாதுகாக்கும் வகையில் ஏழு தலை நாகம் இருக்கும் சிற்பங்களை மலேசியா, தாய்லாந்து பகுதிகளில் நான் பல பௌத்த விகாரைகளில் பார்த்திருக்கின்றேன்.

புத்தர் தனது அரசைத் துறந்து ஞானம் பெற பல்வேறு பகுதிகளுக்குச் சென்ற போது அவருக்கு ஆதரவு அளித்தவர்கள் நாகர்கள் என்ற கருத்து உண்டு. நாகர்கள் இனம் பண்டைய இந்தியாவின் பூர்வ குடி இனம் என்பது மட்டுமன்றி இலங்கையின் பூர்வ குடி இனம் என்பதையும் நாம் கருத்தில் கொள்ளலாம். அதில் குறிப்பாக ஏழு தலை நாகம் எனும் உருவ அமைப்பு நாகர்களில் ஏழு வகை குழுக்கள் புத்தருக்கு ஆதரவு வழங்கி இருக்கலாம் என்ற எண்ணத்திற்கு

வாய்ப்பளிக்கிறது. நாகர்கள் இனத்தைப் பிரதிபலிக்கும் வகையில் ஏழு தலை நாகம் என்ற உருவகம் நாளடைவில் புத்தர் சிலைகளில் இணைக்கப்பட்ட வகையில் உருவாக்கப்பட்டிருக்கலாம். இந்த உருவ அமைப்பை மானுடவியல் பார்வையில் வரலாற்றுக் கோணத்தில் ஆய்வு செய்வது தேவையாகின்றது.

இந்தப் பௌத்த விகாரையின் நுழைவாயில், சன்னதிகள், மையக் கோயில் என அனைத்துமே பிரமாண்டமான வகையில் அமைக்கப்பட்டிருக்கின்றன. கெடா மாநிலத்தின் இன்றும் வழிபாட்டில் இருக்கக்கூடிய முக்கிய பௌத்த விகாரையின் பட்டியலில் இந்தக் கோயிலும் இடம் பெறுகின்றது.

இந்த பௌத்த விகாரையின் முகவரி:
*Wat Visuthipradittharam*
*Kg.Titi Akar Mk.Padang, Kerbau Jln Sg. Tiang Pendang, Kedah*

**வாட் சுக்தோர்ப்ரன்சாராம் பௌத்த விகாரை (Wat Sukthornprakcharam):**

பௌத்த விகாரை மற்றும் பள்ளி அமைந்திருக்கும் வளாகம். இது ஒரு கலைப் பூங்கா போன்று அமைக்கப்பட்டுள்ளது. நுழைவாயில் நேர்த்தியாகக் கலை நுணுக்கத்துடன்

*உருவாக்கப்பட்டுள்ளது. மலாய் மொழியில் Selamat Datang, அதாவது நல்வரவு என்று எழுதப்பட்டு அதன் கீழ் பௌத்த விகாரையின் பெயர் வழங்கப்பட்டுள்ளது.*



*உள்ளே நுழைந்து வளாகத்தின் உள்ளே செல்லும்போது முதலில் நமக்குத் தென்படுவது ஏழு கிழமைகளுக்கும் ஏழுவகை புத்தரின் சிற்பங்கள். திங்கள் தொடங்கி ஞாயிறு வரை என ஒவ்வொரு நாளையும் குறிப்பிட்டு அதற்கேற்ற வகையில் ஓர் உருவத்தை அமைத்திருக்கின்றார்கள். ஒரு குன்றின் மேல் அமைந்தது போல இந்தக் கோவில் வளாகம்*

இருக்கின்றது. படிகளில் ஏறிச் சென்றால் வலது புறமும் இடது புறமும் எனச் சிறிய சிறிய சன்னிதிகள் உள்ளன. ஒரு பகுதியில் 4 தலைகளுடன் பிரம்மாவின் உருவம் அமைக்கப்பட்ட சிற்பம் உள்ளது. மற்றும் ஒரு சன்னிதியில் போதிசத்துவருக்கான உருவச்சிலை அமைந்திருக்கின்றது. ஏனைய சன்னிதிகளில் புத்தரின் பல்வேறு வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இவற்றைக் கடந்து குன்றின் உச்சிப் பகுதிக்குச் சென்றால் அங்கே சாய்ந்த நிலையில் சயன புத்தரின் உருவச்சிலை அமைக்கப்பட்டுள்ளது. இதே போன்றதொரு உருவச்சிலை, ஆனால் மிகப் பிரம்மாண்டமான வகையில் பினாங்கு மாநிலத்தில் இருக்கின்றது.

இந்தப் பகுதியிலிருந்து இறங்கி இடது புறமாக மேலும் நடந்தால் அங்குப் பூங்கா மேலும் விரிவாக்கப்பட்டுள்ளதைக் காணலாம். முதலில் வருவது மிக அழகிய வடிவில் அமைக்கப்பட்ட ஒரு சன்னிதி. இதில் புத்தர் தனது சீடர்களுக்கு ஞானம் வழங்குவது போலும், கீழே தரையில் சீடர்கள் அமர்ந்திருப்பது போலும் சிற்பங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. இப்பகுதிக்கு வரும் அனைவரையும் இங்கே அமர்ந்திருந்து தியானம் செய்யும் வகையில் ஆர்வத்தை ஏற்படுத்தும் வகையில் இந்தப் பகுதி அமைக்கப்பட்டுள்ளது. இதனைக் கடந்து வரும்போது ஆங்காங்கே விலங்குகளின் சிற்பங்கள் தென்படுகின்றன.

அதற்கடுத்து கீழே வரும்போது அழகான ஒரு குளத்தின் நடுவே தாராதேவி நின்ற நிலையில் அருள்பாலிப்பது போல அமைக்கப்பட்டுள்ளது. அதற்குக் கீழே வரும்போது புத்தரின் அன்னை மற்றும் அவரது தோழியர் சூழ நிற்கும் சிற்ப வடிவங்கள் அமைக்கப்பட்டுள்ளன. பெண் வடிவங்கள் சேலை அணிந்த வகையில் இந்தச் சிற்பங்கள் அமைக்கப்பட்டுள்ளன. இறுதியாக நாம் காண்பது ஒரு சிற்பம். இது குதிரை ஒன்று பின்புறத்தில் நிற்க புத்தர் தனது தலைமுடியை இழுத்து கத்தியால் வெட்டுவது போல ஒரு காட்சி.

இவற்றையெல்லாம் கடந்து வந்தால் பவுத்த பள்ளி அமைந்திருக்கும் இடத்திற்கு வரலாம். இப்பகுதி வழிபாடுகளும், தியான நிகழ்ச்சிகளும் நடைபெறும் வகையில் அமைக்கப்பட்டுள்ளன. இந்தப் பௌத்த விகாரைக்கு வாசல் புறத்தில் வழங்கப்பட்டுள்ள பெயரைக் குறிப்பிட்டு நான் இணையத்தில் தகவல் தேடியபோது எந்தத் தகவலும் கிடைக்கவில்லை. இந்த பௌத்த விகாரை மட்டுமல்ல... மேலும் சில பௌத்த விகாரைகளின் தகவல்களும் இணையத்தில் கிடைக்கும் வகையில் இல்லை. நேரடியாகச் சென்று அவற்றைக் காணும் போதுதான் இத்தனை பௌத்த விகாரைகள் இந்தப் பகுதியில் இருக்கின்றன என்பதை அறிந்து கொள்ள முடிகின்றது.

இந்த பௌத்த விகாரையின் முகவரி:
*Kg. Tong Prok, Mk, 06750 Pendang, Kedah, Malaysia.*

முடிவுரை:



வரலாற்றில் ஆர்வம் கொண்ட நம்மில் பலருக்குக் கிழக்காசியா மற்றும் தூரக் கிழக்காசிய நாடுகளின் வரலாற்றை அறிந்து கொள்வதில் அவ்வளவாக ஆர்வம் இருப்பதில்லை. தமிழ்நாட்டின் வரலாறு என்பது

தமிழ்நாட்டிற்குள் மட்டுமே அடங்கவில்லை. உலகளாவிய அளவில், அதிலும் குறிப்பாக, கிழக்காசிய நாடுகளுடன் தமிழ்நாட்டிற்கு இருந்த, இருக்கின்ற தொடர்புகள் என்பவை மிக முக்கியமானவை. மலேசியாவின் கெடா மாநிலத்தில் உள்ள பௌத்த விகாரைகளைப் பற்றி புகைப்படங்களுடன் பகிர்ந்திருந்தேன். இணையத்தில் மேலும் தேடியபோது கெடா மாநிலத்திற்கும் தாய்லாந்துக்கும் உள்ள தொடர்பு பற்றிய மேலும் சில செய்திகள் கிட்டின.

மலேசியாவின் கெடா மாநிலத்தில் இன்றைய கணக்குப்படி ஏறக்குறைய 37 பௌத்த விகாரைகள் இருக்கின்றன. கெடா மாநிலம் மலேசியாவின் 13 மாநிலங்களில் ஒன்று என்பதோடு பண்டைய ஸ்ரீவிஜயப் பேரரசு அதன் தலைநகராகக் கடாரத்தைக் கொண்டிருந்த ஒரு நிலப்பகுதி என்பதும் குறிப்பிடத்தக்கது. இப்பகுதி மிக முக்கியம் வாய்ந்த துறைமுகப் பகுதியாகவும் பண்டைய காலத்தில் இருந்தது.

இந்தியாவிலிருந்து, குறிப்பாக காஞ்சிபுரம், நாகப்பட்டினம் பகுதியிலிருந்து கடல் வழிப் பயணம் செய்து கிழக்காசிய நாடுகளுக்கு வந்த பௌத்த பிக்குகளும், பௌத்தத்தைத் தழுவிய வணிகர்களும் இப்பகுதிகளில் பௌத்தம் மிக ஆழமாக வேரூன்றி வளர அடிப்படையை உருவாக்கியிருந்தனர்.

*காலப்போக்கில் அரசியல், சமய மாற்றங்கள் நிகழ்ந்தாலும் இன்று இப்பகுதியில் வாழும் தமிழர்களை விட சீனர்களும், தாய்லாந்து சயாமிய மக்களும் இப்பகுதியில் பௌத்த சமயத்தைப் பின்பற்றுபவர்களாக அமைகின்றனர்.*

*இன்று கெடா மாநிலம் மலேசியாவின் 13 மாநிலங்களில் ஒன்றாக அரசியலமைப்புச் சட்டத்தின் படி அமைந்துள்ளது. ஆயினும் வரலாற்றில் பின்னோக்கிப் பார்க்கும்போது தாய்லாந்து, அதாவது பண்டைய சயாம் நாட்டுடன் நீண்ட தொடர்பு கொண்ட நிலப்பகுதியாக அமைந்தது என்று கூற வேண்டும். இப்பகுதியில் ஆட்சி அமைத்திருந்த பண்டைய பேரரசனான பூஃனான், ஶ்ரீ விஜயா போன்ற பேரரசுகள் பௌத்த சமயத்தை அடிப்படையாகக் கொண்ட பேரரசுகள் ஆகும். இவற்றின் காலம் கிபி 11 வரை எனக் கூறலாம். இதன் பின்னர் ராஜேந்திர சோழனின் படை எடுப்பு இப்பகுதியில் நிகழ்ந்த பின்னர் மலாய் சிற்றரசர்கள் இப்பகுதியை ஆட்சி செய்து வந்தனர்.*

*அரேபிய இஸ்லாமிய வணிகர்களின் வருகை இப்பகுதியில் படிப்படியாக இஸ்லாமிய மதம் பரவுவதற்கு வாய்ப்பாக அமைந்தது. இதன் தொடர்ச்சியாக கி.பி. 15ஆம் நூற்றாண்டு வாக்கில் இப்பகுதி தொடக்கம், மலாக்கா, தீபகற்ப மலேசியா ஆகிய பகுதிகள் முழுமையாக இஸ்லாமிய மதத்தைத் தழுவிய வகையில் இஸ்லாமிய நாடாக சமய அடிப்படையில்*

*மாற்றம் பெற்றது. இத்தகைய சமய பண்பாட்டு மாற்றம் நிகழ்ந்த போதிலும் கூட கெடா மாநிலத்திற்கும் தாய்லாந்திற்கும் உள்ள தொடர்பு என்பது இன்றும் தொடர்கின்றது. கெடா மாநிலத்தின் ஒரு பகுதி தாய்லாந்தில் எல்லையாகவும் அமைகிறது.*

*1909ஆம் ஆண்டு Anglo-Siam Treaty என்ற ஒப்பந்தத்தின் அடிப்படையில் இன்று நாம் காண்கின்ற பிரித்தானிய மலாயாவிற்கும் தாய்லாந்து நாட்டிற்குமான எல்லை பிரிவு ஏற்படுத்தப்பட்டது. Satun பகுதி மலையாவிற்கும், Patani பகுதி சயாம் நாட்டிற்கும் எனப் பிரிக்கப்பட்டன. எல்லைப் பகுதியில் வாழ்ந்த சயாமிய மக்கள் தனித்துவத்துடன் கூடிய பண்பாட்டுக் கூறுகளைக் கொண்டவர்களாகத் தொடர்கின்றனர்.*

*இன்றும் கூட தாய்மொழியை(தாய்லாந்து மொழி) இப்பகுதி மக்கள் ஓரளவிற்கு இயல்பாகப் பேசுகின்றனர். தாய் மொழியைப் பேசுகின்ற இம்மக்களை சாம்சாம்ஸ் (The Samsams) என்று அழைக்கின்றனர். இவர்களில் சிலர் இஸ்லாமியர்களாகவும், இங்கு பெரும்பான்மையோர் பௌத்தத்தைத் தொடர்ந்து தங்கள் சமயமாகக் கொண்டிருப்பவர்களாகவும், அதிலும் குறிப்பாக, தேரவாத பௌத்தத்தைத் தொடர்பவர்களாகவும் அமைகின்றனர். இந்த சாம்சாம்ஸ் இனத்தவர்கள் பற்றிய எண்ணிக்கை தகவல்கள்*

*1911ஆம் ஆண்டு மக்கள் தொகை கணக்கெடுப்பில் இடம் பெற்றுள்ளது என்பது குறிப்பிடத்தக்கது.*

*The Siamese in Kedah under nation state making (Keiko Kuruda, Kagoshima University) என்ற கட்டுரை 1892 ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி அன்றைய கெடா மாநில சுல்தானாக இருந்த சுல்தான் அப்துல் ஹமீத் அவர்களது கடிதங்களின் வழி பென்டாங் பகுதியில் 13 பௌத்த விகாரைகள் இருந்ததாகவும் அதில் வாட் லம்டின் விகாரையில் மட்டும் 22 பௌத்த பிக்குகள் பதிவு செய்திருந்தார்கள் என்ற தகவலையும் வழங்குகிறது. இதே கட்டுரை 1974-ஆம் ஆண்டு அறிக்கையின்படி கெடா மாநிலத்தில் மட்டுமே 26 பௌத்த விகாரைகள் இருந்ததாகவும் 27 கிராமங்கள் இருந்ததாகவும், அதில் ஏறக்குறைய 3500 குடும்பத்தினர் இருந்ததாகக் குறிப்பிடுகிறது.*

*கெடா மாநிலத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் பவுத்த விகாரைகள் இன்று புதிய கட்டிடங்களில் அழகுறத் திகழ்கின்றன. ஆனால் இவை நீண்ட நெடிய வரலாற்றைக் கொண்டவை. ஆயிரம் ஆண்டுகளுக்கு மேற்பட்ட பௌத்த விகாரைகள் இவை. பண்டைய பேரரசுகளின் அரச சமயமாக பௌத்தம் இருந்த காலத்தில் உருவாக்கப்பட்ட விகாரைகளின் எச்சத்தின் தொடர்ச்சி. பழைய கட்டுமானப் பகுதி சிதிலம் அடையும்போது புதிய கட்டுமானங்களை*

*உருவாக்கி வழிபாட்டையும் பண்பாட்டுத் தொடர்ச்சியையும் பாதுகாத்து வருகின்றனர் இப்பகுதி மக்கள்.*

*கெடா மாநிலத்து சயாம் பௌத்த பின்னணி கொண்ட மக்கள் பினாங்கு மாநிலத்தில் உள்ள பௌத்த சங்கத்திலும் தொடர்பு வைத்திருக்கிறார்கள். முக்கிய ஆண்டு விழாக்கள், பண்டிகைகள் நிகழும்போது பினாங்கிலிருந்து பெருவாரியாக மக்கள் வழிபாட்டிற்கு வருகிறார்கள் என்பதையும் அறியமுடிகிறது.*

*பௌத்தம் கி.பி. 1, 2 ஆகிய காலகட்டங்களில் இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் இருந்தும் குறிப்பாக காஞ்சிபுரம், நாகப்பட்டினம் பகுதியில் இருந்தும் கடல்வழி பயணித்த வணிகர்கள் மற்றும் பௌத்த பிக்குகளின் முயற்சிகளினால் கிழக்காசியா மற்றும் தூரக் கிழக்காசிய நாடுகளுக்குப் பரவியது. புதிதாகப் பரவிய நிலத்தில் அவை மேலும் அந்தந்த நிலத்திற்கு ஏற்ற பண்பாட்டுக் கூறுகளை ஏற்றுக்கொண்டு வழிபாடுகளில் மேலும் சில புதுமைகளைப் புகுத்திக் கொண்ட வகையில் மாற்றம் கண்டன. மாற்றங்கள் உட்புகுந்தன என்றாலும்கூட பழமையான பௌத்தப் பள்ளிகள் புதுப்பிக்கப்பட்டு வழிவழியாக வழிபாடு செய்யப்பட்ட பகுதிகளில் வழிபாடுகள் தொடர்வதைக் கிழக்காசிய நாடுகளில் பல்வேறு பகுதிகளிலும் இன்றும் காணமுடிகிறது.*

மலாயா மலேசியாவாக மாறிய பின்னரும் கூட அரச சமயமாக இஸ்லாமிய சமயம் முக்கியத்துவம் பெற்ற பின்னரும் கூட மலேசியாவின் பல்வேறு பகுதிகளில் பௌத்த விகாரைகள் நிறைந்திருக்கின்றன என்பது புலப்படுகிறது. பௌத்த விகாரைகள் சீனர்களுக்கும் தாய்லாந்து மக்களுக்கும் உரிய வழிபாட்டுத்தலங்கள் தானே என ஒதுக்கி விடாமல் தமிழ் மரபு மற்றும் பண்பாட்டின் தொடர்ச்சி என்ற ரீதியில் இவற்றைத் தொடர்ச்சியாக ஆராய்ச்சி செய்து அவற்றின் வரலாற்றுப் பின்னணிகளைத் தேடவேண்டிய அவசியம் இருக்கிறது. இத்தகைய தேடுதல்கள் நமக்கு மேலும் சில புதிய தரவுகளை வழங்கக் கூடிய வாய்ப்பும் உள்ளது.

முற்றும்

# 5. வீரமங்கை வேலு நாச்சியார் கல்வெட்டு

— கடலூர் சுந்தரராஜன்

*தமிழகத்தில் சிவகங்கை சமஸ்தானத்தின் ஆட்சிப் பொறுப்பினை தனது கணவரான முத்துவடுகனாதரின் மறைவிற்குப் பின்னர் வேலுநாச்சியார் கவனித்துக் கொண்டார். மன்னர் இறந்ததினால் குழப்பநிலை ஆங்கில ஏகாதிபத்தியத்தின் நெருக்கடி போன்ற நிலைகளைச் சமாளித்து மருதுபாண்டியர் மந்திரி தாண்டவராயப் பிள்ளை ஆகியோரின் துணையோடு1776 வரை ஆட்சி செய்தார்.*

*வேலுநாச்சியார் காலக் கல்வெட்டு ஒன்று சிவகங்கை நகருக்கு அருகில் உள்ள சக்கந்தி என்ற ஊரில் பிள்ளையார் கோவிலில் கண்டறியப்பட்டு சிவகங்கை அரசு அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது.*

*ஸ்ரீ சக்கந்தி அய்யா முத்து*
*வடுகனாத தேவரய்யா அவர்கள்*
*பாரியாள் வேலு நாச்சி*
*யாரவர்கள் உபயம்*





சிவகங்கை ராணி சக்கந்தியில் உள்ள பிள்ளையார் கோயிலுக்கு உபயமாக செய்ததன் நினைவாக இக்கல்வெட்டு வெளியிடப்பட்டிருக்கலாம். இந்தியாவின் விடுதலைப்

போராட்டத்திற்கு எனக் குரல்கொடுத்த முதல் தமிழ் பெண்ணரசி சிவகங்கை ராணி வேலுநாச்சியாரின் தமிழ்க் கல்வெட்டு வெளியிட்ட கல்வெட்டு என்பது இதன் சிறப்பு.





வீர மங்கை வேலு நாச்சியார் கல்வெட்டு கண்டுபிடிக்கப்பட்டுக் கொண்டு வரப்பட்ட விதம்:
அருங்காட்சியகம் சிவகங்கை நகரில் தொடங்க ஆயத்தப் பணிகள் நடைபெற்று வந்த காலம், ஆண்டு 1997-98. இருக்கை கூட இல்லா நிலையில் தமிழ் வளர்ச்சித் துறை அலுவலர் அலுவலக மேசையில் ஒரு நாற்காலி ஒரு மரப்பெட்டி உடன் ஒண்டு குடித்தனம் தொடங்கிய காலகட்டம். சிவகங்கை மாவட்ட ஆட்சியர் அலுவலகக் கட்டடம் வட்ட வடிவில் இருக்கும். தமிழ் வளர்ச்சி அலுவலகம் எதிரே சமூக நலத்துறை இருந்தது. அங்கே பாலு என்ற இளைஞர் பணிபுரிந்தார். "சார், எங்கள் ஊர் சக்கந்தி, அது வேலு நாச்சியார் பிறந்து வளர்ந்த ஊர். நீங்கள் வந்தால் நன்றாக இருக்கும்," என்றார்.

எனது வெள்ளை நிற ஸ்கூட்டியில் பாலுவுடன் பத்துக் கிலோமீட்டர் பயணித்து சக்கந்தி கிராமத்தை அடைந்த போது சூரியன் கோபம் கொண்டு மேற்கில் கருமேகங்கள் இடையே ஓடத் தொடங்கினான். இது தான் பிள்ளையார் கோயில் என்றார் பாலு. ஒரு கருவறை மற்றும் மண்டபத்துடன் கூடிய அமைப்பு. கோயில் உள்ளே செல்ல ஒன்றே கால் அடி நீளம் ஓர் அடி நீளம் முக்கால் அடி உயரம் கொண்ட படிக்கட்டுக் கல் இருந்தது. "பாலு இந்தக் கலை திருப்பிக் கவிழ்த்துப் போட முடியுமா?" என்றேன். உதவிக்கு எங்கிருந்தோ கடப்பாரை உடன் வந்த தன்னார்வலர் திருப்பிப் போட்டபோது அதில்

எழுத்துக்கள் இருப்பது தெரிந்தது. அதை கோவை இலை போட்டுத் தேய்த்த பின்தான் படிக்க முடிந்தது.

அந்த கல்வெட்டில் "ஸ்ரீ சக்கந்தி அய்யா முத்து வடுகத் தேவரய்யா பாரியாள் வேலு நாச்சியார் உபயம்" என்ற வரிகள் இருந்தது இன்றும் பசுமையாக என் நினைவில் உள்ளது. பாலு என்று அழைத்து சற்றே புருவம் உயர்த்தினேன். உடனே பாலு "அந்தக் கல்லை சார் ஸ்கூட்டில வைங்க" என்றார்.

மாலை சூரியன் தொடுவானத்தைத் தொட்டு விடத் துடித்தான். என் ஸ்கூட்டி புகை கக்கிப் புறப்படும் போது, "சார், வழியில் காட்டு மாடு இருக்கும் பார்த்து போங்க என்றார்". "காட்டு மாடென்றால்??!!" என்று இழுத்தேன்.அது வீட்டில் வளர்க்கும் மாடுதான், காட்டில் தங்கிவிட்டால் காட்டு மாடாக மாறி மனிதர்களையும் முட்டித் தாக்கும்" என்றார். காட்டு மாடு பயத்துடன் சிவகங்கை வந்து அடைந்தேன். மாவட்ட ஆட்சியரிடம் கல்வெட்டு செய்தியைத் தெரிவித்த போது, "பரவாயில்லையே!!! மியூசியமே திறக்கவில்லை அதற்குள் கல்வெட்டு சேர்த்து விட்டீர்களே," என்றார்.

[ந. சுந்தரராஜன் காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம், கடலூர் - 1]

# 6. மேக்களூரில் யானையின் நினைவாக வைக்கப்பட்ட சிற்பக் கல்வெட்டு

— ச.பாலமுருகன்

*திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவத்தைச் சேர்ந்த பாலமுருகன் குழுவினர் கீழ்பெண்ணாத்தூர் அருகே மேக்களூர் நவநீதக் கோபால கிருஷ்ணசாமி கோவிலில் யானையின் நினைவாக வைக்கப்பட்ட சிற்பமும், கல்வெட்டும், கீக்களூர் கோவிலில் சம்புவராயர் கால கல்வெட்டும் கண்டறிந்தனர்.*



மேக்களூர் கோவிலில் உள்ள யானைச்சிற்பம் 4 அடி உயரமும், 2 அடி அகலமும் உள்ள கல்லின் மேல் பகுதியில் பாதி வட்டமாகவும் கீழ்ப்பகுதி நீளமாகவும் உள்ளது. மேல் பகுதியில் உள்ள வட்டத்தில் யானையின் உருவம் தனது தும்பிக்கையை மடக்கிய நிலையில் பொறிக்கப்பட்டுள்ளது. கல்லில் உள்ள யானையின் கீழ் யானையின் பெயரை தனியாக ஒரு வரியில் கோடிட்டு எழுதப்பட்டுள்ளது. இதற்குக் கீழ் 5 வரியில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டு உள்ளது.



இக்கல்வெட்டைப் படித்த கல்வெட்டு அறிஞர் சு.ராஜகோபால், இந்த யானை சிற்பத்தின் கீழ் உள்ள கல்வெட்டில், ஸ்ரீபுத்தன் புவந திவாகரன் என்பவர் இந்தப் பட்டத்து யானைக்கு நீலகண்டரையன் என்று பெயர் கொடுத்துள்ளான். இது 10 அல்லது 11-ம் நூற்றாண்டைச்

*சேர்ந்ததாகலாம். யானையின் உருவம் பொறித்து அதன் கீழ் நீலகண்ட ரையன் என்று எழுதப் பட்டுள்ளது. இது திருவண்ணாமலை பகுதியில் கிடைக்கும் அரிய வகைக் கல்வெட்டாக வரலாற்று ஆய்வாளர்கள் கருதுகின்றனர்.*

*அதேபோல் கீக்களூர் சிவன் கோவிலில் கருவறையின் பின்புறம் உள்ள சுவரில் 13-ம் நூற்றாண்டைச் சேர்ந்த ராஜநாராயண சம்புவராயரின் 2 நிலதானக்கல்வெட்டுகள் உள்ளன. இக்கல்வெட்டுகள் சிமெண்ட் பூச்சுகளால் முழுமையற்று உள்ளன. இவ்வாறு அவர்கள் தெரிவித்தனர்.*

*– ச.பாலமுருகன், திருவண்ணாமலை மாவட்ட வரலாற்று ஆய்வு நடுவம்*

## 7. திரைகடலோடிய தொல் தமிழர்கள்

— முனைவர் சு.ராஜவேலு

*இந்தியா, ஒவ்வொரு ஆண்டும் ஏப்ரல் 5 அன்று 'தேசியக் கடல்வழி நாள்' கொண்டாடிவருகிறது. 1919-ல் இதே நாளில் இந்தியாவின் சிந்தியா ஸ்டீம் நேவிகேஷன் என்ற நிறுவனம் தயாரித்த 'எஸ்.எஸ்.லாயல்டி' என்ற கப்பல் முதன்முதலாக மும்பையிலிருந்து இங்கிலாந்துக்கு இயக்கப்பட்டதன் நினைவாக, இந்த நாள் கடல்வழி நாளாகக் கொண்டாடப்படுகிறது. ஆனால், நமது முன்னோர்கள் ஏறக்குறைய 5,000 ஆண்டுகளுக்கும் முன்பாகவே பெரும் மரக்கலங்களில் கடல் கடந்து சென்று கடல்வழிப் பயணம் மேற்கொண்டனர் என்பதைத் தொல்லியல் ஆய்வுகள் மூலம் அறிய முடிகிறது.*

திராவிட நாகரிகம் எனக் கருதப்படும் சிந்துவெளி நாகரிகத்தில் வாழ்ந்த மக்கள், மிகச் சிறந்த கடலோடிகளாக விளங்கினர். குஜராத் பகுதியில் லோத்தல் என்ற இடம் பெரும் துறைமுகமாக அக்காலத்தில் விளங்கியது. இதனை அகழாய்வு செய்த தொல்லியல் அறிஞர் எஸ்.ஆர்.ராவ், இவ்வூரில் கப்பல் தளம் ஒன்றைக் கண்டறிந்து, சிந்துவெளி

மக்கள் அயல்நாடுகளுடன் கடல் வணிகத்தில் ஈடுபட்டிருந்தனர் என்பதை அறிவித்தார்.



மொகஞ்சதாரோவில் கிடைத்த முத்திரை ஒன்றில், கப்பலின் உருவம் பொறிக்கப்பட்டிருந்ததும் இதை உறுதிசெய்கிறது. ஆனால், நமது பாட நூல்களில் உலகத்தில் கடல் வழியைக் கண்டுபிடித்தவர்கள் 16-ம் நூற்றாண்டைச் சார்ந்த மாலுமிகளான வாஸ்கோடகாமா, அமெரிக்கோ வெஸ்புகி, பார்த்தலோமியா டையஸ், கொலம்பஸ் ஆகியோர்தான் என்று மாணவர்களுக்கு ஆங்கிலேயர்கள் வகுத்துத் தந்த

பாடத்திட்டங்களையே இன்னும் நாம் பள்ளியில் கற்பித்துக் கொண்டிருக்கிறோம்.



A seal and a terracotta amulet from Mohenjo-Daro depict ship with cabin and birds S. Tripati

கடல்களால் சூழப்பட்ட பண்டைத் தமிழக நிலப் பகுதிகள் சேர, சோழ, பாண்டிய அரசுகளின் ஆட்சியின் கீழ் இருந்தன. அவர்கள் கடல்வழிப் பயணத்தையும் கடல் வணிகத்தையும் ஊக்கப்படுத்தினர். முசிறி, காவிரிப்பூம்பட்டினம், கொற்கை போன்ற பெரிய துறைமுகங்களும் பல சிறிய

துறைமுகங்களும் சங்க காலத்தில் இருந்தன. இத்துறைமுகங்களுக்கு வெளிநாட்டு வணிகர்கள் வந்தனர். உள்நாட்டிலிருந்து தமிழ் வணிகர்கள் மேலை மத்தியத் தரைக்கடல் நாடுகளுக்கும் கிழக்காசிய நாடுகளுக்கும் குழுக்களாகச் சென்றுள்ளனர்.



அழகன்குளம் அகழாய்வில் கிடைத்த சங்ககால கப்பலின் பொறிப்பு உள்ள பானைஓடு

திசையாயிரத்து ஐந்நூற்றுவர், மணிக்கிராமத்தார், நாணதேசிகள், அய்யப்பொழில், அஞ்சுவண்ணம் என இவர்கள் வழங்கப்பட்டனர். மதுரைக்கு அருகில் உள்ள மாங்குளம் என்ற இடத்தில் கிடைத்துள்ள பொ.ஆ.மு. 6-ம் நூற்றாண்டைச் சார்ந்த தமிழிக் கல்வெட்டில் ‘கடலன் வழுதி நெடுஞ்செழியன்’ என்ற பெயர் காணப்படுகிறது. எனவே,

பாண்டியர்கள் கடலோடிகளாக அக்காலத்தில் விளங்கினர் என்பதை அறிந்துகொள்ள முடிகிறது. சிவகங்கை மாவட்டத்தில் பூலாங்குறிச்சி என்ற இடத்தில் பொ.ஆ. 3-ம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகளில் 'கடலகப் பெரும்படைத் தலைவன்' என்ற பெயர் காணப்படுகிறது. கடலில் தனது ஆதிக்கத்தைச் செலுத்திய பெரும் படைத் தலைவரை இது குறிக்கிறது.

சேரர்களின் முசிறித் துறைமுகத்திலிருந்து பெரும் கப்பல்களில் பல பொருட்களைத் தமிழர்கள் ஏற்றுமதி செய்து ஆப்பிரிக்க நாடுகளின் கிழக்குப் பகுதியில் செங்கடலை ஒட்டி இருந்த துறைமுகங்களான பெரினிகே, குசிர்-அல்-குதாம் ஆகிய துறைமுகங்களுக்கு ஏற்றிச் சென்றனர். காற்றின் போக்குக்கேற்பத் திசை அறிந்து, பல கலங்களைத் தமிழர்கள் செலுத்தினர். கடல் கொள்ளையர்களின் அச்சுறுத்தலும் அக்காலத்தில் இருந்துள்ளன. சேர மன்னன் செங்கோட்டு வேலன் இக்கடல் கொள்ளையர்களை அழித்து 'கடல்பிறகோட்டிய செங்கோட்டு வேலன்' என்ற பட்டம் பெற்றான்.

முசிறியிலிருந்து சென்ற தமிழ் வணிகர் ஒருவர், செங்கடல் பகுதியில் இருந்த தனவந்தர்களிடம் தனது வணிகத்துக்காகப் பெருமளவில் கடன் பெற்ற செய்தி ஒன்றை கிரேக்க மொழியில் எழுதப்பட்ட ஆவணம் ஒன்று குறிப்பிடுகிறது. இது தற்போது

அலெக்சாண்டிரியா அருங்காட்சியகத்தில் உள்ளது. முசிறியிலிருந்து ஹெர்மபோலிஸ் என்ற கப்பலில் ஏற்றுமதி செய்யப்பட்ட பொருட்கள் பட்டியலிடப்பட்டுள்ளன. இன்றைய மதிப்பில் அச்சரக்குகள் மூன்று பெரிய கப்பல்களில் ஏற்றக் கூடியவை என ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.



முசிறி பாப்பிரஸ் வணிக ஒப்பந்த ஆவணம்

செங்கடலை ஒட்டி இருந்த குசிர்-அல்-குதாம், பெரினிகே துறைமுகங்களில் தமிழகக் கப்பல்கள் நங்கூரமிட்டு, அத்துறைமுகங்களிலிருந்து நில வழியாக ஆப்பிரிக்காவின் உள்பகுதிக்கு ஒட்டகங்கள் மூலமாகப் பயணப்பட்டு, நைல் நதியில் இருந்த துறைமுகத்தை அடைந்தன. சூயஸ் கால்வாய் வெட்டப்படாத அக்காலத்தில், நைல் நதி வழியாகப்

பெருங்கப்பல்கள் தமிழகத்தின் சரக்குகளை ஏற்றிக்கொண்டு, மத்தியத் தரைக்கடல் பகுதியில் இருந்த அலெக்சாண்டிரியாவைச் சென்றடையும். இச்சரக்குகள் அலெக்சாண்டிரியாவிலிருந்து மத்தியத் தரைக்கடல் வழியாகப் பிற ஐரோப்பிய நாடுகளுக்கு, குறிப்பாக ரோமாபுரிக்குக் கொண்டுசெல்லப்படும். மேற்குறித்த முசிறி வணிகரைக் குறிக்கும் கிரேக்க ஆவணம் பொ.ஆ.1-ம் நூற்றாண்டைச் சார்ந்தது.






யவனர் எனக் குறிக்கப்படும் அயல்நாட்டவர், தமிழகத்தின் பல்வேறு துறைமுகங்களில் பணியாற்றியுள்ளனர் என்பதைச் சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. தமிழகத்தின் கிழக்குக் கடற்கரையில் அமைந்துள்ள வசவசமுத்திரம், அரிக்கமேடு, அழகன் குளம் ஆகிய துறைமுகங்களில் கிடைத்த தொல்பொருட்கள் பலவும் யவன நாட்டிலிருந்து வந்தவை. 'யவனத் தேறல்' எனப்படும் மதுவை யவனர்கள்

ஆம்போரா எனப்படும் குடுவைகளில் எடுத்துவந்துள்ளனர். இம்மதுக்குடங்கள் இத்துறைமுகங்களில் பெருமளவில் கிடைத்துள்ளன.

இதே போன்று, ராமநாதபுரம் மாவட்டத்தில் அழகன்குளம் என்ற இடத்தில் செய்யப்பட்ட அகழாய்வில் கப்பல் உருவம் பொறித்த இரண்டு மட்கலன்கள் கிடைத்துள்ளன. அழகன்குளம் சங்க காலத்தில் கடல் வணிகம் மேற்கொண்ட நகரமாக விளங்கியிருந்தது. மதுரைக்கு அருகிலுள்ள கீழடியில் உற்பத்தி செய்யப்பட்ட மணி வகைகள் மற்றும் ஆடைகள் அழகன்குளம் வழியாக ஏற்றுமதி செய்யப்பட்டன. யவன வணிகர்கள் தமிழகத்தில் பொன் நாணயங்களைக் கொடுத்து, நறுமணப் பொருட்களை வாங்கினர். 'பொன்னொடு வந்து கறியோடு பெயர்ந்து' எனச் சங்க இலக்கியத்தில் குறிக்கப்பட்டுள்ளது. பொன் கொடுத்து, கறி எனப்படும் மிளகை ரோமானியர்கள் வாங்கினர்.

செங்கடல் பகுதியில் குசிர்-அல்-குதாம், பெரினிகே மற்றும் ஏமன் பகுதியின் கோரொரி ஆகிய துறைமுகப்பட்டினங்களில் அண்மையில் அகழாய்வுகளில் தமிழி எழுத்து பொறித்த பானை ஓடுகள் கிடைத்துள்ளன. இவ்வோடுகளில் கணன், சாதன், கொற்றபூமான், ..ந்தை கீறன் போன்ற தமிழ் வணிகர்களின் பெயர்கள் காணப்படுகின்றன.






Tamil-Brahmi Script
Found in Oman

ṇa-n-tai- kī-ra-ṉ
ண-ந்-தை- கீ-ர-ன்



*'Perum pathan kal'*

*தமிழர்கள் கீழை நாடுகளான சுமத்ரா, ஜாவா, சீனம் ஆகிய நாடுகளிலும் 2,500 ஆண்டுகளுக்கும் முன்பாகவே கடல்வழிப் பயணம் மேற்கொண்டிருந்தனர். தாய்லாந்து நாட்டிலுள்ள*

*கோலங் தோம் அருங்காட்சியகத்தில் பொ.ஆ. 4-ம் நூற்றாண்டைச் சேர்ந்த பொன் உரசும் கல் ஒன்றில் 'பெரும்பதன் கல்' என்ற தமிழி எழுத்துப் பொறிப்பு இதனை உறுதிசெய்கிறது.*

*தக்கோபா என்ற இடத்தில் கிடைத்த கல்வெட்டில், தமிழர்கள் குடியிருப்புகள் குறிக்கப் பட்டிருக்கின்றன. காவிரிப்பூம்பட்டினம் அருகிலுள்ள மணிக்கிராமத்தைச் சார்ந்த வணிகர்கள் தென்கிழக்காசியப் பகுதிகளில் கடல் வணிகத்தில் ஈடுபட்டனர். சீனர்கள் தங்கள் தூதுவர்களைத் தமிழகத்துக்கு அனுப்பி வைத்தனர் என்பதை சீன ஆவணங்கள் குறிப்பிடுகின்றன. பல்லவர்கள் காலத்தில் சீனப் பயணியான யுவான் சுவாங் பல்லவர்களின் தலைநகரமான காஞ்சிபுரத்துக்கு வந்துள்ளார். காஞ்சிபுரம் வைகுந்த பெருமாள் கோயிலின் சிற்பங்களில் சீனப் பயணியின் சிற்பம் உள்ளது. காவிரிப்பூம்பட்டினத் துறைமுகத்தைப் பற்றிக் குறிப்பிடும் 'பட்டினப்பாலை'யில் சீனர்கள் இன்றளவும் 'சுங்' என்ற பெயரில் பயன்படுத்திவருகின்ற தொங்கு நாவாய் என்னும் பெரிய கப்பல் பற்றிக் குறிப்பு உள்ளது.*

*சோழ மன்னர்களான ராஜராஜனும் ராஜேந்திர சோழனும் தென்கிழக்கு ஆசிய நாடுகளில் தங்கள் ஆதிக்கத்தைச் செலுத்தினர். ஸ்ரீவிஜய மன்னன் விஜயதுங்கன் தனது*

தந்தையின் பெயரில் சூடாமணிபன்ம பௌத்த விகாரை ஒன்றை நாகப்பட்டினத்தில் கட்டுவதற்கு ராஜராஜ சோழனின் அனுமதியைப் பெற்றார்.







*Bilingual Tamil -Chinese inscription from Quanzhou - it records consecration of idol of Siva c.1281 CE by Sambandar Perumal*

*சீனாவில் செங்கிஸ் கான் காலத்தில் அவரது பெயரால் சிவன் கோயில் ஒன்றைத் தமிழர்கள் கட்டியுள்ளனர்.*

*இத்தகைய தொன்மை வரலாற்றைக் கொண்ட கடல்வழிப் பயணம் குறித்தும், தமிழகத் தொன்மைக் கடற்கரைத் துறைமுகங்கள் குறித்து அறிவதற்கும் ஆழ்கடல் அகழாய்வு செய்வதற்குத் தமிழக அரசு இவ்வாண்டு பெரும் நிதி ஒதுக்கியிருப்பது பாராட்டுக்குரியது.*

*- சு.ராஜவேலு, மேனாள் துறைத் தலைவர், தமிழ்ப் பல்கலைக்கழகக் கடல்சார் வரலாறு மற்றும் கடல்சார் தொல்லியல் துறை. தொடர்புக்கு: rajavelasi@gmail.com*

*நன்றி: இந்து தமிழ் திசை*

## 8. பரதவர்…

— முனைவர் எஸ்.சாந்தினிபீ

*சாதிகள் இல்லாத காதல் திருமணத்தை வாழ்க்கை முறையாக, வரதட்சணைக் கொடுமை இல்லாத இன்றைய ஐரோப்பியச் சமுதாயத்தை ஒத்த சமூகத்தில் வாழ விரும்பாதவர் மிகச் சிலரே. நமது முன்னோர் இனிமையாக இப்படி வாழ்ந்த காலம் சங்க காலம். மண்ணின் இயற்கை அமைப்பின் அடிப் படையில், வாழ்விடத்தை ஐந்து வகையாகப் பிரித்திருந்தனர். மனிதாபிமானத்திற்கும் அறிவியலுக்கும் தொடர்பில்லாத கருத்தான சாதி, பிறப்பின் அடிப்படையில் உயர்வு தாழ்வு சொல்லும் மடமையைக் கடந்து வாழ்ந்திருந்தனர். நிலம் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்தாகப் பிரித்து அறியப்பட்டது. அப்பொழுது இந்த பிரிவு தான் நடைமுறையில் இருந்தது.*

*குறிஞ்சி என்பது மலையும் மலை சார்ந்த இடம், காடும் காட்டிற்கு அருகில் இருக்கின்ற இடங்களும் முல்லை, விவசாய நிலம் மருதம், கடலும் கடற்கரையும் நெய்தல், இந்த நான்கில் ஏதேனும் ஒன்று தன்னுடைய இயல்பில் திரிந்து வறண்டு பயனற்றதாகப் போகுமானால் அதனை பாலை என்றனர். வாழும் நிலத்தில் விளைந்ததை உண்டார்கள்.*

*உணவை அடிப்படையாகக் கொண்டதே தொழில், தொழிலுக்குத் தக்க உடை. இந்த ஐந்து பிரிவு நிலங்களிலும் வாழ்ந்த மக்களின் உணவும் உடையும் தொழிலும் பழக்கவழக்கங்களும் விளையாட்டுக்களும் பொழுது போக்குகளும் பாட்டுக்களும் இசைக்கருவிகளும் வேறு வேறு. நெய்தல் நிலத்தில் பரதவர், நுழைஞர், உமணர் வாழ்ந்ததைச் சங்க நூல் தொல்காப்பியம் அறிமுகப்படுத்தும்.*

*பரதவர், மீன் மற்றும் கடற் பொருட்களை வாணிபம் செய்தனர். இவர்கள் தலைமை இனத்தினர் என்று தெரிகிறது, நுழைஞர் கடலுக்குள் நுழைந்து மீன் பிடிப்பவர், உமணர் உப்பு தயாரிப்பவர், இன்று பரதவர் மட்டும் காலம் பல கடந்தும் அறியப்படுகிறனர். இன்றும் மீன்பிடித் தொழில் செய்கின்றனர். ஒரே தொழிலைச் செய்யும் பலரும் இன்று சமயம் சாதி அடிப்படையில் பல பெயர்களால் அழைக்கப்படுகிறார்கள். இந்த பரதவர் தொடர்பாக சில குறிப்புகள் பிற்காலச் சோழர் காலத்திய (8 ஆம் நூற்றாண்டு முதல் 13-ஆம் நூற்றாண்டு வரை) கல்வெட்டுகளில் காணக்கிடைக்கின்றன.*

*கோயிலில் இருக்கும் கடவுளுக்கும் பிராமணர்களுக்கும் மன்னருக்கும் அவர் குடும்பத்தினருக்கும் ஆடை நெய்து கொடுக்கும் பணியைச் செய்து வந்ததாக பல கல்வெட்டுக்கள் நமக்குச் சொல்கின்றன. மீன்பிடித் தொழிலிலிருந்து நெசவுத்*

தொழிலுக்கு எப்படி மாறினார்கள் இந்த பரதவர் ? இது நம் அனைவரின் பொதுச் சிந்தனையில் உதிக்கும் ஒரு கேள்வி. இதற்கு உதாரணம் ஒன்று, இன்றைய எடப்பாடியில் நெசவைத் தொழிலாகக் கொண்ட பலர் தாங்கள் பரதவர் என்பர். மீன்பிடித் தொழிலிலிருந்து ஏதோ காரணத்தினால் முன்னோர்கள் இடம் பெயர்ந்து தொழிலை மாற்றிக் கொண்டதாக இன்றும் அவர்களிடம் வழக்கத்தில் உள்ள வாய்வழிச் செய்தியை நம்மில் பலரறிவோம், கல்வெட்டுச் செய்தியும் வாய்வழிச் செய்தியும் இணைந்து செல்கின்றன.



இருதொழிலுக்கும் என்ன தொடர்பு என்று ஆழ்ந்து நோக்கும் போது பல உண்மைகள் தெரிய வந்தன. மீன் பிடிப்பதற்கு வலை பின்ன வேண்டும். மீனின் அளவுக்கு ஏற்ப வலை மாறுபடும், தொலை தூரம் சென்று ஆழ் கடலில் மீன் பிடிக்க

வலுவான வலை தேவை. இப்படி பலதரப்பட்ட வலைகள் பின்னுதல் அவசியம். வலை மட்டுமா? படகுகளில் கப்பல்களில் கடலில் நெடுந்தூரம் செல்கையில், கப்பல்களை காற்றோட்டத்தின் திசைக்கேற்ப செலுத்துவதற்காகப் பெரிய திரைச் சீலைகள் கொண்ட பாய்மரங்கள் அமைக்கப்படும். நமக்குச் சட்டென்று நினைவுக்கு வருவது எம்ஜிஆர் நடித்த ஆயிரத்தில் ஒருவன் படத்தில் 'அதோ அந்தப் பறவை போல வாழ வேண்டும்' என்னும் பாட்டு. அதில் பெரிய பெரிய திரைச் சீலைகள் கொண்ட பாய்மரங்களைப் பார்த்துள்ளோம். இவை பருத்தி நூலால் செய்யப் பட்டவையே. அவற்றை விரித்துப் பிடிப்பதற்காகக் கோல் வைக்க வேண்டும் எந்த இடத்தில் எப்படிக் கோல் வைத்தால் எந்தக் கோணத்தில் சரியாக இருக்கும் என்பதை மிகத் துல்லியமாக அறிந்திருந்த பரதவர் அந்தக் கோலை வைப்பார்கள்.

அவர்கள் இந்த திரைச்சீலைகளுக்குச் சாயம் முக்கி எடுப்பார்கள். அவ்வாறே நூல் பிரித்தல், இழைகளைச் செம்மைப் படுத்துதல், பின்னுதல், சாயம் ஏற்றுதல் போன்ற இவர்களின் பணிகள் அனைத்தும் நெசவுக்கும் பொருந்தும். அங்கேயும் நூலை இழை இழையாக எடுத்து சிக்குகளை அகற்றவும் அதன்பின் தறியில் கோல்கள் வைத்து நூலை விரித்து, அதன் பின்னரே நூலைத் துணியாக நெய்து நமக்குக் கொடுப்பார்கள். தொழிலில் இத்தனை ஒற்றுமைகள்

இருப்பதால் துணி நெய்வதற்கு பரதவர்கள் ஆடை நெய்வதில் வல்லவர்களாக மாறினர் போலும். தொழிலின் அடிப்படையில் இருக்கும் இத்தகைய ஒற்றுமையும் அனுபவமே துணி நெய்தலில் பயன்பட்டது. துணி நெய்தலில் இவ்வளவு திறமையும் அனுபவம் கொண்டவர்கள் பரதவர்கள். இதனால் தான் மன்னனுக்கும் கடவுளுக்கும் துணி நெய்யும் தகுதி பெற்றவர்களாக கருதப்பட்டு இருக்கிறார்கள். கோயில் பணியில் அமர்த்தப்பட்டும் இருக்கிறார்கள்.

இன்றைய புதுச்சேரியில் இருக்கும் திருபுவனை பெருமாள் கோயில் கல்வெட்டு ஒரு தகவல் சொல்கிறது. சில பரதவர்களை இக்கோயிலுக்கும் அந்தணர்களுக்கும் ஆடை நெய்ய மன்னன் அனுப்பி வைக்கிறார். அவர்களிடத்தில் தன்னுடைய கட்டளையை ஓர் ஓலை மூலம் கொடுத்தார். அந்த ஓலை கொண்டு வருபவர் அந்த ஊரின் தலைமையிடம் கொண்டு சேர்க்க, தலைமை தன்னுடைய அங்கத்தினர் ஒப்புதலுடன் பணியும் சன்மானமும் தருவது அன்றைய நடைமுறை, *கல்வெட்டு இந்த செய்தி தான் சொல்கிறது. ஆனால் அதில் ஒரு வார்த்தை வருகிறது, இந்த பரதவர்களை இரு சாதியினரின் கலப்பு என்று பொருள்படும்படி வடசொல் ஆன "ஆயோகவர்" என்ற சொல் வருகிறது. அப்படிக் குறிப்பிட ஒரு காரணம் இருந்தது.

நமது மண்ணில் நிலத்தின் அடிப்படையில் இயற்கையின் அடிப்படையில் அறிவியலின் அடிப்படையில் ஐந்து வகையான பிரிவுகள் இயங்கி வந்த அதே காலகட்டத்தில், வடக்கில் வேறு ஒரு பழக்கம் இருந்தது. சாதிய முறை அல்லது சனாதன தர்மம் அங்கு நிலவியது. மனிதர்களைப் பிறப்பால் உயர்வு தாழ்வு என அடையாளப் படுத்துவதுடன் அவர்களுக்கான உணவு, உடை, வீடு, வாழ்விடம், தொழில் இவை அனைத்தையும் சாதியின் அடிப்படையிலேயே அமைத்திருந்தார்கள் அவர்கள். ஒவ்வொரு சாதியினரும் அவரவர் சாதியைச் சேர்ந்தவர்களை மணம் முடிக்க வேண்டும். ஆனால் சட்டம் எப்படி இருந்தாலும் அன்றைய நடைமுறை வேறுவிதமாக இருந்திருக்கிறது. அது கிட்டத்தட்ட கிபி இரண்டாம் நூற்றாண்டிலேயே ஒரே சாதிக்குள் திருமணம் செய்து கொள்ளாத அவர்களின் எண்ணிக்கை அவர்களுடைய குழந்தைகளின் எண்ணிக்கை ஒரு கணிசமான தொகையை எட்டியது.

அது வரையிலும் வேறு சாதியுடன் திருமணம் செய்து கொண்டவர்கள் சாதியை விட்டு நீக்கி வைக்கப்பட்டு அவர்களுக்குச் சாதியும் மறுக்கப்பட்டது. ஒரு கணிசமான மக்கள் தொகை சாதிக்கு வெளியே இருக்கிறது என்பதை உணர்ந்தார்கள் போலும், பின்னர் அவர்களுக்கும் ஒரு சாதியின் பெயர் கொடுத்து ஒரு தொழிலைக் கொடுத்துச் சாதி அமைப்புக்குள் சேர்த்துக் கொண்டார்கள். அதன்படி

கணவன் உயர்ந்த சாதியாகவும் மனைவி தாழ்ந்த சாதியாகவும் இருந்தால் அவர்களின் குழந்தைகள் அனுலோமா என்றும்; ஆண்மகன் தாழ்ந்த சாதியாகவும் பெண் உயர்ந்த சாதியாகவும் இருப்பின் அவர்களின் குழந்தைகள் பிரதிலோமா என்றும் அழைக்கப் பட்டனர். அனுலோமா உயர்ந்தவர் பிரதிலோமா தாழ்ந்தவர் என்று கருதப்பட்டார்கள், அவர்களுக்கு சில தொழில்களையும் சொன்னார்கள். அனுலோமாவினருக்கு கோயிலைச் சார்ந்த பணிகள் இருந்தன. அப்படிப்பட்ட அனுலோமா பிரதிலோமாவை குறிப்பதுதான் இந்த ஆயோகவர் என்னும் சொல்.

பரதவர்கள் எப்போது வேற்று சாதியுடன் மணம் புரிந்தார்கள்? அவர்களை ஏன் ஆயோகவர் என்று கல்வெட்டு குறிக்கிறது? இதுதானே நமக்குள் எழும் அடுத்த கேள்வி, அதற்கும் ஒரு விடை உண்டு. வடக்கிலிருந்து தெற்கிற்கு வந்தவர்கள் கோயிலையும் கோயில் கலாச்சாரத்தையும் உண்டாக்கினர். மன்னர்களும் அவர்களுக்கான நிலம், தொழில் வல்லுநர்கள், நீர் வசதி போன்ற அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொடுத்தார்கள். அப்படித் தான் திறமை பெற்ற நெசவாளிகளான பரதவர் மன்னரால் அனுப்பப் பட்டனர். ஆனால் வடக்கரின் பார்வையில் சாதி குறுக்கே நின்றது போலும், எனவே அந்த பரதவர்களை ஆயோகவர் என்று ஒரு சாதியின் பெயர் சூட்டி அவர்களை

உயரிய சாதி என்று தங்களது மனதிற்கு ஒரு சமாதானத்தைச் சொல்லிக் கொண்டு துணி நெய்யும் அனுமதியும், ஊருக்குள் வாழும் தகுதியும் கொடுக்கிறார்கள்.

ராஜராஜசோழனின் காலத்திலும் ஊருக்குள் வாழும் ஒரு முக்கியமான கலைஞன் என்றால் அவர் நெய்தல் தொழிலாளியே, அன்று முதல் கோயில் பணியில் ஈடுபட்ட பரதவர்கள் ஆயோகவர் ஆகிப் போனார்கள். சில தலைமுறைகளுக்குப் பின் அதே பரதவர் வம்சாவளியினர் கோயில்களுக்கு தான தர்மங்களை வழங்கியதைக் கல்வெட்டுகள் சொல்கின்றன. பிற்காலச் சோழர்களின் இறுதிக்காலத்திலும் பின்னர் வந்த விஜயநகர மன்னர்கள் காலத்திலும் இந்த பரதவர்கள் கோயில் நிர்வாகத்தில் பங்கு பெறத் தொடங்கியிருந்தார்கள்.

இதில் வரும் அடிப்படை அடிநாதம் என்னவெனில் சாதி இல்லாது வாழ்ந்த மக்களின் மீது தங்களின் தேவைக்கு ஏற்ப சாதிப் பெயர்கள் ஏற்றப்பட்டன. சாதி, மனிதன் தோன்றிய போதே பிறந்துவிட்ட ஒன்றல்ல. சாதியை மறுத்தால் மடிந்து போக அது நமது இதயத் துடிப்போ, மூச்சுக் காற்றோ அல்ல எனும் வரலாற்றுப் புரிதலோடு, தீர்க்கமான மனிதராக முன்னோர்கள் சொல்லிச் சென்ற 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' எனும் உயரிய கருத்தை நம் மனதில் பதியவைத்து வாழ்வோமானால் எதிர்காலம் ஒளிரும்.

* *Tribhuvani varadaraja Perumal temple (Naduvil Viranarayana Vinnagar) - The inscription, of the 9th year (of Vikrama Chola), records a gift of land for weavers of the anuloma class, who enjoyed the privilege of weaving and supplying clothes to temples and kings (ARE 208 of 1919).*

*- முனைவர். எஸ். சாந்தினிபீ, பேராசிரியர், வரலாற்றுத் துறை,*
*அலிகர் முஸ்லிம் பல்கலைக்கழகம்*
*அலிகர், உத்திரப் பிரதேசம்.*

*நன்றி: கடற்கரை; ஜன-பிப் 2022 இதழ்*

## 9. ஓர் உள்ளூர் வணிகவழி

— முனைவர் ஆ.சிவசுப்பிரமணியன்

*ஒரு நாட்டின் சமூக வளர்ச்சியில் குறிப்பாக அதன் பொருளியல் பண்பாட்டு வளர்ச்சியில் வாணிபத்தின் பங்களிப்பு அளப்பரியது. வாணிபத்தின் வளர்ச்சியானது வேளாண்மை உற்பத்திப் பொருட்களுக்கும், கைவினைப் பொருட்களுக்கும் இடையிலான பரிவர்த்தனை முறையை. நெருக்கமாக்கி உழுகுடிகள், கைவினைஞர்கள், நுகர்வோர் என்ற முத்திறத்தாரையும் ஒருங்கிணைக்கும் தன்மை கொண்டது. இதன் வளர்ச்சி நிலையே ஒரு நாட்டில் நகரங்களின் எண்ணிக்கையை மிகுதிப்படுத்தும். வணிகர் களைத் தனி மனிதர்கள் என்ற அடையாளத்தில் இருந்து விடுவித்து வணிகக் குழுக்களாக மாற்றி அமைக்கும். அத்துடன் நகர நாகரிகம் என்ற அடைமொழி உருவாக்கித் தரும்.*

*நகரங்கள் என்பன உள்நாட்டு நிலப்பகுதியில் மட்டுமின்றி கடற்கரைகளிலும் உருவாகி கடல்கடந்த நாடுகளுடனும் வாணிப இணைப்பை உருவாக்கும். இம்முயற்சியில் நிகழும் வாணிபமானது ஏற்றுமதி வாணிபம் இறக்குமதி வாணிபம் என இருதரத்தது. இவை இரண்டும் வளர்ச்சியுற கடற்கரை*

நகரங்களும், உள்நாட்டு நகரங்களும், பரந்துபட்ட உள்நாட்டுப் பகுதிகளைக் கொண்டிருத்தல் அவசியமான ஒன்று. ஏன் எனில் வாணிபத்திற்கான உற்பத்திப் பொருளையும், கைவினைப் பொருட்களுக்கான மூலப் பொருட்களையும் வழங்க உள்நாட்டுப் பகுதியின் பங்களிப்பு மிகவும் தேவை. இதுபோல் பொருட்களை வாங்கிப் பயன்படுத்தும் நுகர்வோர்கள் வாழும் தளமாகவும் உள்நாட்டுப் பகுதி விளங்கியது.

இவ்வாறு நகரம், உள்நாட்டுப்பகுதி என்ற இரண்டின் இணைப்பு தமிழர்தம் வரலாற்றில் தொன்மையான ஒன்றாக விளங்கியுள்ளது. 'மதுரைக்காஞ்சி' 'பட்டினப்பாலை என்ற இரு சங்க இலக்கியங்களும், சிலப்பதிகாரம் மதுரைக் காண்டத்தில் இடம் பெற்றுள்ள 'ஊர்காண் காதை'யும் பண்டைத் தமிழரின் வாணிபச் சிறப்பிற்குச் சான்று பகர்கின்றன.

**வாணிபமும் சாலையும் :**

வாணிபச் செயல்பாட்டில் மிக முக்கியமான ஒன்றாக அமைவது பொருட்களை ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்குக் கொண்டு செல்வதாகும். தொடக்கத்தில் விலங்குகளும் பின்னர் விலங்குகளால் இழுக்கப்படும் வண்டிகளும் சுமைகளைக் கொண்டு செல்லப் பயன்பட்டுள்ளன. எருதுகள் பூட்டப்பட்ட வண்டிகள்

வாணிபப் பொருட்களைச் சுமந்து செல்லப் பயன்படுத்தப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறிகிறோம்.

இவை கடந்து செல்லப் பாதைகள் புதிதாக உருவாக்கப்பட்டன. வாணிபத்திற்காக மட்டுமின்றி, மன்னர்கள் நிகழ்த்திய படையெடுப்புகள், கலைஞர்களின் கலைப்பயணம், பண்ணியத் தலயாத்திரை என்பனவற்றிற்கும் இவை பயன்பட்டன என்றாலும், வாணிபப் பயன்பாடே இவற்றின் அடிப்படை நோக்கமாக இருந்தது. இதன் அடிப்படையிலேயே வாணிபப் பெருவழி (Trade Route) என்று அழைக்கப்பட்டன. சாலைகளின் வளர்ச்சி ஏற்படுத்திய விளைவுகள் குறித்து மோதிசந்திரர் (1907), 'நாட்டில் சாலையமைப்புகளின் வளர்ச்சி, அந்தநாட்டின் நாகரிக வளர்ச்சியின் அளவு கோலாகும். நெடுஞ்சாலைகளில் இருந்து கிளைச்சாலைகள் பெருகப் பெருக நாகரிகமும் நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரவத் தொடங்கியது.' என்று கூறியுள்ளார்.

தமிழ்க் கல்வெட்டுக்களில் இத்தகைய வணிகப் பெருவழிகள் குறித்த பதிவுகள் உள்ளன. இவை குறித்த, புதிய கண்டு பிடிப்புகளைத் தொல்லியல் அறிஞர்கள் செ. இராசு, ர. பூங்குன்றன், ந. அதியமான், கா. இராஜன், வெ. வேதாச்சலம் ஆகியோர் வெளிப்படுத்தி உள்ளனர். பாவெல் பாரதி

வைகைப் பெருவழி தொடர்பான செய்திகளைத் தமது இரு கட்டுரைகளின் வாயிலாக வெளிப்படுத்தி உள்ளார்.

இவர்களது ஆய்வின் அடிப்படை ஆதாரங்களாகக் கல்வெட்டுக்கள் அமைத்துள்ளன. ஆனால் இக்கட்டுரை கல்வெட்டுச் சான்றுகள் இன்றி வாய்மொழிச் சான்றுகளின் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் திகழ்ந்த பண்டமாற்று வாணிபம் குறித்த வாய்மொழி வழக்காறுகளை அடிப்படைச் சான்றுகளாகக்கொண்டு எழுதப்பட்டுள்ளது. அத்துடன் ஒரு வகையில் உள்ளூர் வரலாறு (local history) என்ற வரலாற்று வகைமைக்குள் அடங்கும் தன்மைத்தது.

உள்ளூர் வரலாறு:

உள்ளூர் வரலாறு என்பது ஒரு கிராமத்தையோ அல்லது சில கிராமங்களையோ மையமாகக் கொண்டது. துறைமுக நகரம், தலை நகரம் என்பனவற்றில் இருந்து தொலைவில் உள்ள சிறிய அல்லது நடுத்தர நகரமும் பொதுவான புவியியல் அமைப்பை விடச் சிறிய நில அமைப்பைக் கொண்ட நிர்வாகப் பகுதியும் உள்ளூர் வரலாற்று வரைவுக்கான களமாகும் என்பது பியர் கூபர் (1915- 2012) என்ற பிரஞ்சு வரலாற்றுப் பேராசிரியரின் கருத்தாகும்.

இவரது இவ் வரையறையை மையமாகக் கொண்டு கருப்புக்கட்டி என்றழைக்கப்படும் பனைவெல்லம் உற்பத்தி

செய்வோர் நிழத்திய பண்டமாற்று வாணிபம், பயன்படுத்திய பாதை, சுமைகளைக் கொண்டு செல்ல உதவிய வாகனம் விலங்கு என்பன குறித்த செய்திகளை வாய்மொழித் தரவுகளாகத் திரட்டி இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது. இதன் அடிப்படையில் வாய்மொழி வரலாறு (*Oral History*) என்ற வகைமைக்குள்ளும் இக்கட்டுரை அடங்குகிறது.

வாய்மொழி வரலாறு:

வாய்மொழி வரலாறு என்ற வரலாற்றியல் கலைச்சொல் 1948 ஆவது ஆண்டில் ஆலம் நீவின் என்ற கொலம்பியாப் பல்கலைக் கழகப் பேராசிரியரால் உருவாக்கப்பட்டதாகும். வாய்மொழி வரலாறு என்பது குறித்துப் பல்வேறு வரையறைகள் வரலாற்றியலிர்களிடம் உள்ளன. வாய்மொழியாக வழங்கப்படும் வழக்காறுகளின் தொகுப்பே வாய்மொழி வரலாறு என்று எளிதாக, வரையறை செய்வது இதை மலினப்படுத்தும் செயலாகும்.

ஒரு குறிப்பிட்ட வரலாற்று நிகழ்வில் பங்கு கொண்டோரின் வாய்மொழிச் சான்றுகளைப் பயன்படுத்துதலே வாய்மொழி வரலாறு என்று சுகோவ் என்பவர் குறிப்பிடுகிறார். ஜான் வான்சினா என்பவரோ ஒரு குறிப்பிட்ட வரலாற்று நிகழ்வை நேரில் கண்டவர்களின் கூற்றை வாய்மொழி மரபாக ஏற்றுக் கொள்ளவில்லை. அவரது கருத்துப்படி அதைக் கண்டறியாத ஒருவர் செவிவழியாகக் கேட்டறிந்ததைக் கூறுவதுதான்

வாய்மொழி மரபாகும். இதன்படி வாய்மொழிப் பரவல் (Oral Transmission) முக்கியத்துவம் பெறுகிறது. லூமிஸ் என்பவர் வரலாற்றின் ஒரு வகைமையாக வாய்மொழி வரலாற்றைக் கருதவில்லை . அவரது கருத்துப்படி இது ஒரு வரலாற்று முறையியல் (Methodology) ஆகும்.

இக்கட்டுரை வாய்மொழி வரலாறு தொடர்பான இவ்விவாதங்களுக்குள் நுழையாது ஜான்வான் சினாவின் வரையறையை அடியொற்றி எழுதப்பட்டுள்ளது. தூத்துக்குடி மாவட்டம் திருவைகுண்டம் ஊரில் ஓடும் பொருநை ஆற்றின் தென்கரைப் பகுதியில் உள்ள தேரிக்காடு என்றழைக்கப்படும் பனைமரக்காடுளில் வாழ்ந்தோர் ஆங்கில ஆட்சியின்போது நிகழ்த்திய பண்டமாற்று வாணிபம் இக்கட்டுரையின் மையப் பொருளாகும். இவ்வகையில் வாய்மொழிச் செய்திகளின் துணையுடன் எழுதப்பட்ட உள்ளூர் வணிக வரலாறு எனலாம்.

தேரிக்காடு:

இன்றையத் தூத்துக்குடி மாவட்டத்தின் தென்பகுதியில் உள்ள திருச்செந்தூர், சாத்தான்குளம் வட்டங்களும் திருநெல்வேலி மாவட்டத்தின் தென்பகுதியில் உள்ள நாங்குனேரி, இராதாபுரம் வட்டங்களும் செம்மண் மேடுகளையும் சிறிய பள்ளத்தாக்குகளையும் கொண்டவை. இந்நிலப்பகுதி தேரி என்று குறிப்பிடப்படுகிறது. மேடான நிலப்பகுதியைக் குறிக்க,

*தெற்றி என்ற சொல்லாட்சி கல்வெட்டுக்களில் காணப்படுகிறது. ஒருவேளை தேரி என்ற சொல் தெற்றி என்ற சொல்லின் திரிபாக இருக்கலாம். இதன் ஆங்கில ஒலிமொழி பெயர்ப்பாகவே Teri என்ற சொல்லாட்சி உருவாகியுள்ளது. தேரி நிலப்பகுதியில் நெருக்கமாக வளர்ந்து நிற்கும் பனை மரங்களை அடிப்படையாகக்கொண்டு பனைமரக்காடு என்ற பொருளைத்தரும் ஆங்கிலச் சொல்லை ஆங்கில அதிகாரிகளும், கிறித்தவ மறைப்பணியாளர்களும் பயன்படுத்தியுள்ளனர். ஆங்கில ஆட்சியின்போது திருச்செந்தூர் வட்டம் 'பனைமரத் தாலுகா' என்றும் அழைக்கப்பட்டிருக்கிறது.*

தேரியின் பொருளாதாரம்:

*தமிழ்நாட்டின் பெருவாரியான கிராமங்களைப் போன்றே தேரிநிலப் பகுதியும் காலனிய ஆட்சியின்போது வேளாண் பொருளாதாரத்தையே மையமாகக் கொண்டிருந்தது. இப்பகுதியின் பொருளாதாரத்தில் பனைமரத்தின் பங்களிப்பு குறிப்பிடத்தக்கதாய் இருந்தது. பனைமரத்தில் இருந்து நேரடியாகப் பெறும் நொங்கு, கள், பதநீர், ஓலை என்ற நேரடியான பொருள்கள் மட்டுமின்றி அவற்றின் துணைத் தயாரிப்பான,பலவகைக் கருப்புக்கட்டிகள் (பனை வெல்லம்), கற்கண்டு, பனங்கிழங்கு என்பன முக்கிய விற்பனைப் பொருட்களாயின. இவற்றுள் கருப்புக்கட்டி, கற்கண்டு, பனங்கிழங்கு என்பன தவிர ஏனையவை இருப்பு வைத்து*

விற்கமுடியாத பொருட்களாகும். இவை தவிர கட்டிடங்களுக்குத் தேவையான பனைச் சட்டங்கள், ஓலைகள், பனை நார், ஈர்க்கு, கருக்கு மட்டை என்பனவும் விற்பனைப் பொருட்களாயின. இவை அனைத்தும் இன்றுவரை விற்பனைப் பொருள்களாகத் தொடர்கின்றன.





ஆனால் இவை தவிர வேறுவகையான வேளாண் பொருள்களும் தேரிக்காட்டுப் பொருளாதாரத்தில் இடம் பெற்றிருந்தன. தேரிக்காட்டு மக்களின் கடந்தகாலப் பாண்டமாற்று வாணிபத்தில் இவை முக்கிய பங்களிப்பைச் செய்துள்ளன. தேரிக்காட்டுப் பொருளாதாரத்தில் பனைபடு பொருள்களும் வேளாண் உற்பத்திப்பொருட்களும் இடம் பெற்றிருந்தது என்பதை மேலோட்டமாகப் பார்த்தோம்.

அடுத்து, இவை வாணிபப்பொருளாக விளங்கியமை குறித்த செய்திகளைக் காண்போம்.

கருப்புக்கட்டி:



பனைமரத்தில் இருந்து பெறும் பதநீரைக் காய்ச்சி உருவாக்கப்படும் கருப்புக்கட்டியானது இனிப்புப் பொருளாக மட்டுமின்றி. நம் பாரம்பரிய மருத்துவத்திலும் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவ்வுண்மையை., வங்கவிரிகுடாவின் முத்துக்குளித்துறையில் அரசியல் ஆதிக்கம் செலுத்தத் தொடங்கும் முன்னரே போர்ச்சுக்கீசியர்கள் அறிந்திருந்தனர் - பொ.ஆ.1511-1662 வரையிலான காலத்தில் அவர்கள் அறிந்திருந்த

நம்பாரம்பரிய மருத்துவமுறைகள் குறித்துத் தமது நூல் ஒன்றில் பேரா.ஜெய சில ஸ்டீபன் (*2015:358-361*) குறிப்பிட்டுள்ளார். அதில் சளித்தொல்லைக்கான மருந்தாக சுக்கும் கருப்புக்கட்டியும் கலந்த மருந்து இடம் பெற்றுள்ளது. சுக்குடன் அதைவிட ஐந்துமடங்கு அளவு கருப்புக்கட்டி இம் மருந்தில் சேர்க்கப்பட்டுள்ளது.

தமது மற்றொருநூல் ஒன்றில் (*1999: 124*) தூத்துக்குடிக்கும் அருகில் உள்ள பழையகாயல் துறைமுகத்தில் நிகழ்ந்த கருப்புக்கட்டி ஏற்றுமதி குறித்த செய்தி ஒன்றையும் அவர் குறிப்பிட்டுள்ளார். அதன்படி வாஸ்கோடாகாமாவின் மகனான மானுவல்காமா ஒரு பலம் ஏழு ரூபாய் என்ற விலையில் கருப்புக்கட்டி வாங்கி 1525 மார்ச் 7இல் போர்ச்சுக்கலுக்கு ஏற்றுமதி செய்துள்ளார். இச் செய்திக்கும் மேலே குறிப்பிட்ட மருந்துக்கும் இடையே ஓர் இயைபு இருக்க வாய்ப்புள்ளது. எப்படியோ கருப்புக்கட்டி ஏற்றுமதிப் பொருளாக விளங்கியுள்ளது என்பது உண்மை.

நாசரேத் என்ற தேரிக்காட்டு ஊரைத் தம் பூர்வீக ஊராகக்கொண்ட டாக்டர். சசிகரன் தங்கையா தாம் எழுதிய நாசரேத் வரலாறு குறித்த நூலில் (*2012: 112*) நாசரேத்தில் இருந்து கருப்புக்கட்டி ஏற்றுமதி ஆனதாகக் குறிப்பிட்டுள்ளார். நாசரேத் ஊரைச் சுற்றியுள்ள

தேரிக்காட்டுப் பகுதிகளில் இருந்து இவை சேகரிக்கப் பட்டிருக்கலாம்.

**வேளாண்மை உற்பத்தி:**

*கருப்புக்கட்டி உற்பத்தியுடன் ஒப்பிடுகையில் சொற்ப அளவிலேயே தேரிக்காட்டுப் பகுதியில் முன்னர் வேளாண்மை நிகழ்ந்துள்ளது. இன்று இப்பகுதியில் நிலவும் வேளாண் தொழிலுடன் ஆங்கில ஆட்சியின் போது நிகழ்ந்த வேளாண் நடவடிக்கைகளை ஒப்பிட்டுப் பார்க்க முடியாது. பனைமரக்காடுகளாகவே தேரிப்பகுதி இருந்துள்ளது. இதனை ஊடறுத்துச் செல்லும் வண்டித்தடங்கள், ஒற்றையடிப்பாதைகள் வாயிலாகவே பயணங்கள் திகழ்ந்துள்ளன. இப்பகுதிக்கு வரும் புதியவர்கள் தடம் மாறி வழிதப்பிப் போகும் வாய்ப்பிருந்தமையால் வழிகாட்டிகள் அழைத்துச் சென்றுள்ளனர்.*

*வழிகாட்டிகளுக்கு ஊதியம் வழங்கும் வழக்கமும் இருந்துள்ளது. தேரிக்காட்டுப் பகுதியில் 19 ஆவது நூற்றாண்டுக் காலத்தில் உபதேசியாராகப் பணியாற்றிய சவரிராயபிள்ளை (1901-1834) என்பவர் 1805 செப்டம்பர் 25 ஆம் நாள் எழுதிய நாட்குறிப்பில் நாசரேத் ஊரில் முதல்நாள் இரவில் தங்கிவிட்டு அதிகாலையில் புறப்பட்டுச் சென்றதை, பரஞ்சோதி யென்றவனைக் கூடப்போய் வழி பிசகாமல் கொண்டுவந்துவிட அனுப்பினார். ...... அவன் வராவிட்டால்*

பலப்பல வழிகளில் அலைந்தும் விடிய மட்டும் வருத்தப்பட நேரிடும்' என்று எழுதி உள்ளார். மற்றொரு குறிப்பில் 22-2 விடியக்காலம் புறப்படத் துணையாள் சம்பளத்துக்குக் கிடைக்கவில்லை' என்று எழுதியுள்ளார்.

இவ்வாறு சரியானசாலைகள் இல்லாதது மட்டுமின்றி, கிணறு குளம் என நேரடி நீர்ப்பாசன வசதிக்குறைவும் பல பகுதிகளில் இருந்துள்ளது. இருப்பினும் பனை மரங்களுக்கு ஊடாக வேளாண்மையும் திகழ்ந்துள்ளது.

பதநீர் இறக்கும் பருவம் தேரிக்காட்டுப் பகுதிகளில் பிப்ரவரித் திங்களில் தொடங்கி மே இறுதியில் அல்லது ஜூன் தொடக்கம் முடிவடையும். பதநீர் இறக்கும் இப்பருவத்தில்தான் கருப்புக்கட்டித் தயாரிப்பும் நிகழும். இப்பருவகாலத் தயாரிப்பு மட்டுமே அவர்களின் வாழ்வாதாரமாக அமையவில்லை. துணைத் தொழிலாக வேளாண்மையும் இருந்துள்ளது.

ஒப்பீட்டு அளவில் தோக்கும் போது பனங்காட்டு வேளாண்மையைப் புன்செய் வேளாண்மை எனலாம். ஏனெனில் இரண்டும் நேரடிப்பாசனமின்றி "வானம் பார்த்த விவசாயம்" (மழையை எதிர் நோக்கி நிகழும் விவசாயம்) இது பின் வரும் முறையில் நிகழும்.

**பனங்காட்டு வேளாண்மை:**

பனைமரம் செழித்து வளர்ந்துள்ள தேரிநிலப்பகுதி சமதளமாக இல்லாது மேடும்பள்ளமுமாக அமைந்தது. வடகிழக்குப் பருவமழையினால் கிடைக்கும் நீரே இதற்கு ஆதாரம் என்ற நிலையில் இதில் பெய்யும் மழைநீரினை அதிக அளவில் நிலத்தில் சேமிப்பதும் உரச்சத்தைப் பனைகளுக்குத் தருதலும் அவசியம். இவை இரண்டு பயன்களுக்காக வ.கி. பருவமழை தொடங்கும் முன்னர் பனங்காட்டை பத்து முறை உழுவர். இதில் முதல் உழவு முடிந்ததும் ஆட்டுக்கிடை (பட்டி) போடுவர். கிடைபோட்டு முடிந்த பின்னர் நன்றாக உழுது விடுவர். இதற்கடுத்து வரும் உழவில் (ஒன்பது அல்லது பத்தாவது) விதைகளைத் தூவி உழுதுவிடுவர்.

உளுந்து, பாசிப்பயறு, தட்டாம் பயறு (காராமணி), மொச்சை போன்ற பயறுவகைகளும் தினை, வரகு, சாமை ஆகிய புன்செய்த் தானிய வகைகளும், பருத்தியும் முக்கியப் பயிர்களாக அமைந்தன. மழை பெய்தவுடன் இவை முளைத்துவிடும். இடையிடையே பெய்யும் மழை இவற்றை வளர்த்துப் பலன்தரச் செய்து விடும். எள், மழையைத் தாக்குப்பிடிக்காத பயிர் என்பதால் மழைக்காலம் முடிந்தபின்னர் ஈரப்பதத்தில் உழுது விதைத்துவிடுவர். கிணற்றுநீரின் துணையால் ஆங்காங்கே நடைபெற்ற வேளாண்மையில் வெங்காயம் பயிராகி குலசேகரன்

பட்டிணம் துறைமுகம்வழி இலங்கைக்கு ஏற்றுமதி ஆகியுள்ளது.

பருவமல்லாத காலத்தில் பெய்யும் மழை எள் பயிருக்கு ஆகாது என்பதால் தண்ணீர் தேங்காத சரிவான நிலப்பகுதியையே எள் பயிரிடத் தேர்வு செய்வர். (தேரிக் காட்டு ஊர் ஒன்றின் பெயர் எள்ளுவிளை என்பதாகும். விளை - தோட்டம்) பனங்காட்டில் நிகழ்ந்துவந்த கடந்தகால வேளாண்மை குறித்த இச்செய்திகள் பனைப் பொருளாதாரத்துடன் வேளாண் பொருளாதாரமும் இணைத்தே இருந்துள்ளதை உணர்த்துகின்றன. அத்துடன் தேரிக்காட்டுப்பகுதி மக்களின் வாழ்வாதாரமாகப் பனைமட்டும் இருக்கவில்லை என்ற உண்மையும் வெளிப்படுகிறது.

பனைகளுக்கிடையே உழுவதால் உருவான சால்களில் (கலப்பையின் கொழு பதிந்து சிறு ஓடை போல் உருவாகும் பகுதி) மழை நீர் தேங்கி நிலத்துக்குள் இறங்கிவிடும். நிலத்தைவிட்டு மழைநீர் வழிந்து போகாது. அத்துடன் ஆட்டுப்புழுக்கைகள் கரைந்து மண்ணுடன் இரண்டறக் கலந்துவிடும். அத்துடன் உழும்போது பனையின் வலுவிழந்த சல்லிவேர்கள் அறுந்து போய் புதியவேர்கள் தோன்றும். ஆணிவேர் இல்லாத பனைமரம் உரிய அளவு நீரைப்பெற இப்புதிய சல்லிவேர்கள் துணை புரியும். பயறுவகைகளைப்

பயிரிட்டதானது இரண்டு வகையான நன்மைகளை வழங்கியுள்ளது. பனையைச் சுற்றிலும் மழைக்காலத்தில் வளரும் முரட்டுக்களைகளின் வளரச்சியை இவ் வேளாண்மை கட்டுப்படுத்தி உள்ளது. வேர் முடிச்சுப் பயிர்களான பயறுவகைகள் தழைச்சத்தை நிலத்தில் நிறுத்தி உதவி உள்ளன.

இவ்வாறு பனைத்தொழிலுடன் இணைந்த வேளாண்மையானது ஊடுபயிர் போன்று காட்சி அளித்தாலும் ஓர் உபரிவருமானத்தை வழங்கும் தொழிலாக இது இருந்துள்ளது. பனைத்தொழில் செய்து வந்தோரைப் பணப்பயிர் வேளாண்மையின் பக்கம் திருப்பியதில் ஐரோப்பியக் காலனியவாதிகளுக்கு முக்கியப்பங்கு இருந்துள்ளது. இவர்களுள் முதலாவதாக வருபவர்கள் போர்ச்சுக்கீசியர்கள்.

16-ஆவது நூற்றாண்டின் தொடக்கத்தில் வங்கவிரிகுடாவின் முத்துக்குளித்துறைப் பகுதியின் கடலுக்குள் இவர்கள் ஆதிக்கம் செலுத்திவந்தனர். பின் 1533வாக்கில் முத்துக்குளித்துறையின் தூத்துக்குடி உள்ளிட்ட கடற்கரைப்பகுதியில் அரசியல் ஆதிக்கம் செலுத்துவோராக மாறினர். இவர்களுடனான மிளகு வாணியப்போட்டியில் டச்சு நாட்டினரின் கை ஓங்கியநிலையில் தமிழகத்தின் உள்நாட்டுப் பகுதிகளில் மிளகாய், புகையிலை விதைகளை

அறிமுகம் செய்ததுடன் அவற்றைத் தங்களுக்கே விற்கும்படி மக்களை வலியுறுத்தினர். மிளகுக்கு மாற்றாக மிளகாய் அறிமுகமான நிலையில் அதை மக்களிடையே பரவலாக அறிமுகம் செய்யும்படி இங்குப்பணிபுரிந்த கத்தோலிக்கச் சமயக்குருக்களை போப் வலியுறுத்தியுள்ளார். ஒரு கத்தோலிக்க நாடு என்பதன் அடிப்படையில் போர்ச்சுக்கல் மன்னர் போப்பிடம் வைத்த வேண்டுகோளே இதற்குக் காரணமாக இருந்துள்ளது. இதன் காரணமாகவே போர்ச்சுக்கீசியரின் துணையுடன் கத்தோலிக்க சமயத்தைத் தழுவிய வீரபாண்டியன் பட்டிணம், மணப்பாடு, உவரி, விஜாயபதி, கூட்டப்புளி ஆகிய கடற்கரை ஊர்களைச் சேர்ந்த பரதவர்கள் வேளாண்மையிலும் ஈடுபடத் தொடங்கியுள்ளனர். இதுபோன்றே பனைத்தொழிலை மேற்கொண்டிருந்த கத்தோலிக்க சமயத்தைத் தழுவியிருந்த நாடார்கள் தம் உணவுத் தேவைக்காக மட்டுமே வேளாண்மையில் ஈடுபட்டு வந்த நிலைக்கு மாறாக மிளகாய், புகையிலை ஆகிய பணப்பயிர்களைப் பயிரிடும்படி போர்ச்சுக்கீசியக் காலனியம் மாற்றிவிட்டது.

இச் செய்திகளை வரலாற்றுப் பேராசிரியர் கதிர்வேல் தமது கட்டுரை ஒன்றில் (1983)குறிப்பிட்டுள்ளார். புவியியல் அடிப்படையில் பொதுவெளியில் இருந்து ஒதுங்கியிருந்த மக்கள் பிரிவை வேளாண்மை உற்பத்தியிலும், அவ்வாறு

உற்பத்திசெய்த பொருட்களை வாணிபம் செய்வதிலும் ஈடுபடும்படி போர்ச்சுக்கீசியக் காலனியம் செய்துவிட்டது.

**ஆங்கிலக் காலனியம்:**

தேரிக்காட்டுப்பகுதியில் நிகழ்ந்துவந்த பனங்காட்டு வேளாண்மையானது பனைமரக்காடுகளில் வாழ்ந்தோரின் சுயதேவைப் பூர்த்திக்கான ஒன்றாக இருந்து பின்னர் பண்டமாற்று வாணிபத்திற்கான மூலப்பொருளாக வளர்ச்சி அடைந்துள்ளது. வாணிபத்தில் பொருள்களின் சுழற்சி முக்கியமான ஒன்றாகும். இச் சுழற்சியில் பாரம்பரியமான நம் சந்தைகள் முக்கியப் பங்காற்றியுள்ளன. இச் சந்தைகள் குறித்த மேலோட்டமான பதிவுகளை மேலே குறிப்பிட்ட உபதேசியார் சவரிராயனின் நாட்குறிப்புகள் வழங்குகின்றன.

இச் சந்தைகளில் பொதுமக்கள் வணிகர்களிடம் இருந்து நேரடியாகத் தமக்கு வேண்டிய பொருட்களை வாங்கிக் கொண்டார்கள். சந்தை நடைபெறாத நாட்களில் நுகர்வோரைத்தேடி வணிகரும் வணிகரைத்தேடி நுகர்வோரும் சென்று பொருட்களைப் பண்டமாற்று செய்துகொண்டனர் அல்லது நாணயங்களைக் கொடுத்துப் பெற்றுக்கொண்டனர். இது சுருங்கிய அளவிலேயே பொருட்களின் இடப்பெயர்ச்சிக்கு உதவும் தன்மையது. எனவே வேளாண் உற்பத்தியும் ஒரு கட்டுக்குள்தான் இருந்தது.

*ஆனால் ஆங்கிலக் காலனியம் இப்பகுதியில் அறிமுகமான பின்னர் இந்நிலை மாறத் தொடங்கியது. பனைத்தொழில் மேற்கொண்டு வாழ்ந்து வந்த நாடார் சமூகத்தில் சில உட்பிரிவினரே நில உரிமையாளராக இருந்த நிலையில் மாற்றம் ஏற்படத் தொடங்கியது. நாடார்கள் தம் உபரியை நிலங்களில் முதலீடு செய்யத் தொடங்கினர். இது குறித்து 1947 இல் வெளியிட்ட திருநெல்வேலி மாவட்டத்தின் விவரச்சுவடி/ கெசட்டியார்) நூலில் பேட் ஒரு செய்தியைப் பதிவிட்டுள்ளார். அதன்படி, 1917க்குமுன் நடந்த நில உரிமை தொடர்பான மறு ஆய்வில் (Resettlement and Resarity) திருநெல்வேலி மாவட்டத்தின் ஒவ்வொரு பகுதியிலும் நாடார் சமூக நிலவுடைமையாளர்களின் எண்ணிக்கை அதிகரித்துள்ளது. (இவ் ஆய்வின் சிறப்பதிகாரியாகப் பணியாற்றியவரும் இவர்தான்). திருநெல்வேலி மாவட்டத்தின் நாங்குநேரி, திருச்செந்தூர் தென்காசி ஆகிய வட்டங்களில் உள்ள பனை விளைஞர்கள் தம்சேமிப்பை நிலங்களில் முதலீடு செய்ததாகவும் பேட் (1917:128) குறிப்பிட்டுள்ளார். இவர் குறிப்பிட்டுள்ள நாங்குநேரி, திருச்செந்தூர் வட்டங்கள் தேரிக்காட்டுப்பகுதிகள் என்பது குறிப்பிடத் தக்கது.*

*நிலங்கள் கிடைக்காவிடில், போக்குவரத்துக்கான வண்டிகள், கருப்புக்கட்டி விற்பனை, இலங்கைக்கு ஏற்றுமதி செய்வதற்காக வெள்ளாடு, செம்மறி ஆடு, கோழி வளர்ப்பு*

என்பனவற்றில் ஈடுபட்டனர். சிலர் குறைந்த அளவு கைமுதலுடன் இலங்கையின் நகரங்களுக்குச் சென்று எழுத்தர்களாகவும் சிறிய அளவிலான கடை வியாபாரிகளாகவும் செயல்பட்டனர். தேயிலை, ரப்பர் தோட்டங்களின் கண்காணிகளாகவும் சிலர் பணியாற்றினர். கிறித்தவ மிஷனரிகளின் துணையால் கல்விகற்ற நாடார்கள் அரசு, ரயில்வே, வணிக நிறுவனங்களில் வேலை வாய்ப்பு பெற்றனர். சட்டம், இறையியல், மருத்துவம், பயின்ற கிறித்தவ சமயம் தழுவியோர் மடகாஸ்கர், நேட்டால், மொரிஷியஸ் நாடுகளுக்குக் கிறித்தவ மிஷனரிகளால் அனுப்பிவைக்கப்பட்டனர். பேட் (*1917:128-129*) குறிப்பிட்டுள்ள இச் செய்திகள் பொருளியல் நிலையில் உபரியை நோக்கி இச்சமூகம் பயணித்ததை நாம் அறியும்படிச் செய்கின்றன.

மேலும் பனைமரத்தின் பயன்பாடுகளை மட்டுமே நம்பியிருந்த வாழ்க்கை முறையில் இருந்து தேரிக்காட்டு மக்கள் தங்களை விடுவித்துக் கொண்டு முன்னேறத் தொடங்கியதை பேட் எழுதியுள்ள இக்குறிப்புகள் உணர்த்துகின்றன. இருந்தபோதிலும் போக்குவரத்திற்கான சாலைகள் தரம் குறைந்தே இருந்துள்ளன. அப்போதைய திருநெல்வேலி மாவட்டத்தின் வருவாய் வட்டங்களில் இம் மாவட்டத்தின் மேற்குப் பகுதியில் உள்ள தென்காசி அம்பாசமுத்திரம் வட்டங்கள் நல்ல சாலைகளைக்

கொண்டிருந்ததாகவும் தேரிக் காட்டுப் பகுதிகள் மோசமான சாலை அமைப்பைக் கொண்டிருந்ததாகவும் அவர் குறிப்பிட்டுள்ளார் (*pate 1917:240-241*).தேரி நிலப்பகுதியிலும் இதனை அடுத்திருந்த மணல் நிறைந்த கடற்கரைப்பகுதியிலும் வண்டிகளுக்குப் பதிலாகப் பொதிமாடுகள் சரக்குகளைச் சுமந்து செல்லப் பயன்படுத்தப்பட்டன. சற்று எடை குறைந்த சுமைகள் தலைச் சுமையாகவும் காவடி போல் கம்பின் இருமுனைகளிலும் கட்டப்பட்டு தோள்ச் சுமையாகவும் ஓட்டமும் நடையுமாகச் சுமை கூலிகளால் சுமந்து செல்லப்பட்டன (மேலது:*241*).

### வாணிபப்பயணம்:

போக்குவரத்து வசதியும் நீர் வளமும் குறைந்திருந்தாலும் தேரிக்காட்டுப் பகுதியானது தன் வேளாண் பொருள் உற்பத்தியை மையமாகக்கொண்ட வாணிபத்தைக் கொண்டிருந்தது. இது குறித்து இனி இங்கு குறிப்பிடும் செய்திகள் வாய்மொழி வழக்காறுகளின் வழிப் பெறப்பட்டவை. சாத்தான்குளம் என்ற தேரிக்காட்டூர்ப் பகுதியில் இருந்து நாசரேத் வழியாக ஆழ்வார்திருநகரி ஊர் சென்று அங்கு ஓடும் பொருநை ஆற்றைக் கடந்து சென்று வாணிபம் செய்து திரும்புவதை வழக்கமாகக் கொண்டிருந்தமை குறித்த செய்திகளைக் 'கர்ணபரம்பரையாகக்' கேட்டறிந்தவர்கள் கூறிய செய்திகளே இங்கு இடம் பெற்றுள்ளன.

*தன் பெயரால் அமைந்த ஒரு வட்டத்தின் தலைநகரமாக சாத்தான்குளம் என்ற ஊர் தற்போது உள்ளது. இதைச் சுற்றி உள்ள சிறிதும் பெரிதுமான கிராமங்கள் தேரிக்காட்டுக்கே உரித்தான பனைமரங்களை மிகுதியாகக் கொண்டவையாக இருந்துள்ளன. இப்பகுதியில் இருந்து பொதி மாடுகளில் சுமை ஏற்றிச் சென்று வாணிபம் திகழ்ந்துள்ளது. இதன் அடிப்படையில் இவ்வாணிபம் பொதிமாட்டு வியாபாரம் என்றழைக்கப்பட்டது. இவ் வாணிபத்தில் கருப்புக் கட்டி, தேரிக்காட்டில் பயிரிடப்பட்ட தானியங்கள் பயறுவகைகள் பருத்தி, வெங்காயம் என்பன பொதிமாடுகளின் துணையுடன் பயணித்துள்ளன.*

*இக் குழுவினர் சுற்று வட்டாரக் கிராமங்களில் இருந்து மாலையில் புறப்பட்டு இரவு தொடங்கும் நேரத்தில் சாத்தான்குளம் வந்து சேர்வர். இங்கு இரவு தங்குவதால் குழுவினருக்கும் மாடுகளுக்கும் நல்ல ஓய்வு கிடைக்கும். மாடுகளில் இருந்து சுமைகளை இறக்கி ஒரே இடத்தில் வைத்துவிட்டு அதைச் சுற்றிலும் படுத்து உறங்குவர். திருடர்களிடம் இருந்து பொருளைக் காப்பாற்றும் வழிமுறைகளில் இதுவும் ஒன்று. சிலம்புக் கம்புகளுடன் முறைபோட்டுக் காவல் காத்தலும் இருந்துள்ளது. அதிகாலையில் மூன்று அல்லது நான்கு மணி அளவில் கண்விழித்து பொழுது புலரும் முன்பே தம் பயணத்தைத்*

தொடங்கிவிடுவர். சாத்தான்குளத்தை விட்டு பன்னம்பாறை விலக்கு, பழங்குளம் பிடாதேரி, தைலாபுரம், ஆனந்தபுரம், சடையங்கிணறு, தோப்பூர் விலக்கு, வாழையடி ஆகிய ஊர்களைக் கடந்து நாசரேத் நோக்கி வருவர். வரும் வழியில் சிறு விவசாயிகளிடம் வேளாண் விளை பொருட்களைப் பண்டமாற்று முறையில் கொள்முதல் செய்துகொள்வதுமுண்டு - நாசரேத் ஊரைக் கடந்ததும் ஆழ்வார்திருநகரி வந்து சேர்வர்.

பொருநை ஆற்றின் தென்கரையில் உள்ள ஊர் ஆழ்வார்திருநகரி. 1838க்கு முன்னர் இது தென்கரைத் தாலுகா என்ற பெயரில் ஒரு வட்டத்தின் தலைநகராக இருந்துள்ளது. பதநீர் இறக்கும் பருவம் முடியும் மே இறுதி அல்லது ஜூன் தொடக்கக் காலத்தில் பொருநை அற்றில் அதிக அளவில் தண்ணீர் ஓடாது. எனவே மாடுகளுடன் ஆற்றைக் கடந்து எதிர்க்கரையில் உள்ள ஆழ்வார் தோப்பை வந்தடைவர். அங்கு சரக்குகளை இறக்கி ஆற்றில் நீராடி, உணவு உண்டு பயணக் களைப்பைப் போக்கிவிட்டு மீண்டும் பயணத்தை ஆழவார் தோப்பிற்குக் கிழக்கே உள்ள ஏரல் என்ற ஊரை நோக்கித் தொடர்வர்.

பொருநை ஆற்றின் வடகரையில் உள்ள ஏரல் ஒரு முக்கிய வாணிபத்தளம். இங்கு சில்லறை வாணிபம் மட்டுமின்றி மொத்த வாணிபமும் நிகழும் - தாம் கொண்டுவந்த

பொருட்களில் பெரும்பகுதியை இங்கு விற்றுவிட்டு சிறு பகுதியுடன் கிழக்கே உள்ள புன்னைக்காயல், பழையகாயல் என்ற கடற்கரை ஊர்களை நோக்கிப் பயணிப்பர். இங்கு பண்டமாற்றாக உப்புக் கருவாடு என்பனவற்றையும் ஏரல், ஆழவார்திருநகரி ஆகிய ஊர்களில் அரிசியையும் பெற்றுக்கொண்டு திரும்புவர். மழைக்காலம் தொடங்கும் முன் மூன்று அல்லது நான்குமுறை இவ் வாணிபப் பயணம் நிகழ்ந்துள்ளது. இவ் வாணிபம் நிகழ்ந்த காலம் குறித்து சிறிது மாறுபட்டக் கருத்துக்கள் கூறப்பட்டன. இருப்பினும் தகவலாளர்கள் கூறிய வாணிபம் நிகழ்ந்த காலமாக இருபதாம் நூற்றாண்டின் முதல் முப்பது ஆண்டுகள் என்று கொள்ள முடியும். இவ் வாணிபமானது பண்டமாற்று முறையிலும் பணவடிவிலும் ஒரு சேர நிகழ்ந்துள்ளது. பனைத் தொழிலுடன் இணைந்து நடந்த வேளாண்மைப் பொருட்கள் முக்கிய வாணிபப் பொருட்களாக மாறி இருந்துள்ளன. இது உழுதொழிலையும் வாணிபத்தையும் இணைக்கும் சரடாக இருந்துள்ளது.

**எச்சங்கள்:**

தேரிக்காட்டினரின் வாணிபப் பயணத்தின் போது, பாதுகாப்பு நோக்கில் சிலம்பப் பயிற்சி மேற்கொண்டதன் எச்சமாக தேரிக்காட்டுப் பகுதியில் சிலம்பம் பயின்றோரும் சிலம்ப ஆசான்களும் குறிப்பிடத் தக்க எண்ணிக்கையில் வாழ்ந்துள்ளனர். இப்பகுதி மக்கள் மத்தியதர வர்க்கமாக

*மாறிய பின்னரும் சிறிது காலம் வரை ஏதேனும் ஒரு பயற்றைக் காலை உணவாகக் கொள்ளும் பழக்கம் இருந்துள்ளது. தற்போது இது பெரும்பாலும் மறைந்துவிட்டது.*

**துணை நூற்கள்:**


*தங்கசாமி சசிகரன் (2002), நாசரேத் வரலாறு (1880-2002).*

*மோதி சந்திரர் (1970), இந்திய வணிக நெறிகள்*

*Jeyaseela Stephen (1998), Portguess in the Tamil Coast.*

*Jeyaseela Stephen (2016), A Meeting of the Minds.*

*Kadhirvel.S (1983), Portuguese Colarial Impact on Agriculture and Trade. Tamil Coast, Westem Colonial Policy. NR.Ray Ed.*

*Pale.H.R. (1917), Tinnevelly District Gazetteer.*

*Pierre Coubert (1972), Local History - Historical Studies Today. Felix Gilbert Ed.*


*"ஓர் உள்ளூர் வணிகவழி"*


*கட்டுரையாளர்: மூத்தப் பேராசிரியர் ஆ.சிவசுப்பிரமணியன்*
*(sivasubramanian@sivasubramanian.in)*
*நாட்டாரியல் ஆய்வாளர்*



*நன்றி - காக்கைச் சிறகினிலே: ஜனவரி - பிப்ரவரி, 2022.*

## 10. ஆசீவக மதம்

— மயிலை சீனி. வேங்கடசாமி

முன்னொரு காலத்தில் நிலைபெற்றிருந்து பின்னர் அழிந்தொழிந்து மறைந்துபோன இந்த மதம் இப்போது முழுவதும் மறக்கப்பட்டிருப்பதால், இதனைப்பற்றி ஆராய்வது அமைவுடைத்து.

பௌத்த, ஜைன, வைதீக மதங்களைப் போலவே இந்த ஆசீவக மதமும் வட இந்தியாவில் தோன்றியது. இந்த மதத்தை உண்டாக்கினவர் மஸ்கரி புத்திரர் என்பவர். பாலி மொழியில் இப்பெயர் மக்கலி புத்த என்று வழங்கப்படுகின்றது. மாட்டுத் தொழுவம் என்று பொருள்படும் 'கோசால' என்னும் அடைமொழி கொடுத்து கோசால மக்கலி புத்த என்றும் இவர் வழங்கப்படுவர். ஏனென்றால், இவர் மாட்டுத் தொழுவத்தில் பிறந்தார் என்று சொல்லப்படுகின்றது. தமிழ் நூல்கள் இவரை மற்கலி என்று கூறும்.

'மக்கலி' என்பது வடநாட்டில் பண்டைக் காலத்தில் இருந்த இரந்துண்டு வாழும் ஒருவகைக் கூட்டத்தாருக்குப் பெயர் என்றும், அந்தக் கூட்டத்தாரைச் சேர்ந்தவர் ஆகையால் இவருக்கு 'மக்கலி புத்திரர்' என்னும் பெயர் வந்ததென்றும்

*சிலர் கூறுவர். 'மக்கலி' என்பது இவருடைய தந்தையின் பெயர், ஆகையால் இவருக்கு மக்கலி புத்திரர் என்னும் பெயர் வழங்கிய தென்று வேறு சிலர் உரைப்பர்.*

*மக்கலி அல்லது மற்கலி என்பவர் ஆருகத (ஜைன) மதத்தை உண்டாக்கிய மகா வீரரும், பௌத்த மதத்தை உண்டாக்கிய கௌதம புத்தரும் உயிர்வாழ்ந்திருந்த அதே காலத்தில் இருந்தவர். மகாவீரர் ஆருகத மதக் கொள்கைகளை உலகத்தாருக்குப் போதித்து வந்த காலத்தில் அவரது புகழையும் செல்வாக்கையும் கேள்வியுற்ற மக்கலி அவரிடம் சென்று அவரைச் சார்ந்திருக்க விரும்பினார். ஆனால் மற்கலியின் மாறுபட்ட ஒழுக்கங்களையும் குணங்களையும் அறிந்த மகாவீரர், அவர் தம்மைச் சார்ந்திருக்க உடன்படவில்லை. ஆயினும், மற்கலி எவ்வாறோ மகாவீரரது உடன்பாடு பெற்று, அவருடன் சில ஆண்டுகள் தங்கியிருந்தார். பின்னர், அவருடன் பகைத்துக்கொண்டு தனியே பிரிந்துபோய் ஒரு புதிய மதத்தை உண்டாக்கினார். அதுதான் 'ஆசீவக மதம்' அல்லது 'ஆஜீவக மதம்' என்பது. ஆருகத மதக் கொள்கைகள் சிலவற்றையும், தாம் உண்மை என்று கண்ட கொள்கைகளையும் திரட்டி மற்கலி இந்த மதத்தை உண்டாக்கியதாகச் சொல்லப்படுகின்றது.*

*சற்றேறத்தாழ கி.மு. 500ல் மற்கலி காலமானார் என்று கருதப்படுகின்றது. இவர் காலஞ்சென்ற பதினாறு ஆண்டு*

களுக்குப் பின்னர் மகாவீரர் வீடு பெற்றார் என்ப. மகா வீரர் வீடுபெற்ற சில ஆண்டுக்குப் பின்னர் கௌதம புத்தர் நிர்வாணம் அடைந்தார். ஆசீவகர், ஆருகதர் (ஜைனர்), வைதீகர், பௌத்தர் ஆகிய இந்த மதத்தவர்களுக்குள் எப்பொழுதும் சமயப்பகை இருந்து கொண்டே இருந்தது.

ஆசீவக மதக் கொள்கைகளைக் கூறும் நூலுக்கு நவகதிர் என்பது பெயர். இந்த நூலில் நில அணு, நீர் அணு, தீ அணு, வளி அணு, உயிர் என்னும் ஐம்பொருள்களைப் பற்றிக் கூறியுள்ள தென்பர். கருமை, நீலம், செம்மை, பொன்மை, வெண்மை, தூய வெண்மை என்னும் அறுவகைப் பிறப்பு உண்டென்பதும், தூய வெண்மை நிறப் பிறப்புத்தான் மிக உயர்நிலைப் பிறப் பென்பதும், இப்பிறப்பினைப் பெற்றவர்தான் வீட்டுலகஞ் சேர்வரென்பதும் இந்த மதக் கொள்கை.

எண்பத்து நான்கு இலட்சம் மகாகல்ப காலம் வரையில் உயிர்கள் பிறந்திறந்து உழலுமென்றும், அந்தக் காலங் கடந்ததும் அவை பாவஞ் செய்திருந்தபோதிலும் வீடுபேறடையுமென்றும், இந்தக் கால நியதியை மாறி புண்ணியஞ் செய்த உயிர்கள் விரைவில் வீடு பேறடையாவென்றும் கொள்கை கொண்டது இந்த மதம் என்பர். இந்தக் கால நியதிக்கு நூலுருண்டையை உதாரண மாகக் கூறுவர்.

*ஒரு நூலுருண்டையைப் பிரித்தால், நூல் எவ்வளவு இருக்கிறதோ அவ்வளவு வரையில்தான் அது நீளுமே தவிர, அதற்குள் குறைவாகவோ அதிகமாகவோ நீளாததுபோல, உயிர்கள் யாவும் மேற்சொன்ன கால நியதிக்குட்பட்டு நடக்கும். நல்லறிவு பெற்று நல்ல செயல்களைச் செய்பவன் விரைவில் வீடுபெறான்; உயிர்களுக்கு நியமிக்கப்பட்ட எண்பத்தினான்கு இலட்சம் மகாகல்ப காலம் வரையில் அவனும் பிறந்திறந்து உழன்றே ஆகவேண்டும். இந்தக் கால நியதி கடந்து வீடுபேற டையும் நிலையில் இருக்கும் ஒருவன் தீயகருமங்கள் செய்து மீண்டும் பிறந்திறந்து உழல விரும்பினாலும் அவன் அவ்வாறு செய்ய இயலாது, ஏனென்றால், காலநியதி கடந்துவிட்ட படியால், அவன் மீண்டும் பிறக்க விரும்பினாலும் அவன் வீடு பேறடைந்துதானாக வேண்டும் என்பன இம்மதக் கொள்கைகளில் சிலவாம்.*

*இந்த மதத் தலைவர்கள் ஆடை யின்றி அம்மணமாகத் திரிவர் என்றும், உணவைக் கையில் உண்பார்கள் என்றும், இன்னின்ன கனவுக்கு இன்னின்ன விளைவு நிகழும் என்று வகுத்துக் கூறுவதில் இவர்கள் தேர்ந்தவர்கள் என்றும் சொல்லப்படுகின்றன.*

மற்கலிக்குப் பூரணர் என்ற பெயரும் உண்டு. களங்கமற்ற ஞானமுடையவராகலின் அவருக்கு இப்பெயர் உண்டாயிற் றென்பர்.

இந்த மதத்தைப் பற்றிய உண்மை வரலாறுகளும் கொள்கைகளும் இப்போது முழுதும் கிடைக்கவில்லை. இப்போது கிடைப்பன எல்லாம் இந்த மதத்தின் எதிரிகளான ஜைனர், பௌத்தர், வைதீகர் என்பவர்களால் எழுதப்பட்டவை. ஆகவே, நடுநின்று கூறாமல் சார்பு பற்றிக் கூறியுள்ளார்கள் என்று கருதப்படுகின்றது.

மணிமேகலை என்னும் பௌத்த நூலிலும் (சமயக்கணக்கர் தந்திறங்கேட்ட காதை), நீலகேசி என்னும் ஜைன நூலிலும் (ஆசீவக வாதச் சருக்கம்), சிவஞான சித்தியார் என்னும் சைவ சமய நூலிலும் (பரபக்கம்: ஆசீவக மதம்) இந்த மதக் கொள்கைகள் எடுத்துக் கூறி மறுக்கப் பட்டுள்ளன. இந்த மதத்தைப் பற்றி நன்கறிய விரும்புவோர்க்கு மேற்சொன்ன தமிழ் நூல்களும் Encyclopaedia of Religion and Ethics by James Hastings என்னும் ஆங்கில நூலும் உதவி புரியும்.

இந்த மதம் தமிழ்நாட்டிலும் பண்டைக்காலத்தில் பரவி யிருந்ததாகத் தெரிகின்றது. தமிழ் நாட்டிலே சமதண்டம் என்னும் ஊரிலே இந்த மதத்தவர் அதிகமாக இருந்ததாக நீலகேசி என்னும் நூலினால் தெரிகிறது. கோவலனுடைய

*மாமனும் கண்ணகியின் தந்தையுமாகிய மாநாய்கன் என்னும் செல்வத்திற் சிறந்த வணிகன் கோவலனும் கண்ணகியும் உயிர்நீத்த செய்தி கேட்டுத் தன் செல்வமெல்லாவற்றையும் தானம் செய்துவிட்டு ஆசீவக மதத்தில் சேர்ந்து துறவு பூண்டதாகச் சிலப்பதிகாரம் கூறுகின்றது.*

*கண்ணகி தாதை கடவுளர் கோலத்*
*தண்ணலம் பெருந்தவத் தாசீவகர் முன்*
*புண்ணிய தானம் புரிந்தறங் கொள்ளவும்*
*(நீர்ப்படை காதை)*

*மணிமேகலை, நீலகேசி என்னும் நூல்களில் ஆசீவக மதமும் நிகண்ட மதமும் (நிகண்டம் = நிர்க்கந்தம் = திகம்பர ஜைனம்) வேறுவேறு மதங்கள் என்று சொல்லியிருக்க, பிற்காலத்து நூலான சிவஞான சித்தியாரியில், இந்த மதம், ஜைன மதத்தின் பிரிவுகளில் ஒன்றாகிய திகம்பர ஜைன மதம் என்று தவறாகக் கூறியிருக்கின்றது. இந்தத் தவற்றினை ஞானப் பிரகாசர் என்னும் உரையாசிரியர் எடுத்துக்காட்டியிருக்கின்றார். "திகம்பரமொப்பினும் அநேகாந்தவாதிகளாகிய நிர்க்கந்தரல்லாத ஆசீவகனென்க" என்று எழுதி, ஆசீவக ஜைனரில் திகம்பரர் அல்லது நிர்க்கந்தரைப் போன்ற கொள்கையுடையவரெனினும், அவரின் வேறானவர் என்று விளக்கியுள்ளார். ஆசிவகரைத் திகம்பர ஜைனரென்று பிற்காலத்தில் தவறுபடக் கருதியது*

*தமிழ் நாட்டில் மட்டுமன்று; வடநாட்டிலும் இவ்வாறே தவறுபடக் கருதப்பட்டு வந்திருக்கிறது.*

*இராச இராச சோழன் காலத்தில் பொறிக்கப்பட்ட சில சாசனங்களில் ஆசுவகடமை என்னும் ஆயம் (வரி) குறிப்பிடப் பட்டிருப்பதைக் கொண்டு, சிலர் ஆசீவக மதத்தாருக்கு அக்காலத்தில் ஆயம் விதிக்கப்பட்டிருந்ததாகக் கூறுவர். இதை மறுத்து, சாசனங்களில் கூறப்பட்டுள்ள ஆசுவகடமை என்பது செம்பு அல்லது பித்தளைப் பாத்திரங்களைச் செய்யும் கன்னாருக்கு விதிக்கப்பட்ட வரியைக் குறிக்குமே தவிர, ஆசீவக மதத்தாருக்கு விதிக்கப்பட்டதாகக் கூறுவது தவறு என்று பேராசிரியர் திரு. சக்கரவர்த்தி நயினார் அவர்கள் தாம் பதிப்பித்துள்ள நீலகேசியின் ஆங்கில முன்னுரையில் விளக்கமாக எழுதியிருக்கின்றார்கள். ஆகையால், ஆசீவக மதத் தாருக்கு இதை விதிக்கப்பட்டிருந்ததாகக் கூறுவது தவறாகும்.*

*கட்டுரை வெளியான இதழ்: திருவிளக்கு, பிப்ரவரி 1939*

*கட்டுரை இடம் பெற்றுள்ள நூல்:*
*மயிலை சீனி. வேங்கடசாமி ஆய்வுக் கட்டுரைகள்: தொகுதி - 6*
*மக்கள் வெளியீடு, முதற்பதிப்பு -மே 2002, பக்கம்: 102-105*
-----



புத்தர் பரிநிர்வாணம் அடைந்ததைக் காட்டும் காந்தாரச் சிற்பத்தில் ஆசீவகர் ஒருவரின் உருவம் காட்டப்படுகிறது. புத்தரின் சீடரான மகாகாஸ்யபர் புத்தர் பரிநிர்வாணம் அடைந்த செய்தியை ஆசீவகர் ஒருவர் மூலம் தெரிந்து கொள்வதாக சிற்பச் செய்தி கூறுகிறது. [சிற்பத்தின் காலம்: குஷான வம்சம் - காலம் கி.பி 2 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 3 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி]

புத்தர் பரிநிர்வாணம் அடைந்ததைக் காட்டும் காந்தாரச் சிற்பத்தில் ஆசீவகர் ஒருவரின் உருவம் காட்டப்படுகிறது. புத்தரின் சீடரான மகாகாஸ்யபர் புத்தர் பரிநிர்வாணம் அடைந்த செய்தியை ஆசீவகர் ஒருவர் மூலம் தெரிந்து கொள்வதாக சிற்பச் செய்தி கூறுகிறது. ~தேமொழி

[சிற்பத்தின் காலம்: குஷான வம்சம் - காலம் கி.பி 2 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி முதல் 3 ஆம் நூற்றாண்டின் முற்பகுதி]

## 11. தம்பி நான் ஏது செய்வேனடா – பரலி சு. நெல்லையப்பர்

— ரெங்கையா முருகன்

*பாரதிக்காக வாழ்ந்த மூவரில் தலைமகனாக கருதப்படுபவர் பரலி சு. நெல்லையப்பர். பாரதி பாடல்களின் நுட்பத்தை அறிந்த காரணத்தால் இந்திய மக்களிடையே பல்வேறு பத்திரிகைகள் மூலம் சுதந்திர உணர்ச்சிகளைப் பரப்பியவர் நெல்லையப்பர். வீரக்கனல் சுப்பிரமணிய சிவாவையும் சுதேசி பிழம்பு வ.உ.சிதம்பரனாரையும் இணைத்து வைத்த பெருமைக்குரியவர் நெல்லையப்பரின் தமையனார் சண்முக சுந்தரம் பிள்ளை.*

*1907 ம் ஆண்டு நெல்லையப்பர் வ.உ.சி. வீட்டுத் திண்ணையில் அமர்ந்து எழுதிக் கொண்டிருக்க, பாரதியார் நெல்லையப்பரின் கையை பற்றி, "என்ன ஓய்! எழுதுகிறீர்? எழுதியது போதும்" என்று உரிமையோடு அழைத்தார். முன் பின் பார்த்தறியாத ஒருவர் தம் கையை பற்றி இழுக்கிறாரே என்று நெல்லையப்பர் அவருடன் உலவச் சென்று விட்டார். பாரதிக்கு உற்ற நண்பராக மாறிய இவரே, பிற்காலத்தில் அவரது கவிதைகளை வெளியிடும் பதிப்பாளராக திகழ்ந்தார் என பாரதிக்கும் தெரியாது.*



வ.உ.சி.க்கு வெள்ளையர் அரசாங்கம் இரட்டை ஆயுள் தண்டனை விதித்த பிறகு வ.உ.சி.யின் மனைவி மீனாட்சி அம்மையாரும் , பரலி சு. நெல்லையப்பரும் தண்டனை குறைப்பு மேலீட்டிற்காக சென்னை வந்து பல வக்கீல்களைச் சந்தித்துப் பேசிய போது அனைவரும் மேல்முறையீடு செய்ய இடமில்லை என்று கையை விரித்து விட்டனர். இச் செய்தியை சிறையிலிருந்த வ.உ.சி.க்கு நெல்லையப்பர் தெரிவித்த போது, " வக்கீலாய் நின்று வழிப்பறியே செய்கின்ற திக்கிலார்" என்று சோகம் ததும்பும் வெண்பா பாடல்களை நெல்லையப்பருக்கு வ.உ.சி. எழுதி அனுப்பினார். வ.உ.சி.க்கு சிறையில் இழைக்கப்பட்ட செக்கிழுத்தல், கல்லுடைத்தல் போன்ற

*துன்பங்களைக் கண்டு வருந்தி பாரதியின் இந்தியா பத்திரிக்கையில் 28.01.1908 ல் "துன்பம் சகியான்' என்ற புனை பெயரில் எழுதி வெளி உலகுக்குக் கொண்டு வந்தவர் பரலி. சு. நெல்லையப்பர். இந்தியாவில் வந்த இவருடைய முதல் கட்டுரையும் இதுவே.*

*"தேசபக்தரான ஸ்ரீமான் சிதம்பரம் பிள்ளை ராஜத்துரோக ஜாதித்துவேஷக் குற்றங்கள் சாட்டப்பட்டு, ஆறு வருடம் தீவாந்திர சீக்ஷை விதிக்கப்பட்டிருக்கிறார். தற்சமயம் சிறைப்படுத்தியிருக்கும் கோயம்புத்தூர் ஜெயில் அதிகாரி அவரைக் கைகால் விலங்கிட்டுக் கேவலம் மிருகம் போல் எண்ணெய் ஆட்டும் செக்கு இழுக்கும்படி செய்திருக்கிறாராம். அந்தோ! இக்கொடிய துன்பத்தை நினைக்கும் போது நெஞ்சு உருகுகின்றதே. இங்கு எழுதும் போதே நடுங்குகின்றதே! அக் கொடும் துன்பத்தைச் சகிக்கும் தேசபக்தர் பாடு எங்கனமோ? கடவுளே அறிவார்". கைதிகட்கு எத்தனையோ விதமான வேலை இருக்க, இத்தேச பக்தருக்கு நாற்கால் மிருகங்களும் துன்புறக்கூடிய எண்ணெய் இயந்திரம் சுழற்றும் வேலையையா கொடுக்க வேண்டும்? அவர் கைகால்கட்கு விலங்கிடுவதேனோ? என்று நெஞ்சுருக எழுதுகிறார்.*

*கோவைச் சிறையில் வ.உ.சி. இருந்த போது கலெக்டர் ஆஷ் சுடப்படுகிறார். அச் சமயம் நெல்லையப்பரையும்*

*சந்தேகத்தின் பேரில் பிரிட்டிசார் தேடிவருகின்றனர். நெல்லையப்பரோ மாறுவேடத்தில் கோவை சென்று பாரதியார் தந்த கவிதைகளை வ.உ.சி.யிடம் இரகசியமாக சேர்க்கும் பணிகளைச் செய்கிறார். கோவை வழக்கறிஞர் , பெரியபுராண உரையாசிரியர் சி.கே.சுப்பிரமணிய முதலியார் உதவியுடன் கோவை பேரூர் அருகே ஆசிரமம் ஒன்றை அமைத்துக் கொண்டு சாமியார் போல் செயல்பட்டு சிறையிலிருந்த வ.உ.சி.க்கு பல உதவிகளைச் செய்தவர். நெல்லையப்பர் வேண்டுகோளுக்கிணங்க வ.உ.சி. தனது சுயசரிதையை அகவற்பாவில் எழுதினார். இதனை வ.உ.சி. குறிப்பிடுகையில்,*

*"பூவுலகமதனைப் பொருத்தி நின்று*
*தேவுலகதனிற் சிறந்த உலகின்*
*நினைவோடு நிற்கும் நெல்லையப்பர்"*

*என்று எழுதியுள்ளார்.*

*வெ. சாமிநாத சர்மா நெல்லையப்பரின் கோவை வாசத்தைப் பின்வருமாறு குறிப்பிடுகிறார்: "கப்பலோட்டிய தமிழன் வெஞ்சிறையில் வாடிக் கொண்டிருந்த இடம் கோயமுத்தூர் சிறை. சிறைக்கு வெளியே சிதம்பரனாருக்கு உற்ற துணை நெல்லையப்பர். ஆனால் அவருக்கோ தலைமறைவு வாசம். எப்படிச் சிறைச்சாலைச் சுவர்களைக் கடந்து உள்ளே போய் வெளியே வருவாரோ? சிதம்பரனாரைப் பேட்டி காண்பார். சிறு சிறு காகிதத் துண்டுகளில் அவர் குறித்துக் கொடுக்கும்*

செய்திகளைப் பெற்றுக் கொள்வார். அவற்றின்படி வெளியே வந்து செயலாற்றி வ.உ.சி.யின் திட்டங்களை நிறைவேற்றுவார்.இப்படி ஒரு வருட காலம் நடந்தது". 1910 ம் ஆண்டு கர்மயோகி இதழில் "ஸ்ரீமான் தூத்துக்குடி சிதம்பரம் பிள்ளையின் சந்திப்பு" என்ற கட்டுரையை வ.உ.சி. சிறையிலிருந்த போது எழுதினார். வெள்ளைக்கார கப்பல் கம்பெனி சுதேசி கப்பல் கம்பெனியை சீரழிக்கத் தொடங்கிய போது நெல்லையப்பர் வ.உ.சி. குடும்பத்தாருடன் உறுதுணையாக நின்று சுதேசி கப்பல் கம்பெனி சொத்துக்களைப் பரிபாலிக்க உதவி செய்தவர். வ.உ.சி. நெல்லையப்பர் குறித்து எழுதிய பாடல்கள் இருபதுக்கும் மேலாகும். ஒரு பாடலை மட்டும் இங்கு குறிப்பிடலாம்.

"அப்பனும் நீ ஐயனும் நீ ஆதியும் நீ யாவையும் நீ
செப்பமுடன் செப்பியதைச் செய்வாயேல் – தப்பில்
மனையாள் தன் மாதாவை மன்னிநிற்க மாயேன்
மனையெய்தும் மாதம் வரை."

இந்தப் பாடல் மூலம் நெல்லையப்பர் வ.உ.சி. குடும்பத்துடன் எந்த அளவுக்கு உறுதுணையாக இருந்துள்ளார் என்று புரிய வருகிறது.

நெல்லையப்பர் தனக்காக வாழாமல் வ.உ.சிக்கும், பாரதிக்காகவும் வாழ்ந்தவர் என்பார் சாமிநாத சர்மா. வ.உ.சி.யினுடைய சரித்திரத்தை நெல்லையப்பர் எழுத வேண்டி பலரும் விரும்ப அதற்கிசைந்து 1944 ஆம் ஆண்டு

*திரு.வி. க. முன்னுரையுடன் வ.உ.சி. சரித்திரத்தை வெளியிட்டார். வ.உ.சி.யைக் கலகக்காரராகவும், சுப்பிரமணிய சிவாவை பைத்தியக்காரனாகவும், பாரதியாரை பிழைக்கத் தெரியாதவராகவும் தமிழக மக்கள் கருதி வந்த காலத்தில் பாரதியாருடைய வந்தேமாதரப் பாடல்களை ஓசை படாமல் ஆயிரக்கணக்கில் அச்சிட்டு தமிழகத்தில் சுதந்திர தாகத்தைப் பரப்ப வழி செய்தவர் நெல்லையப்பர். வெள்ளையர்களின் கண்களின் மண்ணைத் தூவி பாரதியின் பாடல்களை வந்தேமாதரம் பாடல்கள் என்று தலைப்பிட்டு வெளியிட்டால் பிரிட்டிசாரின் தணிக்கைக்கு உட்படும் என்று நினைத்து நாட்டுப் பாடல் என்ற தலைப்பில் வெளியிட்டார். 1917 ம் ஆண்டு பாரதியின் பாடல்களைத் தொகுத்து கண்ணன் பாட்டு, நாட்டுப் பாட்டு, பாப்பா பாட்டு, முரசு பாட்டு நெல்லையப்பரின் தன்னடக்கமான முன்னுரையுடன் வெளியிட்டார்.*

*நெல்லையப்பருக்கு 19-07-1917 ம் ஆண்டு பாரதியார் புகழ்மிக்க கடிதம் ஒன்றை எழுதினார். ”எனதருமைத் தம்பியாகிய ஸ்ரீ நெல்லையப்ப பிள்ளையைப் பராசக்தி நன்கு காத்திடுக! என்று ஆரம்பித்து தம்பி- நான் ஏது செய்வேனடா! தமிழை விட மற்றொரு பாஷை சுகமாக இருப்பதைப் பார்க்கும் போது எனக்கு வருத்தமுண்டாகிறது. தமிழனை விட மற்றொரு ஜாதியான் அறிவிலும் வலிமையிலும் உயர்ந்திருப்பது எனக்கு சம்மதமில்லை. தமிழச்சியை*

*காட்டிலும் மற்றொரு ஜாதிக்காரி அழகாயிருப்பதை கண்டால் என் மனம் புண்படுகிறது! என்ற பாரதியார் எழுதிய மாபெரும் மடலுக்கு உரியவராக இருந்தார் என்றால் பரலி சு. நெல்லையப்பருக்கு இதைவிட என்ன பேறு கிட்டும்.*

*பாரதியார் ஒரு தடவை சோர்ந்த முகத்துடன் வந்து நெல்லையப்பரைத் தனியாக அழைத்துச் சென்று 'ஏதாவது பணம் இருக்கிறதா? என்று கேட்க, அப்பொழுது தன்னிடமிருந்த ஒரு ரூபாயை பாரதியிடம் கொடுத்தார். அந்த அளவுக்கு பாரதி நெல்லையப்பரைத் தம்பியாகவே மதித்து உரிமையுடன் உதவி கோருவார். 1921 ம் ஆண்டு பாரதியார் மறைந்த கடைசி நாளில் அவருடைய கடைசி நிமிடத்தில் உடனிருந்து அவரது பொன்னுடலைச் சுமக்கும் பேறு பெற்றவர் நெல்லையப்பர். சூரியோதயம், விஜயா,கர்மயோகி, லோகோபகாரி, தேசபக்தன் போன்ற பல்வேறு இதழ்களில் முத்தாய்ப்பான பங்களித்தவர். அடிசன் கம்பெனியில் வேலை பார்த்துக் கொண்டிருந்த நாரண துரைக்கண்ணனை பத்திரிகை உலகில் அறிமுகப்படுத்தியவர். ஜீவா என்றழைக்கப்படும் நாரண துரைக்கண்ணன், மாஜினி என்றழைக்கப்படும் ர.ரங்கசாமி போன்றோருக்குப் பத்திரிக்கை வழிகாட்டி இவரே. விகடன் பெயருக்குப் பொருத்தமாய் நகைச்சுவையாய் யாரேனும் எழுதமாட்டார்களா என்று எஸ்.எஸ். வாசன் ஏங்கிக்*

*கொண்டிருக்கும் வேளையில் கல்கியை வாசனுக்கு அறிமுகப்படுத்தியவர் நெல்லையப்பர்.*

*சைதாப்பேட்டை காரணீசுவரர் கோவில் தெருவில் கு. மகாலிங்கம் என்பவரால் சிறப்பாக நடத்தப்பட்டு வரும் காந்தி வாசக சாலை என்னும் நூலக வாசக சாலையை தொடங்கி வைத்தவர் நெல்லையப்பர். 1954 ம் ஆண்டு பாரதியாரின் மகள் சகுந்தலா பாரதி அன்றைய தமிழக முதல்வர் காமராசரை சந்தித்து எனது தந்தைக்கு ஒப்பான நெல்லையப்பர் குரோம்பேட்டை ராஜாஜி தெருவில் குடிசையில் தங்கி வறுமையில் வாடுகிறார் என்று கூறி அவருக்கு உதவி செய்ய வேண்டிக் கேட்க , உடனடியாக குரோம்பேட்டை நெமிலிச்சேரி புறம்போக்கில் 3ஏக்கர் 18 செண்ட் கொண்ட நிலத்தை காமராசர் ஒதுக்கிக் கொடுத்தார்.*

*அந்த நிலத்தின் ஒரு பகுதியை, குரோம்பேட்டை பகுதியில் வசிக்கின்ற ஏழைக் குழந்தைகள் படித்துப் பயன் பெறும்வகையில் இரண்டு கிரவுண்டு இடத்தை (29.11.1967 ல்) இனாமாக கொடுத்து, பரலி சு. நெல்லையப்பர் நினைவாக அமைக்கப்பட்டு இயங்கி வந்த பள்ளிக்கூடம் கடந்த 20 வருடங்களாக பள்ளிக்கூடம் இயங்காமல் மூடப்பட்டுள்ளது. இந்த பள்ளிக்கூடம் பல்லாவரம் நகராட்சிக்கு உட்பட்ட குரோம்பேட்டை பாரதிபுரம் 2வது தெருவில் இயங்கி வந்தது.*

*பரலி.சு.நெல்லையப்பர் எழுதிய நூல்கள்:*

*1. பாரதியார் சரித்திரம்*

*2. வ.உ.சிதம்பரம் பிள்ளை சரித்திரம்*

*3. பாரதி வாழ்த்து*

*4. நெல்லைத் தென்றல்*

*5. உய்யும் வழி*

*6. தமிழ்த் திருமண முறை*

*7. ராதா ராணி (மொழிபெயர்ப்பு)*

*8. ஜோடி மோதிரம் (மொழிபெயர்ப்பு)*

*9. சுவர்ணலதா (மொழிபெயர்ப்பு)*

*10. மகாத்மா காந்தியின் சுயராஜ்யம் (மொழி பெயர்ப்பு)*

*11. சிவானநந்தர் உபதேசமாலை*

*பதிப்பித்த நூல்கள்:*

*1. பாரதியின் கண்ணன் பாட்டு*

*2. நாட்டுப்பாட்டு*

*3. பாப்பா பாட்டு,முரசு பாட்டு, குயில்பாட்டு, ராஜாஜியின் ஆத்மசோதனை, பி.பி.சுப்பையாவின் மாதர் கடமை, திருவாசகம் (மலிவுப்பதிப்பு) போன்றவை.*

*பெரியவர் வ.உ.சி.க்கு 21.12.1939ல் சிலை வைத்த போது பஞ்சகம் பாடினார்.*

*"ஊக்கமும் வலிவும் குன்றி*
*ஒளி இழந் துலகில் நீண்ட*

தூக்கத்தில் வீழ்ந்த நாட்டைத்
துயிலெழச் செய்தாய் ஐய!
பாக்கியம் பெருகி நாட்டார்
பாரினில் உயரும் வண்ணம்
தூக்கிய வினைகள் செய்தாய்!
துணிவு மிக்குடைய கோவே!
பொற்சிலை வைத்திங் குன்னைப்
போற்றிட விரும்புகின்றோம்!
கற்சிலை நாட்டி இன்று
காண்கிறோம்! கலைவல் லோனே!
நற்செயல் பெரிதும் செய்தாய்
நாட்டினை அகத்திற் கொண்டு உன்
நற்பெயர் நிலவி நிற்கும்
ஞாலமுள்ளளவும் வாழி!"

வீரச் சிதம்பரம் விதைத்து, பாரதி பாட்டிற் பழுத்த பரலி சு. நெல்லையப்பரின் தியாகத்தை நினைவு கூர்வோம்.

உதவிய நூல்கள்:
அ.மகாதேவன் எழுதிய தியாக ஒளி அமரர் பரலி சு.நெல்லையப்பர்.
பெ.சு.மணி எழுதிய கட்டுரைகள்.

## 12. தமிழ்ச் சொத்தெழுதிச் சென்ற பாட்டன்

— இறை.மதியழகன்

"உண்ணச் சிறிது போதும், உறங்கப் படுக்கை போதும்,
எண்ணப் பொழுது வேண்டும், எழுத உரிமை வேண்டும்"
என்று தன்னை உள்ளிருந்து இயக்கும் குரலுக்குச் செவிமடுத்து, அயராது இயங்கி, 500க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியும், "அன்னை மொழியின்றி அன்னிய மொழி இல்லை" என்ற முழக்கத்துடன் தமிழ்நெறித் திருமணங்களுக்குப் புதிய முறைவகுத்து 4000க்கும் மேற்பட்ட திருமணங்களை நடத்திவைத்தும் வாழ்ந்து மறைந்த இளங்குமரனாரின் வாழ்க்கையையும் தமிழ்ப்பணிகளையும் களப்பணிகளையும் ஒரு கோட்டுச் சித்திரமாக இக்கட்டுரையில் அளிக்க முயல்கிறேன்.

இளங்குமரனார் திருநெல்வேலி மாவட்டம் வாழவந்தாள்புரத்தில் 1927, ஜனவரி 30 அன்று பிறந்தார். இளங்குமரனாரின் தந்தை இராமு. அவர் எப்போதும் படித்துக் கொண்டே இருந்ததால் 'படிக்க இராமு' என்று ஊர்மக்களால் அழைக்கப்பட்டவர். தாயார் வாழவந்தம்மையார்.

*திருக்குறளை 12 வயதிலும், தொல்காப்பியத்தை 16 வயதுக்குள்ளும் முழுமையாகக் கற்று, 18 வயதில் சங்க இலக்கியத்திலும் நல்ல தேர்ச்சி பெற்றார். ஆழ்வார் பாடலில் கிருட்டிணனுடைய பெயர் 'இளங்குமரன்' என்று தமிழில் குறிப்பிடப்பட்டிருப்பதை அறிந்து, இளம் வயதிலேயே தனித்தமிழ்ப் பற்றினால் இளங்குமரன் எனப் பெயரை மாற்றிக்கொண்டார்.*

*இளங்குமரன் எட்டாம் நிலை படித்த முடித்தவுடன் ஈராண்டு ஆசிரியர் பயிற்சி முடித்து வாழவந்தாள்புரத்தில் உள்ள பள்ளியிலேயே 1946-ஆம் ஆண்டு தனது ஆசிரியப் பணியைத் துவங்கினார். அதே ஆண்டு 16-ஆவது வயதில், செல்வம் அம்மையாரை மணந்து மணவாழ்க்கையையும் துவங்கினார். அந்தப் பள்ளி மூடப்படும் சூழல் உண்டானபோது இளங்குமரனாரே தனது சேமிப்பிலிருந்து அந்தப் பள்ளியை வாங்கி அதில் பணிபுரிந்து கொண்டே பள்ளியைச் சிலகாலம் நடத்தி வந்தார்.*

*பின்னர் 1951-ஆம் ஆண்டு கரிவலம்வந்தநல்லூரில் உயர் நிலைப்பள்ளியில் தமிழாசிரியராகப் பணியில் சேர்ந்தார். ஆசிரியப் பணியோடு நிற்காமல் மேடைப் பேச்சு, பட்டிமன்றம், திருமணங்கள் நடத்தி வைப்பது எனத் தமிழ்வலம் வந்தார். தலைமை ஆசிரியரோ பெருஞ்சினம் கொண்டார். இளங்குமரனாரை அழைத்து*

*அவற்றையெல்லாம் விட்டுவிடச் சொன்னார். ஆனால் இளங்குமரனார் அப்பள்ளியில் பணியாற்றுவதை விட்டுவிட்டார். பிறகு, 6 ஆண்டுகள் தளவாய்புரத்திலும் மதுரை திருநகர்ப் பகுதியிலுள்ள பள்ளியிலும் சுமார் 27 ஆண்டுகள் தமிழாசிரியராகப் பணியாற்றிக் கொண்டே இளங்குமரனார் செய்த தமிழ்ப் பணிகள் கணிசமானவை.*

*அப்பணியிலிருந்து 1985ஆண்டு விருப்ப ஓய்வு பெற்று, மதுரைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறைத் தலைவராக இருந்த பேராசிரியர் தமிழண்ணலின் அழைப்பின் பேரில், தமிழியப்புல ஆய்வறிஞராகவும், வருகைதரு பேராசிரியராகவும் பணியாற்றத் தொடங்கினார். ஆசிரியராகப் பணியாற்றினால் பெறக்கூடியதைவிடக் குறைவான ஊதியம் என்றபோதும்கூட ஆய்வின் மீதிருந்த பேரார்வத்தால் அப்பணியில் இணைந்தார். "செல்வம் என்பது சிந்தையின் நிறைவே" என்ற உண்மைப் பொருளை அந்தச் செந்தமிழ் அந்தணர் உணர்ந்திருந்தார்.*

*மதுரைக் காமராசர் பல்கலைக்கழகத்தில் 5 ஆண்டுகள் பணிபுரிந்து பின் 62-ஆம் வயதில் பணிஓய்வு பெற்ற நாளை "முழுதுறு பொதுவாழ்வைத் துவங்கிய நாள்" என்று அவர் குறிப்பிடுவது, தன்னை முழுமையாகப் பொதுவாழ்வுக்கு அர்ப்பணிக்கும் நாளுக்காகக் காத்திருந்த அவரது ஆழ்மன ஏக்கத்தை வெளிப்படுத்துகிறது.*

'செந்தமிழ்ச் செல்வி', தமிழ்ப் பொழில்' ஆகிய இரு இதழ்களிலும் ஆசிரியர் குழுவில் இணைந்து சீரிய எழுத்துப் பணியில் தொடர்ந்து ஈடுபட்டார். குளித்தலையில் கா.சு.பிள்ளை நினைவுக் கூட்டங்கள் உட்பட பல்வேறு இலக்கியக் கூட்டங்களில் நூற்றுக்கும் மேற்பட்ட சொற்பொழிவுகளை வழங்கியிருக்கிறார். தமிழகத்தில் பல்வேறு பகுதிகளில் இவர் ஆற்றொழுக்காக வழங்கிய பொழிவுகள் (சொற்பொழிவைப் பொழிவு என்றே இளங்குமரனார் குறிப்பிடுவது வழக்கம்) ஆயிரக்கணக்கில் இருக்கக்கூடும்.

பின்னாளில் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தால் தொடங்கப்பட்ட பல சீரிய திட்டங்களுக்கு இளங்குமரனார் பெரும்பங்காற்றினார். 'அகர முதலி" திட்டத்தின் ஆய்வுக்குழு உறுப்பினர், 'சுவடிப் புல'த்தில் கருத்துரைஞர் குழு உறுப்பினர், 'இராசராசன் விருது'க்கான தேர்வுக்குகுழு உறுப்பினர் போன்ற பல பொறுப்புகளில் பணியாற்றினார்.

தமிழுக்கு இளங்குமரனாரின் மிக முக்கியக் கொடையாக கருதப்படுபவை 550-க்கும் மேலான எண்ணிக்கையில் அவர் வெளியிட்டிருக்கும் நூல்கள். இவ்வளவு நூல்களை ஒருவர் எழுத இயலுமா என்று மலைப்பாக இருக்கலாம். இந்த எண்ணிக் கை துல்லியமானதுதானா என்ற ஐயமும் எழலாம்.







இளங்குமரனார், 1962-64 மூன்று ஆண்டுகளில் மட்டும் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கை 64 என்பதையும், 2009-ல் வெளியான தன்வரலாற்று நூலான 'ஒரு புல்' நூலின் முதல் பகுதியில் அவரது 330 நூல்களை அவர் பட்டியலிட்டிருப்பதையும், தனது 75-ஆவது அகவை நிறைவு

*நாளில், மூன்று ஆண்டுகளுக்கு முன்பே திட்டமிட்டு 81 நூல்களை இயற்றி, மாபெரும் வெளியீட்டு நிகழ்வை நடத்தினார் என்ற தகவல்களையும் ஒன்று சேர்த்துப் பார்த்தால் 550 என்ற அந்த எண்ணிக்கையைப் பற்றி இருந்த ஐயம் நீங்கிவிடும்.*

*அவர் கொடையாக விட்டுச் சென்ற நூல்கள் நூற்றுக்கணக்கில் இருப்பினும் அவற்றுள் ஒரு சிலவற்றைக் குறிப்பிடத்தக்கக் காரணங்களுக்காக இங்கு சற்று விரிவாகக் காண்பது பொருத்தமானதாக இருக்கும்.*

*தமிழின் ஐம்பெருங்காப்பியங்களில் ஒன்றான, கி.பி. 10-ஆம் நூற்றாண்டுக் காப்பியமான, குண்டலகேசியில் நமக்குக் கிடைத்திருப்பவை 19 பாடல்கள் மட்டுமே. குண்டலகேசி தொடர்பான பிற இலக்கியங்களை ஆராய்ந்து, அதனடிப்படையில் 1127 பாடல்களைத் தானே இயற்றி, அக்காப்பியத்தை மீட்டுருவாக்கம் செய்து தந்திருக்கிறார். அதற்கு இளங்குமரனார் கையாண்ட அணுகுமுறை தனித்துவமிக்கது.*

*குண்டலகேசி ஒரு பௌத்த சமய நூல். அதற்கு எதிரான தருக்க நூலாக வெளியானது ஐஞ்சிறுங் காப்பியங்களில் ஒன்றான சமண சமய நூல் 'நீலகேசி'. நீலகேசி முழுமையாகக் கிடைத்திருக்கிறது. நீலகேசியை ஆராய்ந்து அதன்*

அடிப்படையில் புனைவுக் காப்பியமாகக் குண்டலகேசியை மீட்டுருவாக்கி 1958-ஆம் ஆண்டு மதுரை அங்கயற்கண்ணி ஆலயத்தில் வெளியிட்டார் இளங்குமரனார். இந்த நூலுக்குத் தமிழறிஞர் சோமசுந்தர பாரதியார் வாழ்த்துரை வழங்கியிருக்கிறார். இந்த நூலுடன் சிங்கப்பூருக்கும் ஒரு வலுவான தொடர்புண்டு.

குண்டலகேசி நூலுக்குப் புரவலராக இருந்து வெளியிட்டவர் சிங்கப்பூரைச் சேர்ந்த கோவலங்கண்ணனார். இவர் பாவாணர் அறக்கட்டளையை நிறுவியவர். இந்த நூல் மட்டுமன்றி இளங்குமரனாரின் 'அகல்' எனும் ஆராய்ச்சி நூலையும், வாழ்க்கை வரலாற்று நூலின் முதல் தொகுதியையும், 'தேவநேயப்பாணம்' என்ற பன்னூல் தொகுதிகளையும் வெளியிட்ட பெருமையும் சிங்கைக் கோவலங்கண்ணனாருக்கே உரியது.

குண்டலகேசியைப் போலவே பெருமுயற்சி செய்து இளங்குமரனார் மீட்டுருவாக்கம் செய்த இன்னொரு நூல் 'காக்கைப்பாடினியம்'. தொல்காப்பியத்துக்குப் பின் இயற்றப்பட்ட அரிய இலக்கண நூல். பெண்பால் புலவர் ஒருவர் இயற்றிய உலகின் முதல் இலக்கண நூல்.

இலக்கிய உரையாசிரியர்களின் உரைகளில் எங்கெல்லாம் தமிழ் இலக்கண நூற்பாக்கள் மேற்கோள்

காட்டப்பட்டுள்ளதோ அவை அனைத்தையும் (20000-க்கும் மேற்பட்டவை) தேடியெடுத்துத் தொகுத்து அகரவரிசைப்படுத்தி 'மேற்கோள் விளக்க நூற்பா அகரவரிசை' என்னும் ஒரு நூலை இளங்குமரனார் வெளியிட்டார்.

அதன் பின்னர், அந்த நூலில் இருக்கும் நூற்பாக்களை, இயற்றிய ஆசிரியர் பெயரால் அடைவு செய்து காக்கைப்பாடினியார் நூற்பாக்களைத் தனியாக எடுத்தார். அந்நூல் யாப்பிலக்கணத்தை மட்டுமே வரையறுத்த நூல் என்பதைக் கண்டறிந்து, எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை, பா, இனம், ஒழிபு என யாப்பிலக்கண வைப்பின்படி வகைப்படுத்தி உரையும் வழங்கி ஒப்படைத்திருக்கிறார் இந்த முதுமுனைவர். இந்த நூலுக்கு மூதறிஞர் வ.சுப.மாணிக்கனார் அணிந்துரை வழங்கியிருக்கிறார்.

தான் இயற்றிய நூல் ஒன்றுக்கு முன்னுரை வாங்க, பாவேந்தர் பாரதிதாசனை ஒருமுறை சென்று சந்தித்திருக்கிறார் இளங்குமரனார். அப்போது "எங்கே, நீ எழுதிய பாட்டொன்று சொல்!" எனப் பாவேந்தர் கேட்க, 'களிற்றானைக் கூட்டங்கள்' என்று தொடங்கும் ஒரு பாடலைப் பாடிக் காண்பித்திருக்கிறார்.

“இது களவழி நாற்பது போல் இருக்கிறதே" என்று பாராட்டிவிட்டு, "உனக்கொன்று சொல்வேன். இனி அவன்ட்டப் போய் முன்னுரை, இவன்ட்டப் போய் முன்னுரை என்று கேட்காதே. ஏன்னா, வேட்டி கட்டத் தெரிஞ்சவனுக்குக் கோவணம் கட்றது எப்படின்னு யாரும் சொல்லித்தரத் தேவையில்லை!" என்று அவருக்கே உரிய பாணியில் அறிவுரை வழங்கியிருக்கிறார் பாவேந்தர். அதன் பின்னர், தான் எந்த நூலுக்கும் யாரிடமும் சென்று முன்னுரை வாங்கவில்லை.

இளங்குமரனார் மதிப்பூதியமாகவோ அன்பளிப்பாகவோ தனக்கு வழங்கப்படும் ரொக்கத் தொகைகளை, பெரும்பாலும் அப்பொழுதே "இன்ன நூல் வெளியீட்டுக்குப் பயன்படுத்தப் போகிறேன்" என்று அறிவித்துவிடுவார் அல்லது "தாங்கள் வழங்கிய தொகையை இந்த நூலாக்கத்துக்குப் பயன்படுத்திக் கொண்டேன்” என்று அந்த நூலிலேயே பதிவு செய்து விடுவார்.

அவரை நாடிவந்த பல விருதுகளைத் தவிர்த்து, தமிழக அரசின் 'நல்லாசிரியர் விருது', 'திரு.வி.க. விருது' உட்பட சில பெருமை வாய்ந்த விருதுகள், குன்றக்குடி அடிகளார் வழங்கிய 'குறள் ஞாயிறு' விருது எனத் தவிர்க்க இயலாமல் சிலவற்றை மட்டும் ஏற்றுக்கொண்டார். தமிழ் மொழிக்காகவும் தமிழருக்காகவும் கருத்துப் பணியோடு

நின்றுவிடாமல், களப்பணியாளராகவும் தொடர்ந்து செயல்பட்டிருக்கிறார்.

திராவிட இயக்கங்கள் தோன்றியபின் வைதீக முறையைத் தவிர்த்து, இயக்கத் தலைவர்கள் முன்னிலையில் பல திருமணங்கள் நடைபெற்றன என்றாலும் அவை பெரும்பாலும் சொற்பொழிவுகளாலும் அரசியல் தொண்டர்களாலும் சூழப்பட்ட ஒரு நிகழ்வாக இருந்ததால், அரசியல் சார்பற்ற தமிழ்ப் பண்பாட்டை விரும்பியோருக்கு வேறு திருமண நெறிமுறை வகுக்கப்படாத சூழல் இருந்துவந்தது.

"திருமணமோ அல்லது மற்றைய சடங்குகளோ அவரவர் தாய்மொழியிலேயே நடத்துதல் முறைமையும் அறமும் ஆகும். ஏனெனில், என்ன செய்கிறார்கள் என்ன சொல்கிறார்கள் என்பது புரிய வேண்டும். புரியாமல் நடத்தும் சடங்கு பொருந்தாச் சடங்கு என்பது வெளிப்படை" என்பது இளங்குமரனாரின் எண்ணம். பிறமதங்கள் தாய்மொழியில் சடங்குகளை நடத்த அனுமதிக்கும் போது நாம் இனிமேலும் பிறமொழியைத் தெய்வ மொழியெனக் கருத வேண்டியதில்லை என்பது தனித்தமிழ் முன்னோடியான அவரது எண்ணம்.

தமிழர்தம் இல்லத் திருமணங்கள் தமிழ் நெறிப்படி நடத்தப்படவேண்டும் என்றும் அவ்வாறு நடத்திட முடியும் என்றும் உறுதியோடு வழிகாட்ட, தனி ஒருவராகக் களம் இறங்கினார் இளங்குமரனார். அது ஒரு புரட்சிகரமான சமுதாய மாற்றம் என்பதால் எல்லா நிகழ்வுகளும் முழு வரவேற்போடும் வெற்றியோடும் நிகழ்ந்தன எனக் கூறிட இயலாது.

சில இடங்களில் முதலில் ஒத்துக்கொண்டு பிறகு இறுதி நேரத்தில் தமிழ்வழியில் அல்லாமல் வைதீக முறைப்படி திருமணம் நடந்தது. முதலில் ஒப்புக்கொண்டோர் வெளியில் காத்திருந்து ஐயாவை வணங்கி மன்னிப்புக் கேட்டுத் திருப்பி அனுப்பிய நிகழ்வும் நடந்திருக்கிறது. ஆயினும் அவர் தளரவில்லை.

அதேவேளையில் ஒரு சாரார் புரோகிதரை அழைத்து வருவதும், மறுசாரார் இளங்குமரனாரை அழைத்து வருவதும், பின் தமிழ்த் திருமண முறையை இறுதிவரை பார்த்து, புரோகிதரே பாராட்டிவிட்டுத் திரும்பிய நிகழ்வுகளும் நடந்திருக்கின்றன. மெல்லமெல்ல எதிர்ப்புச் சூழல்கள் குறைந்து, செந்தமிழ் அந்தணராக ஐயா தமிழ்ச் சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட நிலை உண்டானது.

*வாழவந்தாள்புரம் சுற்று வட்டாரத்தில் 1952-ல் தனது 22-ஆவது வயதில் திருமணம் நடத்தி வைக்கத் தொடங்கிய இளங்குமரனார் பின்னர் தமிழகத்தின் பல நகரங்களிலும் மலேசிய நாட்டில் பல இடங்களிலும் தமிழ்வழி நெறிப்படி நடத்தி வைத்தத் திருமணங்கள் பெரும் வரவேற்பைப் பெற்றன.*

*இளங்குமரனார் தமிழ் இலக்கியங்களை ஆய்ந்து பண்டைய தமிழர் திருமண முறைகளையும் தற்போதுள்ள நடைமுறைகளையும் தழுவி, தானே ஒரு புதிய நெறிமுறையை உருவாக்கி, அதன்படி ஒவ்வொரு திருமணத்தையும் வந்திருப்போர் ஈடுபாட்டுடன் விழாவில் ஒன்றி மனமார வாழ்த்தும் வகையில் நடத்தித் தருவார்.*

*ஐயாவின் மெல்லிய அதேநேரம் உறுதியான தெளிவான குரல் வளம், அனைவர் மனதையும் ஈர்த்து நிகழ்வில் ஒன்ற வைத்துவிடும். என்னுடன் பிறந்த ரெட்டைப் பிறப்பான தங்கை மணிமேகலை மனோகர் திருமணமும், கரூர் அருகில் உள்ள எனது சொந்த ஊரான,சின்னத்தாராபுரத்தில் இளங்குமரனார் நடத்தித் தந்த தமிழ்நெறித் திருமணங்களுள் ஒன்று.*

*திருமணம் மட்டுமின்றி பிற குடும்ப நிகழ்வுகளான பெயர் சூட்டு விழா, காதணி விழா, பூப்பு நீராட்டு விழா போன்ற பத்து நிகழ்வுகளைத் தமிழ் நெறியில் நடத்துவது எப்படி என்பதை*

*'தமிழ்நெறிக் கரணங்கள்' என்ற நூலில் விளக்கியிருக்கிறார். மேலும் பலருக்குப் பயிற்சி அளித்து அடுத்த தலைமுறைச் செந்தமிழ் அந்தணர்களையும் உருவாக்கியிருக்கிறார். இளங்குமரனாரிடம் பயிற்சி பெற்று அவர் பணியினைத் தொடர்பவர்களில் மலேசியாவில் வாழும், தமிழ் நெறி வாழ்வியல் இயக்கத்தின் முன்னாள் தலைவர் திரு. அருள் முனைவர் அவர்களும் ஒருவர்.*

*இளங்குமரனாரின் மனைவி செல்லம் அம்மையார் 1977-இல் இயற்கை எய்தினார். பணி ஓய்வுக்குப் பின்னர் தமிழுக்காகத் தவவாழ்வு வாழ முடிவு செய்த இளங்குமரனார், திருச்சிக்கு அருகே அல்லூர் என்ற ஊரில் 'திருவள்ளுவர் தவச்சாலை'யை 1994-ஆம் ஆண்டு துவக்கி அங்கே 2014 வரை, 20 ஆண்டுகள் வாழ்ந்து தமிழுக்கு வளம் சேர்த்தார். அதன்பின் மதுரை திருநகரில் எழுத்துப்பணிகளைத் தொடர்ந்தார்.*

*அந்தத் தவச்சாலையை அவர் அமைத்துக்கொண்ட பாங்கு மிகவும் ஆழமான தமிழுணர்வால் எழுந்த சிந்தனைகளை உள்ளடக்கியிருக்கிறது. உள்ளே நுழைந்தவுடன் வலதுபுறம் ஒரு சிறு திருவள்ளுவர் ஆலயம். அதன் கருவறையை அவர் அமைத்த விதம் புதுப்பாதை காட்டுவது.*

*தான் திருமண நிகழ்வுகளை நடத்திவைக்கச் சென்ற ஆயிரக்கணக்கான ஊர்களில் ஒவ்வோர் ஊரிலிருந்தும், ஒரு சிறு கல்லை ஏற்கனவே சேமித்து வைத்திருந்திருக்கிறார். அதிலிருந்து அறத்துப்பாலைக் குறிக்க 380 கற்களாலான ஒரு வெண்ணிறக் குன்றும், பொருட்பாலைக் குறிக்க 700 கற்களாலான செந்நிறக் குன்றும், இன்பத்துப்பாலைக் குறிக்க 2500 கற்களால் ஆன நீலநிறக் குன்றும் அமைத்து, அவை ஒவ்வொன்றின் உச்சியிலும் குன்றின் வண்ணத்திலேயே ஒரு விளக்கையும் அமைத்திருக்கிறார். அவற்றின் முன் ஐம்பொன்னால் ஆன ஒரு திருவள்ளுவர் சிலையை நிறுவியிருக்கிறார். என் தந்தையார் பாவலர் இறையரசனாருடன், நான் தவச்சாலைக்குச் சென்ற போது ஐயாவே அதன் அமைப்புகளை விளக்கிக் கூறினார்.*

*அந்தத் தவச்சாலையில் இலக்கியக் கூட்டங்கள், மனநல ஆலோசனைகள், என மக்களுக்குப் பயனுள்ள பல நிகழ்வுகளைத் தொடர்ந்து ஏற்பாடு செய்து வாழ்ந்தார். இவைதவிர, ஆண்டு விழாக்கள், கவனக நிகழ்வுகள், இயற்கை மருத்துவம், மூச்சுப் பயிற்சி வகுப்புகள் என பல நிகழ்வுகளைத் தொடர்ந்து ஒருங்கிணைத்து தனி இயக்கமாகவே இயங்கிக் கொண்டிருந்தார் இளங்குமரனார். தவச்சாலையிலிருக்கும் 40,000 நூல்களைக் கொண்ட பாவாணர் ஆராய்ச்சி நூலகத்தில் முனைவர் பட்ட ஆராய்ச்சி செய்பவருக்கு, அங்கேயே தங்கி ஆய்வுசெய்ய வசதி இருந்தது.*

*மாதத்தில் 10 நாட்கள் பொழிவுகள், திருமணங்கள் நடத்தி வைத்தல், மீதம் 20 நாட்கள் எழுத்துப் பணி என்று 200 ஆண்டுகள் அவர் தொடர்ந்து செயலாற்றினார். தவச்சாலையிலேயே திருமணம் நடத்த வேண்டுமெனில் அதற்கென சில விதிமுறைகளை வகுத்திருந்தார்.*

*காதல் மணமாக இருக்க வேண்டும். சாதி சமயம் பாராது நடைபெறும் திருமணமாக இருக்க வேண்டும். பெற்றோர் இசைவோடு திருமணம் நடத்தப்பட வேண்டும். திருக்குறள் ஓதித் திருமணம் நடத்த ஒப்புதல் தர வேண்டும். மணக்கொடை (வரதட்சணை) கூடாது. ஆக அதிகமாக 100 பேர் மட்டுமே கலந்து கொள்ளும் எளிமையான திருமணமாக இருக்க வேண்டும்.*

*தமிழர்தம் இல்லத் திருமணங்கள் தமிழ் நெறிப்படி நடத்தப்பட வேண்டும் என்றும், அவ்வாறு நடத்திட முடியும் என்றும் உறுதியோடு வழிகாட்ட, தனி ஒருவராகக் களம் இறங்கினார் இளங்குமரனார். தானே உருவாக்கிய தமிழ்நெறி முறைப்படி இளங்குமரனார் தான் நடத்தி வைக்கும் திருமண நிகழ்வை மங்கல வாழ்த்து, மொழி வாழ்த்து கூறித் தொடங்குவார். வந்தோரை வரவேற்று, மணவிழா நிகழப் போவதை எடுத்துரைப்பார், தமிழ்ப்பண்பாட்டு*

*விளங்களைக் கூறி தமிழர் திருமணச்சடங்கு நெறிமுறைகளை விவரிப்பார்,*

*- "உலகம் வாழ்க... உயர்வெலாம் வாழ்க" என மணமக்களைக் கூறவைப்பார்.*

*- ஒரு தட்டில் மண் பரப்பி, அதன் மேல் பூக்களைத் தூவி, திருக்குறள் நூலை வைத்து மணமக்களை அவற்றைத் தொட்டு வணங்கச் செய்து, "வள்ளுவம் வாழ்க - வாழ்வியல் வாழ்க" என மும்முறை அவர்களைக் கூறச் செய்து, வள்ளுவர் படத்துக்கு மலர் தூவ வைப்பார்.*

*- "சான்றோர் வாழ்க சால்புகள் வாழ்க" என மும்முறை கூற வைப்பார் "மணமக்கள் வாழ்க வாழ்க" என பொதுமக்களைக் கூற வைப்பார்.*

*- மணமக்கள், "பெற்றவர் வாழ்க பெருந்தகை வாழ்க" என மும்முறை கூற பெற்றோர்கள் மலர் தூவி "வாழ்க வாழ்க"எனக் கூற வண்டும்.*

*- அகநானூற்றுப் பாடல்கள் 86, 136 ஆகியவற்றின் அடிப்படையில் மகளிர் நால்வரை அழைத்து மங்கல நாண் எடுத்துத் தர மணமகன் அதை மணமகள் கழுத்தில் அணிவிப்பார்.*

*- மாலை, துணைமாலைகளை இருவரையும் மாற்றச் செய்து இடம் மாற்றியும் அமரச் செய்வார்.*

*- மணமக்கள் இருவரும் இணைந்து விளக்கேற்றச் செய்து பொதுமக்களிடம் வாழ்த்து பெறச் செய்வார்.*

*- அரசாணிக்கால் நடுதல், முளைப்பாலிகை வைத்தல், பட்டம் கட்டுதல், மெட்டி அணிவித்தல் ஆகிய முறைகளைச் செய்வார்.*
*- திருக்குறள் கூறும் ஐம்புலத்து ஆறு ஓம்புதலுக்கு அடையாளமாக ஐந்து இலைகளை இட்டுச் சோறு படைக்கச் செய்வார்.*

*இவ்வாறு சடங்குகளின் விளக்கங்களை நம் செம்மொழியில் கூறி, குத்துவிளக்கை ஏற்றவைத்து, அவர் குடும்ப வாழ்க்கையைத் தொடங்கிவைத்து வளமாக வாழும் குடும்பங்கள் ஆயிரக்கணக்கில் இருக்கின்றன.*

*தனது தனித்தமிழ் இயக்க வழிகாட்டியாக மறைமலை அடிகளையும், தனித்தமிழ் சொல்லாராய்ச்சிக்கு வழிகாட்டியாக தேவநேயப் பாவாணரையும், தமிழ்த்தொண்டுக்கு வழிகாட்டியாகப் பேராசிரியர் இலக்குவனாரையும், வாழ்வியல் வழிகாட்டியாக திரு.வி.க.வையும் கொண்டு வாழ்ந்த இளங்குமரனார் தனது 94- ஆம் வயதில் 2021 ஜூலை 25 அன்று தமிழோடு கலந்தார். அவரது இறுதி ஊர்வலம் தமிழக அரசு மரியாதையோடு நடத்தப்பட்டது.*

*இறுதியாக, இப்படிச் சொல்ல விழைகிறேன்; நடமாடும் நல்லதமிழ்ச் சொற்களஞ்சியம், வியக்க வைக்கும் வேர்ச்சொல் ஆய்வாளர், தவச்சாலை அமைத்து வாழ்ந்த*

தமிழ் மாமுனிவர், இலக்கண இலக்கியங்களை மீட்டுருவாக்கம் செய்த முதுமுனைவர், பல்லாயிரம் திருமணங்களைத் தமிழ் நெறிப்படி நடத்திவைத்த செந்தமிழ் அந்தணர், இரா.இளங்குமரனார். அவர்தம் வாழ்க்கை , தமிழ் மொழியின் அரிய அறிவுச் செல்வங்களை அனுதினமும் ஆராய்ந்து அள்ளி ஒன்றுதிரட்டி உலகுக்குக்காட்டி ஒப்படைத்துச் சென்ற நீண்டதொரு பயணம். வயதும் முதுமையும் அவருக்குத் தடையாக ஒருபோதும் இருந்ததில்லை. “சோம்பல் என்பதைச் சுட்டெரிக்கும் பிறவி என் பிறவி" என்பது அவருடைய உற்சாகமூட்டும் சொற்றொடர். இன்று வாழும் தலைமுறையும், அடுத்தடுத்த தலைமுறைகளும் 'என் பாட்டன் சொத்து' என்று உரிமையுடனும் இறுமாப்புடனும் அனுபவித்துப்பயன்பெற' தமிழ் வளம்' என்று அனைத்து நூல்களையும் இளங்குமரனார் வழங்கிச் சென்றிருக்கிறார்.

ஓய்விலா உழைப்பு, சோர்வறியாப் பயணம், தன்னை முன்னிலைப்படுத்தாமல் தமிழை முன்னிலைப்படுத்திய உழைப்பு என அந்தத் தமிழ் முன்னோடி காட்டிய வழியில் நாமும் செயல்படுவோம்.

இறை.மதியழகன்
mathi.sconce@gmail.com
நன்றி: தி சிராங்கூன் டைம்ஸ் - பிப்ரவரி 2022

## 13. மாந்தர் பெற்ற மகத்தான வரம் !

— முனைவர் ஔவை அருள்

தாய்மொழி என்பது உலகில் மாந்தர் மட்டும் பெற்ற மகத்தான வரமாகும்.




மனித இனத்தில் உணர்தல், புரிதல் என்ற நிலையிலிருந்து அறிதல் என்ற அடுத்த உயர்நிலைக்குப் புலன்கள் பெற்ற உணர்வுகளைத் தரும் உள்ளுணர்ச்சியின் ஊற்றாகும். எண்ணங்களுக்கும் மனத்தில் ஓட்டத்திற்கும் அடிப்படையாக நாம் நமக்குள்ளேயே பேசிக் கொள்வதற்கும் பயன்படும் உள்ளோசையே மௌனத்திலும் நம் மனத்தின் குரலாக உருவாகி உள்ளோடிக் கொண்டிருக்கும் என்பர்.

தாயின் வயிற்றுக்குள்ளிருக்கும் குழந்தைக்குத் தாயின் இதய ஒலி கேட்கும்; வெளியே பேசப்படும் மக்களின் மொழி தெரியாவிட்டாலும், அதன் ஒலியினை மூளை உள்வாங்கும், எதிர்வினையும் செய்யும். அது ஒலியின் அதிர்வினைப் பொறுத்ததாகும். அந்தச் செயல், வெளிவந்த குழந்தையின் ஆழ்மனங்களிலும் பதிவாகியிருக்கும். தாய் முகம் பார்த்துப் புன்னகைத்து வாயசைவை உற்றுநோக்கித் திரும்பத் திரும்பச் செய்து மழலையாக உதிர்த்துப் பழகும் மொழி உணர்ச்சியுடன் வளர்வதனால் தாய்மொழி வடிவமும் வளர்ச்சியும் பெறுகிறது.

ஒவ்வொரு குழந்தையும் பிறக்கிறபோதே தாய்மொழியின் கூறுகளுடன் பிறப்பதால்தான், எளிதாக தாய்மொழியைக் கற்றுக்கொள்ள முடிகிறது என்று மொழியியல் அறிஞர் நோம் சாம்ஸ்கி குறிப்பிடுவது இங்குக் கருதத்தக்கது. வாழ்கிற இடத்தில் சூழலுக்கு ஏற்றபடி தான் நம் மொழி அமைகிறது. இந்த மொழி எங்கே மூளையில் அமைகிறது என்றால், யார் குழந்தைக்கு அதிகமான ஒலிக்குறிப்புகளை அறிவிக்கிறார்களோ அவர்களே முதலிடம் பெறுகிறார்கள்.

காது தான் மூன்றாவது மாதத்திலேயே செவிப்புலன் கொண்டுள்ளது. கருப்பையிலும் கூட ஒலியைக் கேட்கிற பழக்கம் உள்ளது. திருவள்ளுவர், செல்வத்துள் செல்வம்

செவிச்செல்வம் அச்செல்வம் செல்வத்துள் எல்லாம் தலை என்று கூறுகிறார். நம் மூளையின் வளர்ச்சியில் நடக்கும் மாற்றம் அறிவியல் அதிசயங்களில் ஒன்று. பிறக்கும்போது உள்ள செல் அமைப்புகள், இணைப்புகள், இணைப்புகளின் இடைவெளிகள் ஒன்றுக்கொன்று செய்தி பரவுவதற்கும், பரிமாறிக் கொள்வதற்கும் உருவாகும் புரத மூலக்கூற்றுக் குமிழ்கள், சோடியம் - பொட்டாசியம் அயான்கள் எனப்படும் மூலப் பகுதிகளில் பாதைகள், வேதியியல் மின்னணு உருவாக்கங்கள், செல்களுக்குள் சென்று சேமித்து வைக்கப்படும் கருத்தாக்கங்கள் எனக் கணக்கிலடங்கா வேதியியல்-பௌதிக செயல்முறைகள் மூளையில் நடந்து கொண்டே இருக்கும்.

மூளையியல் வளர்ச்சி மிக நுட்பமானது. மூளை இணைப்புகளிலும், சுற்றுப் பொறி இயல்புகளிலும் ஏற்படும் மாற்றங்கள், சொல் பொருள் வாக்கியங்களாகப் பதிவாக ஏற்படும் புதுப்புது அமைப்புகள் ஒன்றன் மேல் ஒன்றாக அடுக்காகவும் ஒன்றுக்குள் ஒன்றான சுழலமைவாகவும் நுண்ணிய அளவில் அமைகின்றன . அவை கற்றுக்கொள்ளும் பகுதி நினைவுப் பகுதியான உள்மூளையில் அமைந்துள்ளன. குழந்தை பிறந்த சில மாதங்களிலேயே தன்னைச் சுற்றி வரும் ஒலியில் பேச்சு ஒலியையும் மொழியற்ற ஓசைகளை பிரித்தறியக் கற்றுக்கொண்டு விடுகிறது. அது கேட்கும் முதல் மொழி, மூளைக்குள் பதியத் தொடங்கி,

கருத்துருவாக்கங்களை உருவாக்கித் திரும்பத் திரும்ப அச்சொற்களைக் கேட்பதனாலும், பார்த்து கொள்வதாலும், புரிந்து கொள்வதாலும் தான் அது சொந்தமொழி, அம்மொழியின் ஒலி இவற்றைப் பதித்து வைத்துக் கொள்ளத் தொடங்குகிறது. அதனைத் தாய்மொழி எனக் கூறுவதைவிட தன் இனமொழி என்று சொல்வது பொருத்தமாக இருக்கும் போது " ஒருவரின் மொழிதான் அவரின் எண்ணத்தின் இயற்கையையும், உட்கருவையும் உருவாக்குவதைத் தீர்மானிக்கின்றது. எனவே ஒருவரின் சிந்தனையையும், சிந்தனை சார்ந்த எண்ணத்தையும் கருத்தையும் மொழிதான் தீர்மானிக்கிறது எனக் கொள்ளலாம் என்பது அறிஞர் பெஞ்சமின் லீ வார் கூறியுள்ள கருத்தாகும்.

ஒருவன் கற்றுப்பழகி அன்றாட வாழ்வில் பயன்படுத்திக் கொண்டிருக்கும் மொழி அவனின் சிந்தனையை ஆட்சி செய்து கொண்டிருப்பதால் அவனின் மொழி தான் அவனின் ஆளுமையை உருவாக்கும். இதற்கு மொழியில் தீர்மானிக்கும் பண்பு (லிங்குஸ்டிக் டெட்டர்மினேஷன்) என்பது புதிய பெயராகும். ஒரு மொழியில் சிந்திக்கும் பண்பு அம் மொழியின்படி இருப்பவற்றை அறிந்து அதற்கேற்றவாறுதான் சிந்திக்க உதவும். சிறு வயது முதல் ஒருவரின் தொடக்க மொழியாகவும், உள்ளத்திலும் உணர்விலும் ஒன்றாய்க் கலந்த மொழியாகவும், அவரின் குணத்தையும், ஆளுமையையும் உருவாக்கும் சக்தி படைத்ததாகவும்

*இருப்பதே அவரின் தாய்மொழியாகும். பின்னர் கற்றுப்பழகும் அலுவலக மொழியானது அயல் மொழி அல்லது இரண்டாம் மொழியாகும். அந்த மொழியைத் தாய் மொழியாகக் கொண்டவர் போன்றோ அல்லது அதே ஆழத்திலோ சிந்திப்பது மற்றவர்களுக்குக் கடினமானது.*

*மொழி வெளிப்படுத்தும் இடர்ப்பாட்டால், இச்சிந்தனையில் வேறுபாடு உண்டாகிறதே தவிர, சிந்தனை வளையத்தின் ஆற்றல் குறைவினால் அல்ல, பண்பாட்டு சூழ்நிலை ஒரே அளவில் இருக்கும் இடங்களில் சிந்திக்கும் திறனுடன் வெளிப்படும் சக்தியை வளப்படுத்திக் கொள்பவர்களுக்கு இந்த வேறுபாடு அதிக மாற்றம் தருவதில்லை. அறிஞர்கள் கு - காரி ஆகியோரின் ஆராய்ச்சி முடிவுகளின்படி, குழந்தைகள் ஒரு வயதிலிருந்தே சொற்களின் பொருள் புரிந்து எதிர்வினை செய்யத் தொடங்குவர். எனவே அப்போதே தெரிந்துகொண்ட மொழிதான் தாய்மொழியாகும். அடுத்துக் கற்கும் இரண்டாம் மொழியில் சொல் அமைவுகளும், வாக்கிய அமைப்புகளும், உருவாவது கண்கூடு .*

*தமிழல்லாத தெலுங்கு, கன்னட, உருது, சொராஷ்டிர சமூக குழந்தைகளும் அவர்கள் பெற்றோரிடம் பேசிக்கொள்ளும் தாய் மொழியில் தான் சிந்திப்பார். ஆனால், பழகு மொழியாலும், வளரும் சூழ்நிலையாலும் வளமான அறிவு பெற்று எடுத்துச் சொல்லும் திறனையும் வெளிப்படுத்தும்*

செயலின் கூர்மையையும், உறுதிப்படுத்திக் கொண்டு சிறந்த சிந்தனையாளர்களாக அவர்கள் வளர்ந்து வருவதைக் காணலாம். புலம்பெயர்ந்த தமிழர்களில் குடும்பங்களிலும், பெற்றோர் பேசும் தமிழிலிருந்து, மொழியைக் கற்றுக் கொள்ளும்போது, அதன் அழகைப் புரிந்து கொண்டு வளரும் போது நம் பண்பாட்டு விழுமியங்களை விளங்கிக் கொள்கின்றனர். வெளிப்புறச் சூழ்நிலைகளால், நாடு, அலுவலகம், வேற்றுமொழியாக இருந்து, கற்றுக் கொள்ளும் போது வேற்று மொழியையும் எளிதாக அவர்கள் கற்று அறிந்து பழகி, சிந்திக்கும் செயல்களை வளர்த்துக் கொள்ள இயலும் என்பது அறிஞர் ஸ்பவன் பிங்கரின் கூற்றாகும் .

ஆனால் அதனை ஆரம்ப மொழி என புலம் பெயர்ந்தோர் புரிந்து கொண்டு, சூழ்நிலை மொழியையும், அலுவலக மொழியையும் ஆரம்ப மொழியாக ஆக்கி விடுவதும், சிந்தனை வளத்தினைக் கூர்மையாக்குவதும் இன்னலைத் தரும் என உணர்ந்து தங்கள் இனத்தையும், பண்பாட்டையும் ஆர்வத்தோடு காட்டி வளர்ப்பது மிகவும் நல்லது. பாவியர் கேட்டால் எடால் என்ற அறிஞர் கொரியக் குழந்தைகள் தத்தெடுக்கப்பட்ட சிறுவயது முதலே பிரெஞ்சு நாட்டில் பிரஞ்சு மொழி பேசி வளர்ந்தவர்களாக உள்ளனர். அவர்களைப் பொறுத்தமட்டில் பிரெஞ்சு மொழிதான் அவர்களின் தாய்மொழி, அவர்கள் கொரிய மொழியினைக்கேட்கும் போது மூளையில் கேட்கும் மொழி

அணுக்களில் மாறுதல்கள் ஏற்படுகின்றன என்று விளக்கினார்.

இங்கிலாந்தில் பஞ்சாபியர்கள் அதிகமாக உள்ள சௌத் ஹால் பாதிக்கு ஆங்கிலேயர்கள் செல்ல வேண்டுமென்றால் கூடப் பஞ்சாபி மொழி தெரிந்திருக்கவேண்டும் அதே போல, கோயில் வளாகங்களைக் கொண்டுள்ள " ஈஸ்டம் பகுதியில் தமிழ் மொழி தழைத்துள்ளது. நம்மையும் அறியாமல் தாய்மொழியின் மீது நம் ஆழ்மனத்தில் பற்று ஒன்று படிந்து விடுகிறது. அதனால்தான் தாய்மொழி அரவமே கேட்காத அந்நிய தேசத்திற்கு நாம் சென்றால் யாராவது தாய்மொழியில் திட்டினால்கூட நமக்குத் தித்திக்கிறது.

சூழல் மூலம் இரண்டாவது மொழி கற்றல் மிக எளிதாக குழந்தைகளுக்கு வந்து விடும் என்பதை நன்கு உணர வேண்டும். மக்கள் பேசிக் கொண்டிருக்கும் மொழிதான் உயிருள்ள மொழியாகும். காலங்காலமாகப் பேசிப் படித்து இலக்கியம் படைத்து வளரும் மொழி செவ்விலக்கிய மொழியாகும். வளரும் தலைமுறையினர் பலருக்குத் தாய்மொழிச் சொற்களே தெரியாத நிலை ஏற்படும் போது, மொழியின் வளர்ச்சி அச்சம் தரத்தக்க நிலையை எட்டி, காலப்போக்கில் தேய்வுற்று தடுமாற்ற மொழியாக வழக்கொழிந்துவிடுகிறது.

வங்காளத்தில் வங்க மொழிதான் ஆட்சி மொழியாக வரவேண்டுமென்று இளைஞர்கள் போராடிய போது அன்றைய அரசு நால்வரை சுட்டுக்கொன்றது. சுடப்பட்ட இளைஞர்களுக்கு ஒரு பெரிய நினைவுச் சின்னம் அமைத்தார்கள். வங்க இளைஞர்களின் எழுச்சி மற்றும் புரட்சியைத் தொடர்ந்து மொழியால் தானே வங்க நாடு உருவானது' என்பதை நினைவுபடுத்தும் விதமாக ஐக்கிய நாடுகள் அமைப்பு ஆண்டுதோறும் பிப்ரவரி 21-ஆம் நாளை தாய் மொழி நாள் என்று இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன்பு அறிவித்தது.

இன்று உலகெங்கிலுமுள்ள இருநூறு நாடுகள் இந்நாளைக் கொண்டாடி வருவது பெருமிதமான நிகழ்வாகும். மொழி என்பது வரலாற்றுச் சான்றாக விளங்குவதால், தாய்மொழி காக்க பேச்சு மொழியாக மட்டுமின்றி, எழுத்தறிந்து ஏனைய இலக்கியமறிந்து, தொன்மையில் நின்று, பண்பாட்டுடன் தலைநிமிர்ந்து வாழ இத்திருநாளை நினைந்து போற்றுவோம்

முனைவர் ஔவை அருள்
இயக்குநர் , மொழிபெயர்ப்புத்துறை
தமிழ்நாடு அரசு

நன்றி: தினமணி - உலக தாய்மொழி நாள் - சிறப்புக்கட்டுரை

## 14. சாதி எதிர்ப்பும் கிறித்தவமும்!!

— முனைவர் த.ஜான்சி பால்ராஜ்

*சாதி, சமயச் சடங்குகள், மரபுசார் நம்பிக்கைகள், பண்பாடு, கலாச்சாரம் என்ற பெயரில் மக்களின் மூளைக்கு விலங்கிட்டு சமூகத்தில் ஆங்காங்கே ஒருசிலர் தங்களை மேல்மட்டத்தினராகக் காண்பிக்கும் ஒரே நோக்கத்தில் அடுத்தடுத்த அடிமைமுறைகளை அறிமுகப்படுத்திக் கொண்டே தங்களின் வசதியான வாழ்கையைத் தக்கவைத்துக் கொண்டிருந்த சமூகத் தீமை இன்றுவரையிலும் இருந்து கொண்டுதான் இருக்கிறது.*

*இந்நிலையின் ஆரம்பக் காலகட்டம் மிகக் கொடூரமானதாக இருந்திருப்பதை வரலாற்றுப் பின்புலங்கள் சுட்டி நிற்கின்றன. அறியாமைகளின் அளவைப்பொறுத்தே ஒரு நாடு அல்லது சமூகம் அயலார்களின் கொடுக்குப் பிடிக்கு இலக்காகும் தன்மையை தெளிவாக வெளிப்படுத்தும். இயற்கை வளமும் சிறந்த கலாச்சார மரபுகளையும் தாங்கி நின்ற நமது நாடும் அதன் சிறப்புகளை மக்கள் மற(றை)க்கும் அளவுக்கு அறியாமை திரைகளுக்குள் மூழ்கிக்கிடந்தது.*

பல இனத்தவரும் மதத்தினரும் ஒன்றிணைந்து வாழ்ந்த கூட்டுச் சமூகத்தில் சொந்த நாட்டினரே ஒருவரையொருவர் சாதி சமய பொருளாதார மற்றும் அரசியல் சார்ந்த அடிமைத் தனங்களைப் போட்டிப்போட்டுத் திட்டமிட்ட ஆதிக்கத்தைச் செலுத்திவந்தனர்....! வேடிக்கையான இந்நிலையை நமது நாட்டிற்கு நாடு கண்டு போகவந்தோர் பலரும் வியந்துரைத்துப் போயிருக்கின்றனர். இதுவே ஐரோப்பியர்களின் இந்தியக் காலனியாதிக்கத்திற்கும் அடிகோலியது என்பர்...!

இந்தியக் கலாச்சாரத்தின் ஒருபகுதியான சாதியவெறி தங்களுக்குக் கீழிருந்த சாதியினரை ஆதிக்கம் செய்து மகிழ்வதிலேயே தன்நிறைவைப் பெற்றுக் கொண்டிருந்தன. தங்களுக்கு மேல்நிலையிலிருந்தோருக்கு அடிபணிந்து போவதைப் பெருமையாகக் காண்பித்தும் தங்களுக்குக் கீழிருந்தோருக்கு அதைப் பாடமாக கற்பித்தும் காலத்தை ஓட்டிக் கொண்டிருந்தனர். இதன் நிறுத்தமற்ற, கண்செருகிப் போன, மிக மலிவான எண்ணத் தாக்குதல்களால் சமூகம் கூறுபட்டுக் கிடந்தது...!

இந்நிலையில் வாணிப நோக்கில் வந்த ஐரோப்பியர்களாலும், சமயப் போதனைகளையும் வழிபாட்டு முறைமைகளையும் மேற்கொள்ள வந்த பாதிரிமார்களாலும் இந்தியர்களிடையே கிறித்தவம் பரவத் தொடங்கியது. ஆரம்பத்தில் வந்த

கத்தோலிக்கப் பாதிரிமார்கள் பலரும் இங்கிருந்த மக்களின் சாதி சமய நிலைமைகளை முழுமையாக அறிய இயலாமல் அவர்களிடமிருந்த சாதியத்தையும் சேர்த்தே கிறித்தவத்தில் சேர்த்தனர். அவரவர் சாதி முறைமைகளை விட்டு விட வேண்டியதில்லை, கிறிஸ்துவை ஏற்றால் போதும் என்ற விதத்திலேயே சுவிசேஷத்தை நற்செய்தியாக அறிவித்தனர். குறிப்பாக ராபர்ட்_டி_நொபிலி தன்னை இத்தாலிய பிராமணன் என்று சொல்லிக் கொண்டு உயர் சாதியினராக கருதப்பட்ட பிராமணர்களுக்கு கிறிஸ்துவை நற்செய்தியாக அறிவிக்க முயன்றார். அவரது நோக்கம் சமூகத்தின் உயர்மட்டத்தினரை ஏற்க செய்துவிட்டால் ஏனையோர்களும் எளிதில் 'போலச்செய்தல்' என்ற பின்பற்றும் இயல்பினால் எளிதில் ஏற்கச் செய்துவிடலாம் என்றிருப்பினும், மறைமுகமாக கிறித்தவம் உயர்சாதியினருக்கானது என்ற தவறான போக்கிற்கு அவரது செயல்பாடு வழிவகுத்து நின்றது.

கான்ஸ்டன்டைன் நோபிள் எனப்பட்ட வீரமாமுனிவரைத் தவிர மற்றவர் அனைவருமே தமிழகத்தின் சாதியக் கொள்கைகளை அதன் விஷமம் புரியாமல் அப்படியே ஏற்றிருக்கின்றனர். இதன் நீட்சியாகவே இந்தியாவில் சமத்துவத்தை உலகிற்குப் போதித்த கிறித்தவ தேவாலயங்களுக்குள்ளும் சாதிப் பாகுபாடு கடைபிடிக்கப்பட்டது. மிகக் குறைவான எண்ணிக்கைகளில்

தான் அன்றைய உயர்ந்த சாதியினராக கருதப்பட்டோர் கிறித்தவத்தை ஏற்றிருந்தனர்.

அவர்களும் ஆலயத்திற்குள் மற்ற தாழ்த்தப்பட்ட சாதியினர்களோடு அமரவோ புனிதத் திருவிருந்தென்ற "ஐக்கியத்தில்" பங்குபெறவோ மாட்டோம் என்றதால் அவர்களுக்கு ஒரு திசையிலும் மற்றவர்களுக்கு நேர் எதிர் திசையிலும் இடமளிக்கப்பட்டு ஆராதனைகள் நடைபெற்றிருக்கின்றன...! ஆரம்பக்கால தமிழகக் கிறித்தவத்தில் அனுமதிக்கப்பட்ட இப்பிழையான அனுசரிப்பால் இன்றுவரை ஒரே ஊரில் சாதிக்கொரு சபையென்பது கிறித்தவக் கொள்கைகளுக்கு எதிரான தவறென்ற உணர்வின்றி மிக எதார்த்தமாக எடுத்துக்கொள்ளும் மனப்போக்கை ஏற்படுத்தியிருக்கிறது என்பது உண்மை.

இந்நிலை சுமார் இரு நூறாண்டுகள் தொடர்ந்து கிறித்தவத்தில் புரையோடிப் போய் சாதியத்தின் தாக்கத்தை அதிகப்படுத்தியிருந்தது. பின்னர் 18 ஆம் நூற்றாண்டில் ஐரோப்பாவில் ஏற்பட்ட கிறித்தவ சமய எழுப்புதலினால் இந்தியாவிற்கு மிஷனெரிமார்களின் வருகை அதிகரித்தது. இவர்கள் புராட்டஸ்டண்ட் (Protestant) பிரிவு கிறித்தவத்தினர். இவர்களும் ஏற்கனவே இருந்துவந்த சாதியக் கொள்கைகளை ஏற்பது தான் சமயப்பணிக்குச் சாத்தியம்

என்று கருதிச் செயல்பட்டனர். இதற்கு விதிவிலக்காக ஒன்றிரண்டு மிஷனெரிகள் சாதிப் பாகுபாட்டினால் மக்கள் அடையும் இன்னல்களையும் மனிதாபிமானமற்ற நடவடிக்கைகளையும் நீக்க முயற்சித்திருக்கின்றனர்.

## திருநெல்வேலி அப்போஸ்தலன் - ரேனியஸ்:

அவர்களுள் 'திருநெல்வேலி அப்போஸ்தலன்' என்ற பெருமைக்குரிய சார்லஸ் தியாப்பிலஸ் ஈவால்ட் ரேனியஸ் (Charles Theophilus Ewald Rhenius; November 5, 1790 – June 5, 1838) என்பவர் முதன்மையானவர். ஜெர்மன் தேசத்தினரான இவர் கி.பி 1814 ஆம் ஆண்டு இந்தியா வந்து, 1820 ஆம் ஆண்டு பாளையங்கோட்டையைத் தலைமையிடமாக கொண்டு திருநெல்வேலி மாவட்டம் முழுவதும் ஒரு சிறு பகுதியைக் கூட விடாமல் சுவிசேஷத்தை நற்செய்தியாய் அறிவிக்க அரும்பாடு பட்டார். இருப்பினும், அவரது பணிகளை ஆய்வு செய்தால் அவர் வெறுமனே கிறித்துவ சமயப்பணிகளை மட்டுமே செய்யவில்லை, மக்கள் மீது உண்மையான அன்பும் கரிசனையும் கொண்டார், தமிழகத்தில் காணப்பட்ட சாதியம் சார்ந்த அடக்குமுறைகளையும் தீண்டாமை கொடுமைகளையும் கண்டு அவற்றைக் களைய முற்பட்டார் என்பது புலனாகும். குறிப்பாக, சாதிப்பாகுபாடற்ற தமிழ்ச் சமூகம் உருவாக வேண்டுமென கனவு கண்டார். எனவே முதலில் கல்விப்பணியைத் துவங்கிய அவர், அதில் எள்ளளவும் சாதிப்பாகுபாடுகள் இருந்துவிடக்

கூடாதென்பதில் மிகக் கவனமாக செயல்பட்டார். மாணக்கர்கள் தங்களுக்குள் எவ்வித ஏற்றத் தாழ்வுகளும் இன்றி கல்வி கற்க வேண்டும் என வலியுறுத்தினார். தாம் சமயப்பணி செய்த ஊர்களிலெல்லாம் பள்ளிகளையும் ஏற்படுத்தினார்.



அதில் பணியாற்ற ஆசிரியர்களுக்கு முறையான பயிற்சிகளை அளிக்க வேண்டி, தங்கும் விடுதியுடனான ஆசிரியப் பயிற்சிப் பள்ளியும் (செமினெரி) நடத்தினார். அவற்றில் சாதி வேறுபாடு பாராட்டிய உயர்சாதி மாணாக்கர்கள் தங்களுக்கும் தாழ்ந்தசாதியின மாணாக்கர்களுக்கும் இடையே தடுப்புச் சுவர் அல்லது தட்டி மறைவு வைக்க

வேண்டும் என்று ரேனியசோடு வாதிட்டனர். ஆனால் எவ்விதத்திலும் சாதி வேறுபாட்டை செமினெரியில் அனுமதிக்க மாட்டேன் என்று மறுத்து விட்டார் ரேனியஸ். 'அவர்களது பார்வையில் இல்லாமலாவது நாங்கள் இருந்து உணவு உண்கிறோம், இல்லையேல் எங்களை சாதியை விட்டே நீக்கிவிடுவர்' என்று அவர்கள் கெஞ்சியும் அனுமதி தர மறுத்து சாதி வேறுபாட்டை அனுசரித்துத்தான் இதை நடத்தியாக வேண்டுமென்றால் இந்தச் செமினெரியே வேண்டாமென்று அதை மூடிவிட்டார். 1818 ல் துவக்கப்பட்ட அச்செமினெரி அவரது இப்புரட்சிகரமான சிந்தனையால் 1821ல் மூடப்பட்டது. ஆனாலும் மிகவிரைவில் சாதிமதப் பேதமற்ற ஆசிரியப் பயிற்சிப் பள்ளியாக திறக்கப் படும் என்ற அவரது நம்பிக்கை வீண் போகவில்லை. மீண்டும் அது 1822ஆம் ஆண்டு திறக்கப்பட்டு சாதிப் பாகுபாடற்ற பள்ளியாக நடைபெற்றது. அதில் ஒருபோதும் சாதி வேறுபாடு கடைபிடிக்கப்படவில்லை.

கிறித்தவ மிஷனெரிமார்கள் இந்தியாவில் கல்விப் பணியையும் இன்னும் பிற சமூகப்பணிகளையும் அவர்களது சமயப்பணியின் வளர்ச்சிக்காகவே செய்து போயினர் என்ற வரலாற்றாசிரியர்கள் சிலரின் கூற்று ஏற்கத்தக்கதல்ல...! இந்தியர்களிடையே திட்டமிட்டு உருவாக்கப்பட்ட இச்சாதியத்தை அயல்நாட்டினரான மிஷனெரி ரேனியஸ் தான் முதன் முதலில் எதிர்த்தவர் என்பது இந்திய சாதி

எதிர்ப்பு வரலாற்றில் மறைக்கப்பட்ட அல்லது கண்டு கொள்ளப்படாத உண்மை.

தமிழகத்தில் ரேனியஸ் மேற்கொண்ட இதே சாதி எதிர்ப்பைக் கிட்டத்தட்ட நூறு ஆண்டுகளுக்குப் பிறகு கி.பி 1924 ஆம் ஆண்டு சமத்துவத்தை விரும்பிய சில அரசியல் தலைவர்களால் திருநெல்வேலியில் உள்ள சேரன்மாதேவியில் ஏற்படுத்தப்பட்ட 'தமிழ் குரு குலத்திலும்' ரேனியஸ் செமினெரியில் நடந்த அதே சாதிப்பாகுபாடு காணப்படுவதை அறிந்து அதற்கு எதிராக நடந்த சர்ச்சைகள் ஏராளம். அந்தச் சமூக ஆரோக்கியத்திற்கு அடிகோலிய அப்போராட்டம் 'குருகுலப் போராட்டம்' (கி.பி1925) என்று வரலாற்றில் குறிப்பிடப்பட்டு வியக்கப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

மனிதச் சமூகத்தின் உள்ளார்ந்த வளர்ச்சிகளுக்கு முக்கியம் அளிக்கப்படாத வெற்று சமயப் பக்திகளும் அதுசார்ந்த செயல்பாடுகளும் என்றும் நிலைப்பதில்லை, மக்கள் மனத்திலும், இறைவனின் பார்வையிலும்..!!

முனைவர் த.ஜான்சி பால்ராஜ், வரலாற்று ஆய்வாளர்

## 15. அறம் என்றால் என்ன?

— சொல்லாக்கியன்

மனித வாழ்வின் பயன் யாது? காம இன்பம் துய்ப்பதும், குழந்தை பெறுவதும், செல்வம் சேர்ப்பதும் என்றால், அதாவது இன்பமும் பொருளும் என்றால், மனிதரில் பலரும் வாழ்வின் பயனை அடைந்து விட்டனர் என்றே சொல்லலாம். இவை எல்லாவற்றையும் பெற்றப் பின்பும், மனம் எதையோ வேண்டி நிற்கின்றதே, அது எது? அறம். அது விளைவிக்கும் அமைதியும் ஆனந்தமும்தான் வாழ்வின் பண்பும் பயனுமாகின்றது.

திருவள்ளுவர் காலத்தில், களப்பிரர் காலத்தில், பௌத்தமும், சமணமும் மேலோங்கி இருந்திருக்க வேண்டும். துறவு வாழ்வும் மிகுந்திருக்க வேண்டும். பெரும்பாலான அத்துறவிகளும், தங்களின் மிக அடிப்படையான தேவைகளுக்கு, சமூக உழைப்பாளர்களையே சார்ந்திருக்க வேண்டி இருந்திருக்கும். துறவிகள் மிகுந்து, உழைப்பாளர் குறைந்ததால், சமூகத்தின் சமநிலை கெட்டிருக்கும். சமூக சமநிலையை மீட்க, எக்காலமும் நிலைக்க, ஒரு புதிய புரட்சிகரமான கருத்தொன்றை முன்வைக்கின்றார், திருவள்ளுவர். அதுதான், இல்லறம்.




சமூகத்தில், கணவன், மனைவி, பிள்ளை என குடும்பமாய் வாழ்ந்தும், உற்றார், உறவினர், நட்பு, விருந்தினர், சான்றோர் ஆகியோருடன் இனிமையாய் பழகியும் உதவியும், புலன்களை ஒழுங்குபடுத்தியும், மனத்தை தூய்மைப்படுத்தியும், உயிர்மையை உணரலாம், இறைமையை அடையலாம், பிறப்பும் அறுக்கலாம்.

அறவழியில் பொருள் ஈட்டி, பொருள் கொண்டு இன்பம் துய்த்து, இன்பத்தாலேயே வீடு எய்தும் நுணுக்கம்தான், திருக்குறள் காட்டும் இல்லறம். மேலும், இளவயதில், துறவு பூணுதல் கடினம். குடும்ப வாழ்க்கைக்கு ஏங்க நேரலாம். தவறான, அறமற்ற வழிகளில் போக நேரலாம். ஆனால், அறவழியில் வாழ்ந்து, அனுபவித்து, பின் முதுமையில் துறவு போதல் எளிது. எனவேதான், அறத்துப்பாலில், இல்லறத்தை அடுத்து, துறவறத்தை இயலாக்கினார்.

'அறம்' என்பதற்கான வரையறையும், இலக்கணமும், சான்றும் இறைமை என்பதால், அறத்துப்பாலில், 'கடவுள் வாழ்த்'தை முதல் அதிகாரமாய், திருவள்ளுவர் அமைத்துள்ளார். பிரபஞ்சக் கடலே, அருமை மற்றும் பொருண்மை என இறைமைக்குள் இரண்டாய் இருக்கும்போதும், அவன் அருமையான உயிர்மையாய் நிலைக்கின்றான். மனிதரின் உயிர்மை, இறைமையுடன் ஒன்றாமல், இல்லற வாழ்விலோ, துறவு வாழ்விலோ, பிறப்பறுக்க முடியாது.

'அன்பே' எளிமையாக இறைமையை அடையும் குணம். துறவு வாழ்வில், அன்புக்கு, இயல்பான இடமில்லை. குடும்ப வாழ்வில், அன்பு செலுத்துவது இயல்பானது, எளியது, இனியது. அன்பால் இறைமையுடன் ஒன்றலாம். எல்லா இடத்தும், எல்லாரிடத்தும், எல்லா உயிரிடத்தும் அன்பு செலுத்துவது, இறைமையாகும். துறவறத்தாலாவது, இல்லறத்தாலாவது, இறைமையுடன் ஒன்றியவர் பிறப்பறுப்பர். ஒன்றாதவர், ஊழ்வினைக்கேற்ப மீண்டும் பிறப்பெடுப்பர்.

அறத்துப்பாலில், கடவுள் வாழ்த்துக்கு அடுத்த அதிகாரமாக, வான் சிறப்பை அமைக்கிறார், திருக்குறளார். இறைமையின்றி எப்படி இவ்வுலகம் இல்லையோ, அதே போன்று, நீரின்றி உயிர் தோன்றுவதோ, மனித இனம் நிலைப்பதோ இல்லை

என்பதால், இச்சிறப்பு. இறைமையை உணர்வதற்கு, மனித முயற்சியோடு, இறைவனின் அருள் தேவை என்பதுபோல், இயல்பாக, இயற்கையாக உணவு போதாதபோது, உணவை உற்பத்தி செய்யும் உழவு முயற்சிக்கும், மழையின் அருள் தேவை.

மழையின்றி, இறைவழிபாடும், உதவியும், ஒகமும், தியானமும், ஒழுக்கமும் சமூகத்தில் நிகழாது, நிலைக்காது. மழையின், நீரின் முக்கியத்துவத்தைக் கூறுவதன் மூலம், மழை பெய்ய வேண்டி மரங்களைக் காப்பதையும், வளர்ப்பதையும், பெய்த நீர் வீணாகாமல் சேமிக்க வேண்டியும், உழவுக்கும், குடிப்பதற்கும் பகிர்ந்தளிக்க வேண்டியும், பூமிப்பந்து மிகுந்த வெப்பமாகாமல் தடுக்க வேண்டியும், சமூக செயல்பாடுகளும், ஒழுங்கும் நிலைக்க வேண்டியும் நாம் செயலாற்ற அறிவுறுத்துகிறார், வள்ளுவப் பெருந்தகை.

குடும்ப வாழ்வு தன்னிலையை முன்னிலைப்படுத்துகின்றது. துறவு வாழ்வோ, சமூகநிலையை முன்வைக்கின்றது. ஆனாலும், குடும்ப வாழ்வில் கிடைக்கும் மனைவி, பிள்ளை, நட்பு, உறவால் ஏற்படும் சுகங்கள், துறவு வாழ்வில் கிடைப்பதில்லை. குடும்ப வாழ்வே, இயல்பான தெரிவு. எனவே தான், இல்லறவியல், துறவறவியலுக்கு முன்னதாக வைக்கப்பட்டுள்ளது. ஆனால், சமூகத்தின் சீரான

இயக்கத்திற்கு, தன்சுகத்தை தியாகம் செய்யும் துறவறமும் தேவைப்படுகின்றது. இல்லறமா? துறவறமா?, இது ஒரு மனச்சிக்கல். முதலில் இல்லறம், பின்பு துறவறம் என, இச்சிக்கல் தீர்க்கப்படுகின்றது. இரண்டிற்கும் இலக்கு, உயிர்மையை உணர்ந்து, இறைமையில் ஒன்றி, பிறப்பறுத்தல் என்பதும், முடிவற்ற அமைதியிலும், நிபந்தனையற்ற ஆனந்தத்திலும் திளைப்பதும்தான். நடைமுறையில், குடும்ப வாழ்வும், சமூக வாழ்வும் பிணைந்த வாழ்க்கை முறைகளும் உள்ளன.

முதுமையில் செய்து கொள்ளலாம் என்று எண்ணாமல், உயிர்மையை உணர்ந்து, இறைமையுடன் ஒன்றும் 'அறம்' என்பதை இன்றிலிருந்தே செய்க. அம்முயற்சியும் பயிற்சியும், இறைமையுடன் ஒன்றும்போது, ஐயம் நீக்கும் பொலிவான துணையாகும். இறைமையுடன் ஒன்றும் போது அகத்தில் இருந்து இன்பம் வருகின்றது, பிறப்பும் அழிகின்றது. மற்ற இன்பங்கள் அனைத்தும் புறத்தில் இருந்து வருபவை, அவை பிறப்பை அறுக்காது. ஒருவர் செய்ய வேண்டியது எல்லாம், புலன்களை அடக்கி, உயிர்மையை உணர்ந்து, இறைமையுடன் ஒன்றும் அறம்தான். இயல்கின்ற இளமைக் காலத்தில் செய்யாமல், முதுமையில் செய்ய முடியாமல் போனால், அவர் மீதமுள்ள வாழ்நாள் எல்லாம், பழிதான் மிஞ்சும்.

குடும்ப வாழ்வின் மூலமே எவ்வாறு சிறிது சிறிதாக புலனடக்கி, மனத்தைத் திருத்தி, செயலைக் கட்டுப்படுத்தி, உயிர்மையை உணர்ந்து, இறைமையுடன் ஒன்றலாம் என்று, ஒரு புரட்சிகரமான ஒருங்கிணைந்த மாற்று வாழ்வியலை வடிவமைத்துத் தந்திருக்கிறார், எம்மான். துறவறத்தால் கிடைக்கும் பலன்கள் எல்லாம், இல்லறத்தில் எவ்வப்பொழுதெல்லாம் இன்பநலன்களாய் கிட்டுகின்றது என்று, ஒப்பீட்டு ஆய்வினை இல்லறவியல் நெடுக நிகழ்த்துகிறார்.

தன்னலமாக இல்லாமல், பசித்தவர்க்கும், வறியவர்க்கும், துறவிகளுக்கும், முதியவர்களுக்கும் உதவி, குடும்ப வாழ்வை மேற்கொள்பவரின் பிறப்பும் அறும் என்கிறார், வள்ளுவர். மனைவியிடமும், பிள்ளைகளிடமும், நண்பர்களிடமும், உறவினர்களிடமும், விருந்தினரிடமும், பிற உயிர்களிடமும் அன்பாய்ப் பழகினாலேயே, புலனடக்கத்தின் விளைவான, உயிர்மையை உணர்தலும், இறைமையுடன் ஒன்றுதலும் நிகழும். இயல்பாக, கட்டாயமின்றி, அன்பான குடும்ப வாழ்க்கை வாழ்பவன், துறவிகளைக் காட்டிலும் சிறந்தவன். குடும்ப வாழ்வே அறம் என்கிறார், குறளடியார். துறவிகள், தம் பிறப்பறுக்க வேண்டும் எனும் தன்னலத்தவர். ஆனால், குடும்பனோ, மனைவி, பிள்ளைகள், நண்பர்கள், உறவினர்கள், விருந்தினர், பிற உயிர்கள் என அனைவருக்காகவும், தன்னலனை குறைத்து வாழ்கின்றான்.

பயனடைந்தவர்கள் யாவரும், அவனை தெய்வமாகவே மதித்து வணங்குவர்.

ஐம்பூதங்களை அடக்கி ஆட்டுவிக்கும் திறன், துறவிக்கு மட்டும் கிட்டுவதல்ல. அன்பான வாழ்க்கை நடத்தும் கணவனை மட்டும் வணங்கும் பெண்ணாலும் மழையை நினைத்த நேரத்தில் வரவழைக்கக் கூடிய திறனைப் பெற முடியும். முழுமையாக ஒன்றும் தன்மை, பலவற்றை ஆளும் திறனை அளிக்கின்றது. நல்ல மனைவியைப் பெறுவதே அறம்.

அறிவறிந்த பிள்ளைகளை, குடும்ப வாழ்வில் பெற்றால், அது, உலக வாழ்வில் பெறும் எல்லா சுகங்களிலும், பெருமைகளிலும் சிறந்ததாகும். அப்பெருமையே, மனதை, நன்றியுடன் இறையுடன் ஒன்ற வைத்து, பிறப்பறச் செய்யும். பண்புடைய பிள்ளைகளைப் பெற்றால், பிறப்பு எடுக்க வேண்டியதாயின், அப்பெற்றோர்களுக்கு தீங்கு நேராது. தம் குழந்தை சிறிய கைகொண்டு அடித்துக் கலக்கிக் குழப்பித் தெறிக்கும் கூழ், அமிழ்தத்தினும் இனிதாம். குழந்தையின் கூழ் ஒழுகும் கையை பெற்றோர் சுவைத்து எடுக்கையில் ஏற்படும் ஆனந்தம், இறைமையுடன் ஒன்றுவதற்கு ஈடானது. தம் பிள்ளைகளின் மேனியை மெல்ல தொடுதலும், அவர்களுடைய அன்பான சொற்களைக் கேட்டு இன்புறுதல், மெய்யுணர்வை அடைவது போன்றது, மந்திரத்தால் விளையும் தெளிவைப் போன்றது. கல்வியும், செல்வமும்

ஊழின் விளைவுகள் என்பதால், தம்மைக் காட்டிலும் தம் மக்கள் அறிவு கொண்டு இருந்தால், மேலும் நன்மையுற, நல்வினையே புரிவர். உலக மக்களும் அவ்வாறே செய்ய முனைவர். தன் மகனைச் சான்றோன் என கேட்கும் போது, பிள்ளை பெற்ற போது கிடைத்த இன்பத்தைக் காட்டிலும் மிகுதியான ஆனந்தத்தை அடைவாளாம், தாய். நன்மக்களே அறம்.

மனைவியும், கணவன் மனைவிக்குப் பிறந்த பிள்ளைகள் மட்டும், குடும்ப வாழ்வில் இன்பம் அளிப்பதில்லை. குடும்ப நண்பர்களும் அன்பாலும், பழகும் ஆர்வத்தாலும் இன்பம் சேர்க்கின்றனர். இத்தகைய உலக இன்பம், ஓக தியானத்தில், இறைமையுடன் ஒன்றி விளையும் ஆனந்தத்திற்கு ஒப்பானது. அறமே முழுமைபெற அன்பைச் சார்ந்திருக்கின்றது. அறத்தை அறியாத மறவர்க்கும் அன்பே காரணமாகின்றது. அன்பில்லாமை, பிறப்பை மீண்டும் உண்டாக்கும். இல்லற வாழ்வு, அன்பில்லாமல், மிகுந்த வலிமையான உடல் உறவினால் கிட்டும் இன்பத்தால் மட்டும், நிறைவுறாது. அன்பு என்பது உயிரின் இயல்பு. அன்பு இல்லாதவர், வெறும் எலும்பும் சதையும் தோலால் போர்த்தப்பட்ட பிணமாவர். அன்பே அறம். முகமலர்ச்சியுடன் விருந்தோம்புபவன் இல்லத்தில், செல்வம் மனமுவந்து தங்கும். விருந்தினரின் தேவையறிந்து செய்யும் விருந்தோம்பல், வேள்விக்கும் ஓக தியானத்திற்கும் ஒப்பானது. விருந்தோம்பல் அறம்.

இல்லற வாழ்வில் இருந்து, அன்புடன் கூறிய இனிமையான சொல், துறவு வாழ்க்கையில், இறைமையுடன் ஒன்றியவரின் அருள் மிகுந்த சொல்லுக்கு, இணையானது. முகத்தில் அமைதி நிலவ, இனிமையாக பார்த்து, மனம் நிறைந்த இனிமையான சொல்லைக் கூறுதலே அறம்.

இங்கே, துறவறத்தில் உள்ள புலனடக்கம், மனவடக்கம், செயலடக்கம் ஆகிய யாவற்றையும் ஒருங்கே காணலாம். எல்லார் இடத்தும் இனிமையான சொல்லைக் கூறினால், பிறப்பறும். நல்லதையே நினைத்து, இனிமையாக கூறினால், ஏற்கனவே சேர்ந்துவிட்ட தேவையற்ற குணங்களும் குறையும், அறத்தின் பயனும் விளையும்.

அறம் எனும் சொல் ஒற்றைப் பொருளைக் குறிப்பது அல்ல. அது பலபொருள் குறிக்கும் ஒரு சொல். இம்மையில் இடையறா இன்பமும் மறுமையில் பிறப்பறுதலும் எய்த வைக்கும், இறைமையில் ஒன்றுதலும், உயிர்மையை உணர்தலும், மனம் அடங்கலும், புலன் அடங்கலும், செயல் இல்லாமையும், இவற்றை அடைய துணைபுரியும் நல்ல மனைவி, நன்மக்கள், அன்புடைமை, விருந்தோம்பல், இனியது கூறல், அடக்கம், ஒழுக்கம், பொறுமை, அருளுடைமை, கொல்லாமை, புலால் உண்ணாமை, வாய்மை, தவம், துறவு, மெய்யுணர்தல் ஆகிய ஊழால்

விளைந்த பண்புகள், செயல்பாடுகள், இலக்குகள், வீடு அடைதல் யாவுமே அறம்.

இறுதிச்சொல்லாக, எப்பண்பு, எச்செயல் எல்லாம், புலனடங்கி, மனமடங்கி, உயிர்மையை உணர்ந்து, இறைமையுடன் ஒன்றி, இன்பம் எய்தி, பிறப்பறுக்கின்றதோ அவை யாவும் அறமே!!

நன்றி: குறள் நெறி - பிப்ரவரி இதழ்

# 16. நகைச்சுவை ஒரு “கேட்கத்தக்க எதிர்ப்பு”

# தமிழர்கள் அதிகம் சிரிக்க வேண்டும்

— முனைவர் ஆனந்த் அமலதாஸ்

ஒரு குறிப்பிட்ட சமுகத்தைச் சிரிக்க வைக்கும் நகைச்சுவை அந்தச் சமூகத்தின் உறவு முறையை அதிகம் வெளிப்படுத்தும். அவர்களின் நகைச்சுவைத் தொகுப்பிலிருந்து அந்தச் சமுதாயத்தின் இயல்பைப் புரிந்து கொள்ள முடியும்; அளவிடவும் முடியும்; அதாவது அந்தச் சமூகத்தில் உள்ளடங்கிய பூசல்கள், அவர்கள் அறிவு அல்லது சமூகவாழ்வு நிலையைக் கணிக்க முடியும். எனவே ஒரு சமுதாயத்தைப் புரிந்து கொள்ள அங்கே எப்படிப்பட்ட நகைச்சுவை அவர்களைச் சிரிக்க வைக்கிறது என்பதும் ஒரு வழி என்று சொல்லலாம்.

படித்தவர்கள் அல்லது நகரத்தில் வாழும் மக்கள் கிராமத்து மக்கள் நகைச்சுவையைச் சுவைக்க மாட்டார்கள் என்பது தெரிந்ததே. ஆனால் எல்லாப் பண்பாட்டிலும் மக்களிடம் நகைச்சுவை உணர்வு உண்டு. அது மொழி சார்ந்த சிலேடையாக இருக்கலாம், மதத்தலைவர்களின் முரண்பாடான வாழ்வியலைக் கேலி செய்வதாக இருக்கலாம் (போதிப்பது ஒன்று செயல்படுவது வேறொன்று), அல்லது

செல்வாக்குடைய நிலக்கிழார்களின் பாலியல் உறவின் இரட்டை வேடமாக இருக்கலாம். இது அச்சமுதாயத்தில் மறைந்திருக்கும் எதிர்ப்புக் குரலை வெளிப்படுத்தும். அதனால் ஒதுக்கப்பட்ட ஏழை மக்கள் தங்கள் எஜமானரைப் பற்றிக் கூறும் நகைச்சுவையை அங்கே காணலாம். இத்தகைய நகைச்சுவை ஓரங்கட்டப்பட்ட ஏழைகளின் எதிர்ப்பு ஆயுதம்.

சமஸ்கிருத நாடகங்களில் வரும் நகைச்சுவை பாத்திரத்தை (விதூஷகா) பற்றி அதிகம் ஆய்வுக் கட்டுரைகள் உண்டு. தெனாலி இராமன் கதைபற்றி அதிகம் கேட்டிருக்கிறோம். ஆனால் தமிழ் மரபில் நகைச்சுவை பற்றிய வரலாற்றை அதிகம் ஆவணப்படுத்தவில்லை. 1992-இல் காப்ரியெல்லா பெரோ-லுட்சி (Gabriella Eichinger Ferro-Luzzi, The Taste of Laughter) என்ற ஆய்வாளர் தமிழ் நகைச்சுவையின் சில அம்சங்கள் என்ற நூலை வெளியிட்டார். தமிழின் சமகால இலக்கியங்களை அலசிப்பார்த்து - அதாவது அகிலன், புதுமைப்பித்தன், மரினா போன்றவர்களின் நூல்களிலிருந்தும், ஆனந்த விகடன் போன்ற வார இதழ்களிலிருந்தும் நகைச்சுவைத் துணுக்குகளைச் சேகரித்து, ஆராய்ச்சி செய்து வெளியிட்டிருக்கிறார்.

இந்த நூலின் முன்னுரையில் மேற்கத்திய நாட்டுச் சிந்தனையாளர்கள் உருவாக்கிய கோட்பாடுகளை விமர்சனம் செய்து அவைகள் முழுமையானது அல்ல

*என்றும் பதிவு செய்துள்ளார். நவீனக் காலத்தில் அறிவியலோ, தர்க்கமுறை அல்லது மெய்யியலோ அரிஸ்டாட்டிலையும் அவரது மாணவர்களையும் மையமாக வைத்துத்தான் வளர்ச்சி காண முடியும். எடுத்துக்காட்டாக "கதார்சிஸ்"* (*Catharsis*) *என்ற கருத்து கிரேக்க துன்பக்கதை மையங்கொண்ட நாடகங்களைப் பார்த்து விட்டு யாருடைய ஆன்மா தூய்மையாக்கப்பட்டது என்று சொல்லச் சான்றுகள் ஏதுமில்லை. அந்தக் கருத்தின் நீண்ட கால வெற்றி அந்தக் கிரேக்கச் சொல்லின் ஈர்ப்பாக இருக்க வேண்டும். சாமானியர்களின் சொற்களஞ்சியத்தில் இல்லாத வார்த்தை அதனுடைய ஞானத்தைக் கண்டு திகைத்துப் போயிருக்க வேண்டும்.*

*19-ஆம் நூற்றாண்டில் "பிரசர் குக்கரை" முன் மாதிரியாக வைத்து பல்வேறு கருத்தியல்கள் எழுந்தன. அதன்படி நகைச்சுவை மனநிலை சமூக நிலையின் பணியாகும் என்று சொன்னார்கள். பிராய்டுவின் கருத்துப்படி நகைச்சுவை அடைத்து வைக்கப்பட்ட உணர்வுக்கு விடுதலை கொடுக்கிறது. அதாவது, அவர் இதன் மூலம் குறிப்பிடுவது பால் உணர்வையும், பகைமை உணர்வையும் என்பது எல்லோரும் அறிந்ததே. ஆனால் பாலுறவு தவிர்த்தலும் அமைதி நிலையும் அதிக மனவழுத்த நிலையை விளைவிக்கிறது என்ற கருத்துக்குச் சான்று ஏதும் கிடையாது. நகைப்பு-விகட பேர்வழிகளும், நகைப்பையும் கேலிக்கூத்தையும்*

*செய்யாதவர்களை விடவும் நல்ல மனநிலையில் இருக்கிறார்கள் என்பதற்கும் ஆதாரம் கிடையாது.*

*இந்த "கத்தார்ட்டிக்" - "ஹைட்ராலிக்" - உவமைகள் உணர்ச்சியின் தேவைகளைவிட அறிவுத் திறனின் தேவையை விளக்கப் பயன்படலாம். அப்படியானால் நகைச்சுவைக்குப் பகுத்தறிவு ஆதிக்கத்திலிருந்து தற்காலிகமாக ஒரு விடுதலை கொடுக்கலாம். இத்தகைய கருத்தியல்கள் பகுத்தறிவுச் சிந்தனையின் ஆளுமையை மிகைப்படுத்துகின்றன. நெடுநேரச் சிந்தனையால் உண்டாகும் களிப்பைப் பகுத்தறிவு சிந்தனைகளோடு குழப்பி விடுவதாகத் தெரிகிறது.*

*மன அழுத்தமும் அதன் விடுதலையும் என்ற அடிப்படையில் எழுந்த உவமை நமது வரையறை தாண்டிய மனநிலை குறித்து பொருத்தமாக விளக்கம் தரலாம். அப்படிப்பட்ட பணி சார்ந்த நகைச்சுவை கருத்தியல்களைத் தவறென்றும் நிரூபிக்க முடியாது. இதைச் சமூக கட்டமைப்பு வகை சார்ந்த நகைச்சுவைகளை அலசிப்பார்க்கும் பொழுது இந்தக் கருத்தின் அடித்தளம் அற்றவை என்பது தெளிவாகிறது. உலக அளவில் சிறுபான்மையான சமூகங்களே இத்தகைய சமூகக் கட்டமைப்பு சார்ந்த நகைச்சுவையில் ஈடுபட்டுள்ளனர் என்பதால் பெரும்பான்மையான சமூகங்கள் இதன் பலன் இன்றி எப்படிச் சமாளிக்கின்றார்கள் என்பதைத் தெளிவுபடுத்த வேண்டும். எடுத்துக்காட்டாக கத்தோலிக்கப்*

பகுதி ஜெர்மனியில் "கார்னிவல்" கொண்டாடப்படுகிறது. புராட்டஸ்டண்ட் பகுதி ஜெர்மனியில் இந்த விழாவைக் காணமுடியாது. ஆனால் இங்கும் சமூகக் குழப்பமும், மனநிலைக் கோளாறும் அதிகமாகக் காணப்படுகிறது. தென் இந்தியாவில் ஹோலி திருவிழா கொண்டாடப்படுவதில்லை. வட இந்தியாவில் மக்கள் சமூகமாக சேர்ந்து களியாட்டத்தில் ஈடுபடுகின்றனர். அதனால் பாதுகாப்பு மூடிகள் தடுப்பு (அடைப்புத் தடுக்கு - Safety Valves) அடிப்படையில் நகைச்சுவையை விளக்கும் கருத்தியல்கள் இதைக் கவனிக்க வேண்டும்.

சில கருத்தியல்கள் நகைச்சுவையை "சரி செய்யும் மூடியாக," "சமாளிக்கும் கருவியாக" பார்க்கின்றன. அதாவது, சோகமாக உள்ளவரைத் தட்டிக்கொடுத்து அவருடைய வருத்தத்தை அகற்ற முடியும். ஒரு கேலி விகடம் சொல்வது பல வழிகளில் ஒன்று. தானாகவே ஒருவர் தனது துயரத்தைப் பற்றி கேலிக்கூத்து செய்கிறார் என்பது வண்டி இழுக்கும் குதிரைக்கு முன் வண்டியை வைப்பது போல் இருக்கிறது. தனது துயர நிலைபற்றி நகைத்துப் பேசுவது என்றால் ஏற்கனவே அவர் தனது சோக நிலையைச் சரிசெய்து கொண்டார், அல்லது தான் அவ்வாறு வெற்றிகண்டார் என்று வெளிக்காட்ட விரும்புகிறார். அழுபவர் யாரும் "ஜோக்" சொல்வதில்லை. நகைப்பூட்டிப் பேசுபவர் அப்பொழுதுள்ள நிகழ்விலிருந்து ஒரு நுட்பத்தைப் பெறுகிறார். அது

மகிழ்ச்சியானதாகவோ, துயரமானதாகவோ, சமநிலையாகவோ இருக்கலாம். எடுத்துக்காட்டாக, மழையில்லா காலத்தில் வறட்சியைப் பற்றி ஒருவர் நகைத்தால் அவர் அந்தச் சூழ்நிலையை விளக்குகிறார் என்று பொருள். அதில் அவர் ஈடுபாடு கொண்டிருக்க வேண்டியதில்லை. அவர் கேட்பவரின் துயரத்தை நீக்குவதற்காக நகைச்சுவை விகடத்தைச் சொல்கிறார் என்பதற்குச் சான்று இல்லை.

உலக அளவில் பல்வேறு சமூகத்தினர் அவர்கள் மரபில் நகைச்சுவை எந்த அளவில் இடம் பெற்றிருக்கிறது என்றும் கூறுகிறார்கள். எடுத்துக்காட்டாக யூத மரபில் நகைச்சுவையின் பங்கை பீட்டர் பெர்கர் (Peter L. Berger) என்பவர் தனது நூலில் (மீட்பளிக்கும் நகைச்சுவை, 1997) வெளியிட்டுள்ளார். ஏன் யூதர் மத்தியில் அதிக நகைச்சுவை வரலாறு உண்டு என்பதற்கு அவர் கூறும் காரணம் கவனிக்கத்தக்கது.

முதலில், நகைச்சுவையைச் சாதுரியமாகச் சொல்லத் தெரிய வேண்டும். யூத மரபினர் சொல்வடிவம் கொடுப்பதில் தேர்ச்சி பெற்றவர்கள்; இரண்டாவது, யூதர்கள் வரலாற்றில் மிகவும் ஓரங்கட்டப்பட்டவர்கள் - அதனால் அதிகம் துயருற்றவர்கள். அத்துயரைச் சமாளித்து வாழ்வை எதிர்கொள்ள நகைச்சுவை

உதவியது. இந்த வரம்பு நிலை அம்சம் நகைச்சுவைக்கு இடம் கொடுத்தது என்கிறார்.

விவிலியத்தில் வரும் ஆபிரகாமின் மனைவி சாரா "யாவே" கொடுத்த வாக்குறுதியைக் கேட்டுச் சிரித்தாள் என்று பதிவாகி உள்ளது. அதாவது, 90 வயதான கிழவி, மலடி என்று சமூகம் பழித்த ஒருத்தி அந்த வாக்குறுதியைக் கேட்டுச் சிரித்தாள் என்று கூறுகிறது. விவிலிய அறிஞர்கள் பல நூற்றாண்டுகளாக சாரவை கடவுள் வார்த்தையில் நம்பிக்கை இழந்ததாகக் குறைகூறி வந்தனர்.

ஆனால் சமகாலப் பெண்ணிய வல்லுநர்கள் அதற்கு வேறு ஒரு விளக்கம் கொடுத்து சாராவை மீட்டெடுத்துள்ளார்கள். சாராவின் சிரிப்பு நம்பிக்கையோடு கொண்டிருந்த எதிர்ப்புக் குரல் என்பர். இத்தனை ஆண்டுகளாக சமூகத்தில் மலடி என்று இழிவுபடவைத்த இறைவனிடம் தனது சிரிப்பால் தனது எதிர்ப்பையும் சுட்டிக் காட்டுகிறாள் என்பது இதன் புதிய விளக்கம்.

இந்த விளக்கம் தமிழர்களான நமக்கு ஒரு பாடமாய் அமையும் என்பதற்காக இந்த விவிலிய எடுத்துக்காட்டு இங்கு இடம் பெறுகிறது. நகைச்சுவையும் நம்பிக்கையும் இணைந்துபோகலாம். ஓரங்கட்டப்பட்டவர்களின் சிரிப்பு

அவர்கள் துயரத்தை எதிர்கொள்வது, நம்பிக்கையை உள்ளடக்கியது. நம்பிக்கை இழந்தவர் சிரிக்க மாட்டார்கள்.

தமிழர்கள் விஜயநகர ஆட்சிக்காலம் தொடங்கி, ஆங்கிலேயர் ஆட்சிக்காலம் முழுவதும் அடிமையான நிலைக்குத் தள்ளப்பட்டவர்கள். சுதந்திரம் பெற்ற பிறகும் அவர்கள் நிலை பெரிதாக மாறிவிடவில்லை. கீழ்வெண்மணியூரில் ஐம்பது பேர்கள் எரிக்கப்பட்டது நமது காலத்தில் நடந்த நிகழ்வு. 2009-இல் தமிழருக்கு நடந்த இனப்படுகொலை நாம் அறிந்த ஒன்று; அமைதியாகப் போராடிய தூத்துக்குடி மக்கள் அலங்கோலமாய்ச் சுட்டுக்கொல்லப்பட்டதை மறந்து விட முடியாது. இந்தப்பட்டியல் மிக நீண்டது.

இன்றைய அளவில் தமிழ் நாட்டில் தமிழர்கள் சிறுபான்மையினராக மாறிக் கொண்டிருப்பதற்கு யார் பொறுப்பு? இந்தச் சூழ்நிலையில் "ஆறுவது சினம்" என்று ஔவையாரைத் துணை தேடுவது பொறுப்பற்ற மனநிலை. இதெல்லாம் தமிழருக்கு எச்சரிப்புத் தரவுகள். இதற்குப் பதில் நம்பிக்கையற்ற நிலை அல்ல. நம்பிக்கையோடு சேர்ந்த சிரிப்பு தேவை. மீண்டெழ முடியும் என்ற நம்பிக்கை. அதன் வழியாக எழுவதுதான் நகைச்சுவை. பொழுது போக்குக்காக சினிமா உலகிற்குத் திரும்புவதை ஏற்றுக் கொள்ள முடியாதது.

முரண்பாட்டைப் புரிதலில் நகைச்சுவை எழும் என்பர். ஆனால் பலர் இந்த முரண்பாட்டு நடைமுறையைப் புரிந்து கொள்வதில்லை. “தமிழ் வாழ்க” என்று கார்ப்பரேசன் கட்டிடத்தில் எழுதிவிட்டு சென்னையில் வாழ்வோரில் மூன்றில் ஒரு பங்கு சேரியில் வாழ்ந்தால் எப்படித் தமிழ் வாழும்? சென்னையின் “கானா” பாடகர்களுக்குப் பரிசு கொடுத்துப் பெருமைப்படுவது ஒரு முரண்பாடு. அவர்கள் வாழ்வது கல்லறையின்/சுடுகாட்டின் பாதையோரங்கள். அவர்கள் பாடல் பயிற்சி பெற்றது இறந்தவரை எடுத்துச்செல்லும் ஊர்வலத்தில் கேட்கும் இசைக்கருவிகளின் முழக்கம். இது தமிழரின் மனச்சாட்சியைத் தட்டி எழுப்ப வேண்டும்.

தமிழ்மொழி உலகின் தொடக்கம் என்று பாடுவது ஒரு பக்கம். இந்தமொழி ஆட்சித்துறையில், நீதித்துறையில், கோவில் மொழியில் இடம் பெறவில்லை, ஆனால் எதிர்க்கப்படுகிறது. “பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்” என்ற குறள் எல்லோர் செவியிலும் ஒலிக்கிறது. இருப்பினும் தீண்டாதவர் என ஒதுக்கப்பட்டோர் நிலை வற்றாத நதிபோல் வரலாறு ஓடுகிறது.

மோயிசன் செங்கடலைக் கடந்து இஸ்ரயேல் மக்களை மீட்டார் என்பது விவிலியத்தில் கூறும் பெரிய சாதனை என்பர். ஆனால் நமது நாட்டு நடைமுறையோடு ஒப்பிட்டுப் பார்த்தால்

அது ஒரு பெரிய சாதனை அல்ல. நமது நாட்டின் சில தெருக்களில் அடித்தளச் சமமாக நடந்து போவது அதைவிடக் கடினமானது. இந்நிலை நம்மைச் சிரிக்க வைக்க வேண்டும். நம்மிடம் திறமைகளோ அதற்கான வழிமுறைச் சொத்துக்களுக்கோ பஞ்சமில்லை. நம்மிடம் நகைச்சுவை உணர்வுக்குக் குறைவில்லை. அது ஏதோ மேலெழுந்த வாரியாக, பொழுதுபோக்காக அமைந்து விட்டது. சிந்திக்கத் தூண்டவில்லை. தன்னம்பிக்கையுடன் சிரிக்கத் தூண்டவில்லை. அதனால்தான் நாம் நம்பிக்கையோடு அதிகம் சிரிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

**அழகியலின் சுருக்கம்:**

அழகியல் என்றதும் மூன்று அம்சங்களை நினைவூட்டுகிறது.
ஒன்று: அழகை விரும்பிய ஆர்வமான தேடல்;
இரண்டு: நகைச்சுவையால் அடிக்கடி மனம் விட்டுச் சிரித்தல்;
மூன்று: நெருக்கமான உறவு தேடும் தீர்க்கமுடியாத தாகம்.
எந்த ஒரு சமூகமும் - நம்பிக்கை வாதிகளோ அல்லது பகுத்தறிவுவாதிகளோ - மறுக்க முடியாத ஒரு வாழ்க்கை அனுபவம்.

அழகைத் தேடும் உணர்வு என்பது சிதறிக்கிடக்கும் வாழ்வு அம்சங்களின் பின்னால் புதைந்து மறைந்திருக்கும் முழுமையைக் காணும் திறமை என்று பொருள். உண்மையான அழகின் அனுபவம் நமது புலன்களை

மழுங்கும் அளவிற்கு மயக்கத்தில் தள்ளுவதல்ல. மாறாக அழகிய பொருட்கள், எழில்மிகு இயற்கை சூழ்நிலையில் பதுங்கியிருக்கும் முரண்பாடான அசிங்கத்தைக் கண்டுணர நமது புலன்களைக் கூர்மையாக்குகிறது. அழகைக் கண்டு அனுபவிக்கத் திறமை கொண்டவர்தான் அதற்கு முரணான அநாகரிகத்தை, அநீதியை, அடிமைப்படுத்தும் தீயசக்தியைப் புரிந்து கொள்ள முடியும். ஆனாலும் கூட நமது அழகு அனுபவத்தைச் சீர்படுத்துவதற்கு நகைச்சுவை இயல்பும் வேண்டும். வரலாற்றில் சர்வாதிகாரிகள் அனைவரும்; நகைச்சுவையாளரை, கேலிச்சித்திரம் வரைபவரை அடக்கி வைப்பார்கள். ஏனெனில்; அவர்கள் அழகு வடிவத்தில் தோன்றும் மனித விலங்கின் ஆடையற்ற அம்மணமான நிலையை வெளிக்காட்டி விடுவார்கள்.

நமது அழகு தேடும் உணர்வு சிறப்பான எதிர்காலத்தில் நம்பிக்கை கொள்வது என்று புரிந்து கொண்டால், நமது தோல்விகளையும், வாழ்வின் பின்னடைவுகளையும் வென்று விடலாம் என்ற நிச்சயமான நிலையைக் கொண்டாடும் நம்பிக்கையைக் கொடுப்பதுதான் நகைச்சுவை. ஆனாலும் கூட அன்புதான் இவற்றை நிறைவு படுத்தும், நெருங்கிய நட்புதான் அதற்கு முழுமை தரும். அன்பில்லை (காதல்) என்றால் இசையும் கூட ஒலிக்கும் வெண்கலமும், ஓசையிடும் தாளமும் ஆகும்.

## 17. முழு அரிச்சுவடி சொற்றொடர்

— முனைவர் தேமொழி

*எல்லா எழுத்து (ஆங்கிலத்தில் pangram, தமிழில் முழுவெழுத்து அல்லது 'முழு அரிச்சுவடி சொற்றொடர்') என்பது ஒரு மொழியின் அரிச்சுவடியிலுள்ள அனைத்து எழுத்துக்களாலும் அமைக்கப்பட்ட சொற்றொடரைக் குறிக்கும். இது அச்செழுத்தின் வடிவத்தைக் காட்ட, அச்செழுத்து கருவியை பரிசோதிக்க, கையெழுத்து, வனப்பெழுத்து மற்றும் தட்டச்சுத் திறனை வளர்க்கவென பாவிக்கப்பட்டது.*

***சில எடுத்துக் காட்டுகள்:***

*ஆங்கிலத்தில், **"The quick brown fox jumps over the lazy dog"** (எல்லா 26 எழுத்துக்களும்).*

*டச்சு மொழி, "Lynx c.q. vos prikt bh: dag zwemjuf!" (26 எழுத்து சிறப்புச் சொற்றொடர் எல்லா 26 எழுத்துக்களுடன்).*

*இடாய்ச்சு மொழியில், "Victor jagt zwölf Boxkämpfer quer über den großen Sylter Deich".*

*பிரெஞ்சு மொழியில், "Portez ce vieux whisky au juge blond qui fume" (எல்லா 26 எழுத்துக்களும்).*


The quick brown fox jumps over the lazy
dog and feels as if he were in the seventh
heaven of typography together with Her-
mann Zapf, the most famous artist of the


THIS IS AN OLD ENGLISH LANGUAGE PANAGRAM
The Quick Brown Fox
Jumps Over The Lazy Dog
USED TO TEST TYPEWRITERS AND COMPUTER KEYBOARDS

The quick brown fox jumped over the lazy dog

The quick brown fox jumped over the lazy dog

The quick brown fox jumped over the lazy dog

The quick brown fox jumped over the lazy dog

The quick brown fox jumped over the lazy dog

THE QUICK BROWN FOX JUMPED OVER THE LAZY DOG

The quick brown fox jumped over the lazy dog

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTCHN_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTCNBI_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTCNB_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTHNBI_Ship#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTHNB_Ship#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTILB_Ship#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTILN_Ship#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKDI_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKDN_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKGBI_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKGB_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKLBI_Ship.TTF#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKLB_Ship#)

யானையின் காதில் தமிழ் பேசியது யார்.!? விரிவாக (TMOTKMBI_Ship.TTF#)

*ஆங்கிலத்தில், "The quick brown fox jumps over the lazy dog" என்ற எல்லா 26 எழுத்துக்களும் நாம் புதிய எழுத்துரு (font) ஒன்றை தரவிறக்கம் செய்கையில் அதன் சிறப்பைச் சோதித்து முடிவெடுக்க கொடுத்து இருப்பார்கள். அது போல அண்மையில் நீச்சல்காரன் ராஜாராமனும் தமிழ் எழுத்துருக்களுக்கு அதன் மாதிரி வடிவம் அளித்து உதவி இருந்தார். அவரது சொற்றொடர் தேர்வு "யானையின் காதில் தமிழ் பேசியது யார்?"(பார்க்க நீச்சல்காரன் தளம்: https://oss.neechalkaran.com/tamilfonts/?index=0)*

| ஃ | அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ | ஏ | ஐ | ஒ | ஓ | ஔ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க் | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங் | ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச் | ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ் | ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞள |
| ட் | ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண் | ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த் | த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந் | ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப் | ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம் | ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய் | ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர் | ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல் | ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ் | வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ் | ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழொ | ழௌ |
| ள் | ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற் | ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன் | ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

தமிழில் பரவலாக பயன்படுத்தப்படும் கிரந்த எழுத்துக்கள்

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ஜ் | ஜ | ஜா | ஜி | ஜீ | ஜு | ஜூ | ஜெ | ஜே | ஜை | ஜொ | ஜோ | ஜௌ |
| ஷ் | ஷ | ஷா | ஷி | ஷீ | ஷு | ஷூ | ஷெ | ஷே | ஷை | ஷொ | ஷோ | ஷௌ |
| ஸ் | ஸ | ஸா | ஸி | ஸீ | ஸு | ஸூ | ஸெ | ஸே | ஸை | ஸொ | ஸோ | ஸௌ |
| ஹ் | ஹ | ஹா | ஹி | ஹீ | ஹு | ஹூ | ஹெ | ஹே | ஹை | ஹொ | ஹோ | ஹௌ |
| க்ஷ் | க்ஷ | க்ஷா | க்ஷி | க்ஷீ | க்ஷு | க்ஷூ | க்ஷெ | க்ஷே | க்ஷை | க்ஷொ | க்ஷோ | க்ஷௌ |
| ஶ்ரீ | | | | | | | | | | | | |

ஆங்கிலத்தில் புதிதாக எழுத்துரு ஒன்றை உருவாக்க இந்த ஒற்றை வரியை உருவாக்கினால் போதும். "The quick brown fox jumps over the lazy dog" என்ற இச்சொற்றொடரை வைத்துப் புதிய எழுத்துருவை உருவாக்கி விடலாம். ஆனால் தமிழில் அப்படியொரு சொற்றொடர் இதுவரை பயன்பாட்டில் இல்லை.

எவரேனும் "The quick brown fox jumps over the lazy dog" என்ற ஆங்கில முழு அரிச்சுவடி சொற்றொடர் போல அனைத்து தமிழ் எழுத்துக்களையும் அமைக்க உதவும் ஒரு சொற்றொடர் உருவாக்க முடிந்தால் அவர்களுக்குப் பரிசு அளிப்பதாக நார்வே வாழ் தமிழரான வள்ளுவர் வள்ளலார் வட்டம் மின்னச்சன் திரு.இங்கர்சால் அவர்கள் அறிவித்திருந்தார்.

அதற்கு உதவியாக எழுத்துகளின் வடிவம் குறித்த ஒரு படம் செய்தியும் பகிர்ந்து உதவியிருந்தார். தேவைப்படும் தகவலும் குறிப்புதவிகளும் அளித்திருந்தார்.

தமிழ் ஒருங்குறி எழுத்துக்களை வகைப்படுத்தும் முறை மாறுபட்டது, அவை வடிவத்தின் அடிப்படையில் வகைப்படுத்தப்படும். அவ்வகைகளை சுருக்கமாக இவ்வாறு காட்டலாம் = ்,ா, ி, ீ, ு, ூ, ெ, ே, ை, ொ, ோ, ௗ, ௌ

உயிரெழுத்து = அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ
மெய்யெழுத்து = க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற்,ன்
ஆய்தெழுத்து = ஃ
துணைக்கால் = கா, ஙா, சா, ஞா, டா, ணா, தா, நா, பா, மா, யா, ரா, லா, வா, ழா, ளா, றா, னா
மேல்விலங்கு = கி, ஙி, சி, ஞி, டி, ணி, தி, நி, பி, மி, யி, ரி, லி, வி, ழி, ளி, றி, னி
மேல்விலங்குச்சுழி = கீ, ஙீ, சீ, ஞீ, டீ, ணீ, தீ, நீ, பீ, மீ, யீ, ரீ, லீ, வீ, ழீ, ளீ, றீ, னீ
கீழ்விலங்கு = கு, டு, மு, ரு, ழு, ளு
இறங்குகீற்று = ஙு, சு, பு, யு, வு
ஏறுக்கீற்று = ஞு, ணு, து, நு, லு, று, னு
பின்வளைகீற்று = கூ
கீழ்விலங்குச்சுழி = டூ, மூ, ரூ, ழூ, ளூ
ஏறுகீற்றுக்கால் = ஞூ, ணூ, தூ, நூ, லூ, றூ, னூ
இறங்குகீற்றுச்சுழி = சூ, ஙூ, பூ, யூ, வூ
ஓர்க்கொம்பு = கெ, ஙெ, செ, ஞெ, டெ, ணெ, தெ, நெ, பெ, மெ, யெ, ரெ, லெ, வெ, ழெ, ளெ, றெ, னெ
ஈர்க்கொம்பு = கே, ஙே, சே, ஞே, டே, ணே, தே, நே, பே, மே, யே, ரே, லே, வே, ழே, ளே, றே, னே
சங்கிலிக்கொம்பு = கை, ஙை, சை, ஞை, டை, ணை, தை, நை, பை, மை, யை, ரை, லை, வை, ழை, ளை, றை, னை

ஓர்க்கொம்புக்கால் = கொ, ஙொ, சொ, ஞொ, டொ, ணொ, தொ, நொ, பொ, மொ, யொ, ரொ, லொ, வொ, ழொ, ளொ, றொ, னொ
ஈர்க்கொம்புக்கால் = கோ, ஙோ, சோ, ஞோ, டோ, ணோ, தோ, நோ, போ, மோ, யோ, ரோ, லோ, வோ, ழோ, ளோ, றோ, னோ
இணைக்கால் = (ஊ, கௌ, சௌ)
ஓர்க்கொம்பு இணைக்கால் = கௌ, ஙௌ, சௌ, ஞௌ, டௌ, ணௌ, தௌ, நௌ, பௌ, மௌ, யௌ, ரௌ, லௌ, வௌ, ழௌ, ளௌ, றௌ, னௌ

எழுத்துக்களின் பட்டியல்:




ஃ ஆ இ ஈ ஊ ஏ ஐ ஔ கு கூ கெ க்ஷ நூ சூ ஞு ஞூ டி டீ டு ணீ ணு தா து நி பூ மு யூ ர ரூ லீ வூ ழு றே னை ஜு ஜூ ஸ ஷ ஹ

*தமிழுக்காக உருவாக்கப்படும் 'எல்லா எழுத்தும் கொண்ட ' சொற்றொடரில் இந்தப் பண்புகள் அனைத்தும் இருக்கவேண்டும் என்பது முயற்சியின் நோக்கம் படத்தில் குறிப்பிட்டிருந்த எழுத்துக்கள் பரிந்துரைக்காக மட்டுமே. தமிழில் பரவலாகப் பயன்பாட்டில் இருக்கும் இருக்கும், சமஸ்கிருத சொற்களை எழுதப் பயன் கொள்ளப்படும் எழுத்துக்களும் இவற்றில் அடக்கம்.*

*உதாரணத்திற்கு கெ இதில் வரும் துணை ெ எழுத்தை வைத்து ஙெ, செ, ஞெ, டெ, ணெ... வரிசை முழுவதும் எழுதிவிடலாம். சொற்றொடர் அமைக்க கெ-க்கு பதில் ஙெ, செ, ஞெ, டெ.. இதில் எதை வேண்டுமென்றாலும் நீங்கள் பயன்படுத்தலாம். ஆரஞ்சு நிறக் குறியீடுகள் அனைத்தும் அந்த வகை வகையே. அந்த வரிசையில் உள்ள எழுத்து எது வேண்டுமானாலும் இடம் பெறலாம்.*

***எனது முயற்சியில் எல்லா எழுத்தும் கொண்ட முழு அரிச்சுவடி சொற்றொடர்::***

***தமிழ் நெடுங்கணக்கு 247 எழுத்துகள் எல்லா எழுத்து சொற்றொடர்:***

*"ஈவது விலக்கேல், ஏற்பது இகழ்ச்சி, ஐயமிட்டு உண், ஊக்கமது கைவிடேல், மூதுரை ஔவை கூறிய ஆத்திசூடி நூலின் தீஞ்சுவை மொழி, அஃதே எங்கள் பூவுலக நெறி.*






முனைவர் தேமொழி

உருவாக்கிய முழுவெழுத்து

ஈவது விலக்கேல், ஏற்பது இகழ்ச்சி, ஐயமிட்டு உண், ஊக்கமது கைவிடேல், மூதுரை ஔவை கூறிய ஆத்திசூடி நூலின் தீஞ்சுவை மொழி, அஃதே எங்கள் பூவுலக நெறி

| | |
|---|---|
| மொத்த எழுத்துக்கள் | 68 |
| மொத்தச் சொற்கள் | 19 |
| க - 3 / து – 4 / றி, வை, ய, ல், க், ல, வி – 2 / நெ, வு, பூ, ள், ங், எ, தே, ஃ, அ, ழி, மொ, சு, ஞ், தீ, ன், லி, நூ, டி, சூ, தி, த், ஆ, கூ, ள, ஒ, ரை, மூ, டே, கை, ம, ஊ, ண், உ, டு, ட், மி, ஐ, சி, ச், ழ், இ, ப, ற், ஏ, கே, வ, ஈ - 1 | |

ஃ, அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, க, கி, கூ, கே, கை, க், ங், சி, சு, சூ, ச், ஞ், டி, டு, டே, ட், ண், தி, தீ, து, தே, த், நூ, நெ, ப, பூ, மி, மூ, மொ, ய, ரை, ல, லி, ல், வ, வி, வு, வை, ழி, ழ், ள, ள், றி, ற், ன்






## முனைவர் தேமொழி உருவாக்கிய முழுவெழுத்து

தமிழ் ஔவை, ஈழ பழுவூர் ஸ்ரீமயூரபுருஷன் வீட்டில், லீவு நாளான மூன்றாம் தேதி ஞாயிறு ஏழு மணி விருந்துக்கு, டிஃபன் ஸ்பெஷல் பக்ஷணங்களாக, சூடான இட்லி பூரி ஊத்தப்பம் ஆமவடை கூட்டு ஹல்வா நுங்குஜூஸ் ஐஸ்டீ சாப்பிட்டாள்

| | |
|---|---|
| மொத்த எழுத்துக்கள் | 100 |
| மொத்தச் சொற்கள் | 29 |
| ட், ஸ், ப | 4 |
| ல், ன், ஷ, ம | 3 |
| ப், டு, க, ங், கு, க், ம், டி, ரு, மு, த | 2 |
| ள், டா, பி, சா, டீ, ஐ, ஜூ, நு, வா, ஹ, கூ, டை, வ, ஆ, த், ஊ, ரி, பூ, லி, இ, சூ, லு, நா, ளா, ண, பெ, ஃ, து, ந், வி, ணி, ஏ, தி, தே, றா, மூ, று, யி, ஞா, வு, லீ, வீ, பு, ர, யூ, ரீ, ர், வூ, ழ, ஈ, வை, ஔ, ழ், மி | 1 |

**முழு அரிச்சுவடி மற்றும் கிரந்த எழுத்துக்கள் உள்ளிட்ட எல்லா எழுத்து சொற்றொடர்:**

தமிழ் ஔவை, ஈழ பழுவூர் ஸ்ரீமயூரபுருஷன் வீட்டில், லீவு நாளான மூன்றாம் தேதி ஞாயிறு ஏழு மணி விருந்துக்கு, டிஃபன் ஸ்பெஷல் பக்ஷணங்களாக, சூடான இட்லி பூரி ஊத்தப்பம் ஆமவடை கூட்டு ஹல்வா நுங்குஜூஸ் ஐஸ்டீ சாப்பிட்டாள்.

தமிழ் எழுத்துரு முழுமையும் உருவாக்க உதவியாக 100 எழுத்துக்கள் அடங்கிய முதல் சொற்றொடர் இது என்ற பாராட்டு பெற்றது இது.

கிரந்த சொற்கள் தவிர்த்த எளிமையான தூய தமிழ் முழுவெழுத்துச் சொற்றொடரான :

"ஈவது விலக்கேல், ஏற்பது இகழ்ச்சி, ஐயமிட்டு உண், ஊக்கமது கைவிடேல், மூதுரை ஔவை கூறிய ஆத்திசூடி நூலின் தீஞ்சுவை மொழி, அஃதே எங்கள் பூவுலக நெறி." இந்த சொற்றொடரில் மொத்த எழுத்துக்கள் 68, மொத்தச் சொற்கள் 19

(பார்க்க:
https://www.facebook.com/photo/?fbid=489117597587053&set=a.207894635915234).

*கிரந்த சொற்கள் உள்ளிட்ட தமிழ் முழுவெழுத்துச் சொற்றொடரான :*

*"தமிழ் ஔவை, ஈழ பழுவூர் ஸ்ரீமயூரபுருஷின் வீட்டில், லீவு நாளான மூன்றாம் தேதி ஞாயிறு ஏழு மணி விருந்துக்கு, டிஃபன் ஸ்பெஷல் பக்ஷணங்களாக, சூடான இட்லி பூரி ஊத்தப்பம் ஆமவடை கூட்டு ஹல்வா நுங்குஜூஸ் ஐஸ்டீ சாப்பிட்டாள். இந்த சொற்றொடரில் மொத்த எழுத்துக்கள் 100, மொத்தச் சொற்கள் 29". தேர்வு பெற்ற இந்த சொற்றொடர் மிகவும் குறைந்த நீளத்தில் எளிய சொற்களில் இருந்ததாகப் பாராட்டப் பட்டது குறிப்பிடத்தக்கது*

(*பார்க்க:*

*https://www.facebook.com/photo?fbid=488668141470317 6&set=a.207894635915234*).

*இந்தச் சொற்றொடர்களில் உயிரெழுத்து, மெய்யெழுத்து, ஆய்தெழுத்து, துணைக்கால், மேல்விலங்கு, மேல்விலங்குச்சுழி, கீழ்விலங்கு, இறங்குகீற்று, ஏறுக்கீற்று, பின்வளைகீற்று, கீழ்விலங்குச்சுழி, ஏறுகீற்றுக்கால், இறங்குகீற்றுச்சுழி, ஓர்க்கொம்பு, ஈர்க்கொம்பு, சங்கிலிக்கொம்பு என தமிழின் 'எல்லா எழுத்து வடிவங்களும்' இருக்கின்றன. முழுவெழுத்து சொற்றொடர் உருவாக்க கிடைத்த வாய்ப்பில் மகிழ்கிறேன்.*

## 18. திருவள்ளுவர் யார் ?

— முனைவர் சிவ. இளங்கோ

திருவள்ளுவர் யார் என்று நெடுங்காலத்திற்கு முன்பே தொடங்கிய ஆராய்ச்சி இன்று வரை முற்றுப்பெறவில்லை. அவரைக் குறித்து வரலாறு என்ற பெயரில் எழுதப்பட்டுள்ள கதைகளில் பெரும்பான்மையானவை புராணக் கதைகளைப் போன்றே உள்ளன. இவற்றையெல்லாம் கேட்க நேர்ந்தால் வள்ளுவரே அசந்துவிடுவார். நான் அவனில்லை என்று கூடக் கூறலாம். இக்கதைகள் வரலாற்றுக்குப் பொருந்துவதாக இல்லை என்பதால் ஆய்வாளர்களால் அவைகள் புறந்தள்ளப்படுகின்றன. இருக்கின்ற ஒரே சான்று அவர் எழுதிய திருக்குறள் என்பதால் அதிலிருக்கும் சொல்லாட்சி, மொழிநடை, இடம்பெறும் பெயர்கள், உவமைகள், கதைகள், மேற்கோள், பழமொழி முதலானவற்றை வைத்துத் திருவள்ளுவர் யார் என்று அறுதியிடும் முயற்சிகளும் பன்னெடுங்காலமாக நிலவி வருகின்றன. இம்முயற்சிகளால் அவர் தங்கள் நாட்டைச் சேர்ந்தவர், தங்கள் சமயத்தைச் சேர்ந்தவர் என்றெல்லாம் அவரவர் விருப்பத்திற்கும், பயன்களுக்கும் உள்ளாக்கப் படுகிறார். மேலும், அவர் மீது பல முத்திரைகளும், பல வண்ணங்களும், பல முகமூடிகளும் அணியப்பட்டு

பல்வேறுவித அடையாளங்களுடன் பார்க்கப்படுகிறார். தற்போதைய அடையாளம் காவி தரித்த உருவம். ஒருமை, ஒற்றுமை, மாந்தநேயம் ஆகிய பிம்பங்கள் சிதையுமளவில் இவ்வேற்றுமைகள் உருவாக்கப்படுகின்றன. இவற்றுக்கெல்லாம் இடம் கொடுத்தது திருக்குறளா, இத்தனை நூற்றாண்டுக்கால இடைவெளியா, எழுத்துருக்களின் வளர்ச்சி நிலையா, இடைச்செருகல்களா, உரையெழுதியோரின் உள்மன விகாரங்களா, அதிகார மாற்றங்களா, சமயச் சண்டைகளா என்று பன்னோக்கில் எழுந்து நிற்கும் வினாக்களுக்கு விடை காண்பது எளிதாக இல்லை.



திருக்குறளில் பாதிக்கு மேற்பட்ட குறள்கள் தமிழ் படித்தோர்க்கு எளிதில் விளங்கிவிடும். மீதியில் பெரும்பாலானவற்றை உரையாசிரியர்கள் மூலம் புரிந்து கொள்ள முடியும். ஒருசில பகுதிகள் உரையாசிரியர்களாலும் விளங்க வைக்க முடியாதவை. அவற்றுள் ஒருசில உரையாசிரியர்களுக்கே விளங்காதவை. மிகக் குறிப்பிட்ட சில குறள்கள் வள்ளுவருக்கு மட்டுமே விளங்கக்கூடியவை. அவர் வாய்திறந்தால்தான் உண்டு. அப்படிப்பட்ட குறள்களில் ஒன்றுதான் முதல் குறள். அந்த 'ஆதி பகவன்' யார்தானென்று இதுவரை நடந்த ஆய்வுகளை எழுதியும், படித்தும் மாளவில்லை. பலவாறாகப் பொருள் கூறப்பட்ட அந்த 'ஆதிபகவன்' சொல்லாய்வில் ஏதோ ஒரு கூற்றில் உண்மை இருக்கக் கூடும். ஆனால் அது அனைவரும் ஏற்றுக் கொள்ளும் உண்மையாக இருக்க முடியாது என்ற நிலை திருக்குறளில் ஒருமை இல்லையோ என்ற எண்ணத்தைக் கூட ஏற்படுத்திவிடும். இருமையைப் பற்றிப் பல இடங்களில் கூறிச் செல்லும் அவருடைய கருத்தினால் ஒருமையும் இருக்கும், இருமையும் இருக்கும் என்பதையே குறளின் சிறப்பாகக் கொள்ளலாம். அதே நேரம், திருக்குறளை முழுமையாகப் புரிந்துகொள்ள வேண்டுமென்றால் இந்தியாவின் தொடக்கக்காலச் சமயங்களான சமணம், பௌத்தம், ஆசீவகம் ஆகிய மூன்று சமயங்களுக்கும் திருக்குறளுக்கும் உள்ள தொடர்பினை அறிந்தாக வேண்டும்.

### திருக்குறளும் சமணமும்:

திருக்குறள் இயற்றப்பட்ட காலத்திலிருந்து (கி.மு. மூன்று) ஆயிரம் ஆண்டுகள் வரை கற்றோர் இடையில் அந்நூல் செல்வாக்குடன் இருந்து வந்தது. பதினான்காம் நூற்றாண்டுக்குப்பிறகு சமணம், பௌத்தம், ஆசீவகம் ஆகிய சமயங்கள் தமிழகத்தில் செல்வாக்கிழந்த பின்னர், திருக்குறளும் மறக்கடிக்கப்பட்டு விட்டது. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியில் பிரிட்டிஷ் இந்தியாவின் சென்னை மாகாண ஆட்சியர் பொறுப்பேற்ற பிரான்சிஸ் வைட் எல்லீஸ் (1777 – 1819) காலத்தில், அவர் வெளியிட்ட திருக்குறள் (1812) நூல்தான் மீண்டும் திருக்குறளைத் தமிழகத்திற்கு நினைவில் கொண்டுவந்தது. (இதற்கு முன்பும் வீரமாமுனிவர் உள்ளிட்ட சிலரின் பதிப்புகள் வெளிவந்துள்ளன). அயோத்திதாசனாரின் பாட்டனார் கந்தப்பன் வழி, அவருடைய அதிகாரி ஆரிங்டன் வழி திருக்குறள் ஓலைச்சுவடி எல்லீசை அடைந்தது. அது ஒரு சமண நூலாகவே எல்லீஸ் குறிப்பிட்டுத் திருக்குறளின் முதல் பதின்மூன்று அதிகாரங்களில் இருந்து தெரிந்தெடுத்த குறள்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்து நீண்ட விளக்கங்களுடனும், பிற இலக்கிய மேற்கோள்களுடனும் 1812 இல் வெளியிட்டார். அந்தக் காலத்தில் நிலவிய கருத்துப்படி அவர் திருவள்ளுவரைச் சமணராகவே அவரது நூலில் அடையாளப்படுத்தினார். எல்லீஸ் காலத்தில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் திருவள்ளுவர் தங்க

நாணயங்களை வெளியிட்டது. நாணயத்தில் திருவள்ளுவர் உருவம் சமண முனிவராகவே காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

திருக்குறளின் முதல் குறளில் இடம் பெறும் 'ஆதிபகவன் முதற்றே உலகு' என்னும் தொடரில் வரும் ஆதிபகவன், சமணத்தின் முதல் தீர்த்தங்கரரான ஆதிநாதரைக் குறிப்பதாகச் சமண நூல்கள் குறிப்பிடுகின்றன. ஆதிநாதரும், ஆதிசிவனும், ஒருவரே என்றும், சமணமும், சித்தமும் அதிலிருந்தே தொடங்குகின்றன என்றும் ஆய்வாளர்கள் சிலர் குறிப்பிடுகின்றனர். சிந்துவெளி முத்திரைகளில் எருமைக் கொம்புகள் அணிந்து தவ நிலையில் காணப்படும் உருவம் ஆதிநாதர் என்றும், இடப (ரிஷப) தேவரே என்றும், சிந்துவெளி வரை பேசப்பட்ட மொழி தமிழே என்றும், சமணம் தமிழ்ச் சமயமே என்றும், சமண இலக்கியங்களே தமிழில் அதிகம் என்றும் அண்மைய ஆய்வுகள் கருத்துரைக்கின்றன. பிற சமயக் குரவர்கள் அனைவரும் விருஷபதேவருக்குப் பின்னர் தோன்றியவர்களே என்று திருவள்ளுவர் சைனர் (சமணர்) என்ற கட்டுரையில் திரு.வி.க. குறிப்பிடுகிறார். சமணம் தமிழகத்தில் இறக்குமதியானதல்ல, ஆதிநாதர் (சிந்துவெளி) காலந்தொட்டே தமிழர்களின் சமயமாக சமணம் இருந்துள்ளது. தமிழ்ச் சமணர்களின் தமிழ்த் தொண்டாக இலக்கணம், இலக்கியம், அற இலக்கியம், உரைகள் ஆகிய தொண்டுகள் உள்ளன என்கிறார் பேரா. க.ப.அறவாணன். சமணர்களின் காலமே தமிழ் நாகரிகத்தின்

பொற்காலம் என்கிறார் கால்டுவெல். காப்பியங்கள், புராணங்கள் உட்பட 22 இலக்கிய நூல்களும், தொல்காப்பியம், நன்னூல் உட்பட 20 இலக்கண நூல்களும், திருக்குறள், நாலடியார் உட்பட 16 அற நூல்களும், நீலகேசி உள்ளிட்ட நான்கு தருக்க நூல்களும், பெருங்குருகு, செயிற்றியம் உள்ளிட்ட ஒன்பது இசை நூல்களும், பிற இலக்கிய வகைகளான நிகண்டு, ஓவியம், சோதிடம், பிரபந்தம், சதகம், கணிதம், நாடகம் ஆகிய வகையில் திருக்கலம்பகம், சூடாமணி நிகண்டு உள்ளிட்ட 36 நூல்களும் ஆக மொத்தம் 107 இலக்கிய நூல்கள் தமிழ்ச் சமணர்களால் இயற்றப்பட்டுள்ளன என்ற செய்தி, தமிழக அரசு வெளியீடான தமிழரசு இதழில் (1.11.1974) வெளியிடப்பட்டுள்ளது (தகவல் இரா.பானுகுமார், சென்னை-மின் தமிழ், தமிழ் மரபு அறக்கட்டளை).

திருவள்ளுவரைக் கொண்டாடும் சைவ, வைணவ மதங்களின் வழிபாட்டு இடங்களில் அவருடைய உருவம் அமைக்கப்படுவதில்லை. அடியவர் வாழ்த்தில் அவர் சேர்க்கப்படுவதில்லை. இதற்குத் திருவள்ளுவர் முன்னாளில் சமணர் என்று ஏற்றுக்கொள்ளப்பட்ட வழக்கமே காரணம் என்கிறார் திரு. வி.க. திருவள்ளுவரை எச்சமயத்தின் சார்பாகப் பார்த்தாலும் அவை அத்தனையுமே அருகதேவர் (மகாவீரர்) கண்ட அருள்நெறியின் பாற்பட்டன வென்பதும் திரு.வி.க. வின் ஆழ்ந்த கருத்து. கொல்லாமையைத்

திருவள்ளுவர் வலியுறுத்தியதைப் போல் அவர் காலத்துப் புலவர்கள் யாரும் வலியுறுத்தவில்லை (அறவினை யாதெனின் கொல்லாமை – குறள் - 321). மேலும் அறத்தைப் பாயிரத்தில் அமைக்கும் மரபாட்சியும் சைனருடையதே என்றும் திரு.வி.க. கூறுகிறார். 'பிரபோத சந்திரோதயம்' என்ற வேதாந்த நாடக நூலில் சமணர் சார்பில் 'அவிசொரிந்து ஆயிரம் வேட்டலின் ஒன்றன் உயிர் செகுத்துண்ணாமை நன்று' என்ற குறள் இடம் பெற்றிருப்பதையும் அவர் சுட்டிக்காட்டுகிறார். பொறிவாயில் ஐந்தவித்தான் என்பது ஆதிபகவனையே குறிக்கும். அவரே ஆதிநாதர் (ரிஷப நாதர்). இதுவே திருவள்ளுவர் தம் நூலில் வைத்துள்ள திறவுகோல் என்று தன் ஆய்வில் திரு.வி.க. உரைக்கிறார்.

சைன (சமண) சமயம் விதிக்கின்ற ஐவகை நோன்புகளான கொல்லாமை, வாய்மை, கள்ளாமை, பிரமச்சரியம், உடமை நீக்கம் ஆகியவற்றைப் பல குறள்களில் வலியுறுத்தியும், தனித்தனி அதிகாரத்தில் இக்கருத்துகளை அமைத்தும் இருப்பது திருக்குறள் சைன சமய நூலே என்று நிறுவப் போதுமானதென்று அ.சக்கரவர்த்தி நயினார் 'திருக்குறள் வழங்கும் செய்தி' (1959) எனும் கட்டுரையில் விளக்குகிறார். ஜைன சமயத்தில் நான்கு விழுமியங்களாக (மங்களமாக) அருகன், சித்தன், சங்கம், தருமம் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன. இவற்றைப் பாகத மொழியில் திருவள்ளுவர் இயற்றிய ஒரு பாடலில் அமைத்திருப்பதாகக்

*கூறும் சக்கரவர்த்தி நயினார், இதனைப் பின்பற்றியே திருக்குறளில் கடவுள் வாழ்த்து, நீத்தார் பெருமை, அறன் வலியுறுத்தல் ஆகிய அதிகாரங்கள் அமைக்கப்பட்டிருப்பதாகவும், இதே கருத்தையும், முறையையும் திருத்தக்க தேவர், சீவக சிந்தாமணியில் பின்பற்றியிருப்பதாகவும் தெரிவிக்கிறார். தேவர், நாயனார் என்பவை சமண முனிவர்களுக்கு வழங்கும் பெயர் என்று சமணத்தின் பன்மொழி நூல்களும் தெரிவிக்கின்றன.*

## திருக்குறளும் பௌத்தமும்:

*புத்த சமயம் இந்தியாவிலும், பிற நாடுகளிலும் பரவியமைக்கு மாமன்னர் அசோகனே காரணம். புத்தர் (கி.மு. 623 – 543) பரிநிர்வாணம் எய்தி (இறந்தபின்) 300 ஆண்டுகள் கழித்து மௌரிய மாமன்னனான அசோகன் புத்த சமயத்தைத் தழுவி, அதை அரசாங்க மதமாகவும் ஆக்கினார். அதே காலத்தில் சமணம், ஆசீவகம் ஆகிய சமயங்களும் செல்வாக்குப் பெற்றிருந்தன. வைதிகமும் கொஞ்சம் வளர்ந்திருந்தது. அசோகனின் தூதுவர்களாகப் புத்த சமயம் பரப்ப வந்தவர்கள் முக்கியமான இடங்களில் கல்வெட்டுகளையும், அசோக சக்கரம், தூண்களை நிறுவினார்கள். சில இடங்களில் புத்தர் இன்னார் என்று அறிய அவரது பாத உருவங்களைப் பொறித்தார்கள். இதுதான் இந்தியாவில் முதன்முதலாக உருவ வழிபாடுகளைத் தோற்றுவித்தது. அதற்கு முன்னரும் சில வழிபாடுகள் இருந்திருந்தன. தமிழர்களைப்*

பொறுத்தவரையில் முன்னோர் வழிபாடும், தாய்த் தெய்வ வழிபாடும், நடுகல் வழிபாடும் தமிழ்ச் சமுதாயத்தில் இருந்தன. முன்னோர் வழிபாடு உருவமில்லாதது. ஆனால் இடம் சார்ந்து கிடைக்கும் பொருட்களால் அடையாளப் படுத்தப்படுவது. தாய்த் தெய்வ வழிபாடு ஒரு பெண்ணுருவம், குறிப்பாகத் தாய் உருவம் சிறியதாக வடிவமைக்கப்பட்டது. நடுகல் வழிபாட்டில் தொடக்கத்தில் உருவம் இல்லை. பெயரும் அவரைச் சார்ந்த ஏதோ ஒரு அடையாளமும் இடம்பெற்று வந்தன. இந்நிலையில்தான் கௌதமபுத்தரின் திருவடிகளைத் தொழும் வழிபாடு அசோக மாமன்னரால் கி.மு. 300 இல் உருவாக்கப்பட்டது. திருக்குறளின் முதல் அதிகாரமான கடவுள் வாழ்த்தில் (திருக்குறளில் கடவுள் என்ற சொல் எங்கும் இடம் பெறாத நிலையில் கடவுள் வாழ்த்து எனும் தலைப்பு இடைச்செருகலே என்ற கருத்தும் நிலவுகிறது) பாதங்களைத் தொழும் தன்மை மிகுதியாக இடம்பெற்றுள்ளது. வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின், மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார், வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார், தனக்குவமை இல்லாதான் தாள், அறவாழி அந்தணன் தாள், எண்குணத்தான் தாளை, இறைவன் அடி சேராதார் என்று தாள், அடி ஆகிய காலடி அல்லது பாத வணக்கத்தைத் திருவள்ளுவர் வலியுறுத்துகிறார். இதில் கூறப்படும் தாள், அடி என்பவை புத்தருடையதே என அதற்குரிய அடைமொழிகளான, வாலறிவன், மலர்மிசை ஏகினான்,

எண்குணத்தான் போன்றவைகளைச் சுட்டிக்காட்டிப் புத்த சமயத்தினர் கூறிவருகின்றனர். இவை மகாவீரருக்குச் சொல்லப்பட்டவை என சமண சமயத்தவரும் கூறுகின்றனர்.

புத்தரின் ஒழுக்க இயலைப் பாலிமொழி நூல்களான விநயபிடகம், சூத்திரபிடகம் ஆகிய தொகை நூல்கள் விவரிக்கின்றன. இந்நூலில் புத்தரின் போதனைகளாகக் குறிக்கப்பெறும் ஒழுக்கவியல் திருவள்ளுவர் கூறும் திருக்குறள் ஒழுக்கவியலோடு பெரிதும் ஒத்துப் போவதைத் தனிநாயகம் அடிகளார் விவரித்துள்ளார். சாதி வேற்றுமைகளை ஒழித்த புத்தரின் கருத்து புண்ணிய பூமியை விரிவாக்கியது. அதைத் தென்னாட்டில் விரிவுபடுத்தியது திருக்குறள். புத்த தன்மங்களான பஞ்சசீலம் (ஐவகை நெறி), அஷ்டசீலம் (எண்குணத்தான்), தசசீலம் (பத்துக்கட்டளைகள்) ஆகியவற்றைத் திருக்குறளில் பொய்யாமை, அகந்தூய்மை வாய்மையாற் காணப்படும், கொல்லான், புலாலை மறுத்தானை, எவ்வுயிர்க்கும் செந்தண்மை போன்றவும் இன்னும் பல குறள்களிலும் காணலாம். அதே நேரம் துறவறத்தை அதிகமாகப் புத்தர் வலியுறுத்தியபோதும் திருவள்ளுவர் இல்லறத்தை வலியுறுத்தி அதுவே அறம் என்று மொழிவதை 'அறனெனப்பட்டதே இல்வாழ்க்கை' என்று மொழியும் குறள்கள் மூலமாக அறியலாம் என்றும் தனிநாயகம் அடிகளார் கூறுகிறார். துன்ப நீக்கத்திற்கு வழியாக இறப்பை வள்ளுவர் வலியுறுத்தவில்லை. மாறாக

வாழ்க்கையைச் சுவைத்து வாழும் முறையையும் இன்பத்துப் பாலாகக் கொடுத்திருக்கிறார்.

புத்தரின் போதனைகளான தன்மபீடம், சூத்திரபீடம், விநயபீடம் ஆகிய மூன்று பிடகக் (திரிபிடகம்) கருத்துக்களையே மெய்யறம், மெய்ப்பொருள், மெய்யின்பம் என்னும் மூன்று பிரிவாகத் திரிக்குறள் நூலை திருவள்ளுவர் இயற்றினார் என்று அயோத்திதாசர் குறிப்பிடுகிறார். வள்ளுவர், சாக்கையர், நிமித்திகர், வேந்தன், மாதானுபங்கி, செந்நாப்போதார், பொய்யாமொழி என்று வழங்கும் பெயர்களைத் திவாகரம், பின்கலை நிகண்டு, மணிமேகலை, சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் இன்னும் பிற இலக்கியங்களில் இருந்தும் பண்டிதர் மேற்கோள் காட்டியுள்ளார். மேலும், திருவள்ளுவர் மன்னர் குலத்தைச் சேர்ந்தவர் என்றும், இறுதியாகத் தின்னனூர் அருகில் இராகுல வியாரத்தில் தங்கி நல்லுரைகள் ஆற்றிப் பின் காலமானார் என்றும் 'தியானப் பஞ்சரத்தினப்பா' என்னும் ஓலைச் சுவடிச் செய்தியையும் கூறுகிறார். திருவள்ளுவர் நினைவிடம் கட்டப்பட்ட இராகுல வியாரம் தற்போது வீரராகவர் ஆலயமாக வைணவ சமயத்தார் வசம் உள்ளதாகவும் பண்டிதர் கூறுகிறார். இந்த உண்மைகளைத் திரித்து திருவள்ளுவரை வேறு சமயத்தவராகவும், வேறு இனத்தவராகவும் காட்டவேண்டும் என்பதற்காகவே எழுவரோடு உடன்பிறந்தார் என்று கூறும் 'கபிலர் அகவல்'

போன்ற பொய்யான வரலாறுகள் புனையப்பட்டதாகக் கூறும் அயோத்திதாசர், எல்லீஸ் வெளியிட்ட திருக்குறள் (1812) நூலிலும், அதன் பின்னர் 1831 இல் வெளிவந்த நூலிலும் திருவள்ளுவர் வரலாறு இல்லையென்றும், 1935 இல் விசாகப் பெருமாளையரும், 1937 இல் சரவணப் பெருமாளையரும் ஆதி, பகவன் ஆகியோருக்குப் பிறந்தவர் வள்ளுவர் என்ற கட்டுக்கதைகளைச் சேர்த்து விட்டனர் என்றும் கூறுகிறார். இப்படியான கட்டுக்கதையிலிருந்து விடுவித்துத் திருக்குறளை புத்த சமயக் காப்பியம் என்று நிறுவுதற்குத் திரிக்குறள் உரை விளக்கத்தினை தன்னுடைய 'தமிழன்' இதழில் 1911 முதல் 1914 ஆம் ஆண்டு வரையில் எழுதிவந்தார். முதல் 55 அதிகாரங்களுக்கு உரை எழுதி அயோத்திதாசர் இறப்பைத் தழுவிய நிலையில், அவரது உரைகளும், அவர் எழுதிய திருவள்ளுவர் வரலாறும் இலக்கியச் சான்றுகளுடன் புத்தசமய வழிநூலாகத் திருக்குறளை நிறுவி உள்ளன.

**திருக்குறளும் ஆசீவகமும்:**

சமணம், பௌத்தம் ஆகியவை அமைப்பாக உருவான காலத்தில்தான் ஆசீவகமும் அமைப்பாக உருவகம் பெற்றது. மகாவீரர், கௌதம புத்தரின் சமகாலத்தவராக ஆசீவகத்தின் மூன்றாம் திருத்தங்கரரான மற்கலி கோசாலர் இருந்தார். மாமன்னர் அசோகனின் தந்தை பிம்பிசாரர் ஆசீவக சமயத்தைச் சேர்ந்தவர். அசோகர் புத்தமதம் தழுவினாலும்

ஆசீவகமும் செல்வாக்கோடு திகழ்ந்தது. வடபுலம் மட்டுமன்றித் தென்புலத்திலும் இம்மூன்று சமயங்களும் பெரும் செல்வாக்கோடுதான் இருந்தன. ஆசீவகம் கி.பி. ஏழாம் நூற்றாண்டு வரை வடபுலத்திலும், கி.பி. 14 ஆம் நூற்றாண்டு வரை தமிழ்நாட்டிலும் இருந்தது. சமணமும், பௌத்தமும் தமிழில் பல இலக்கிய, இலக்கண நூல்களை அளித்துள்ளன. ஆசீவகத்தின் 'ஒன்பது கதிர்' என்னும் தமிழ் நூல் இன்று கிடைக்கப்பெறவில்லை. இன்னொரு நூலான சினேந்திரமாலை (வெண்பா) ஆசீவகம் செல்வாக்கிழந்த நிலையில் சமண நூலாக அறியப்படுகிறது.

ஆசீவகத்தின் கோட்பாடுகள் தமிழிலக்கியங்களில் அதிகமாகவே உள்ளன. திருமந்திரம், பரிபாடல், புறநானூறு, திருக்குறள், சிலப்பதிகாரம், மணிமேகலை, நீலகேசி, சிவஞான சித்தியார், அருங்கலச் செப்பு ஆகிய நூல்களில் ஆசீவகக் கருத்துகள் விரவிக் காணப்படுகின்றன. திருவள்ளுவர் காலத்தில் இம்மூன்று சமயங்களுமே தமிழகத்தில் செல்வாக்கோடு திகழ்ந்தன. ஆசீவகத்தின் கருத்துகளில் உயர்ந்தவையும், உடன்பாடானவையும் திருக்குறளில் பயின்று வருகின்றன. ஆசீவகம் பிறவியை ஏழு வண்ணங்களில் குறிக்கிறது. திருக்குறளில் ஏழு என்பதை மையப்படுத்தும் எட்டுக் குறட்பாக்கள் உள்ளன. எழுமையும், எழுபிறப்பும் என்ற சொல்லாட்சிகள் குறிப்பிடத்தக்கவை. ஆசீவகத்தின் ஊழ்க் கோட்பாடு திருக்குறளின் ஊழ்

அதிகாரத்தில் ஊடுருவி இருப்பதை ஆய்வாளர்கள் குறிப்பிட்டுள்ளனர். ஆசீவகத்தின் அணுக் கொள்கை அறிவியல் முன்னோட்டத்தின் முதற்படியாகக் கருதப்படுகிறது. அதேநேரம் அணுவைப் பிளக்க முடியாது என்ற ஆசீவகத்தின் கொள்கையை 2600 ஆண்டுகளுக்குப் பின்னர் பிளந்தவர் விஞ்ஞானி ஆல்பிரட் ஐன்ஸ்டீன். அறிதலையும், அறிவித்தலையும் உயிரின் தொழில்களாக ஆசீவகம் குறிப்பிடுகிறது. 'எண்பொருளவாக செலச் சொல்லித் தான் பிறவாய் நுண்பொருள் காண்பதறிவு' (குறள்-424) என்னும் திருக்குறள் ஆசீவகக் கருத்தோடு பெரிதும் ஒத்துள்ளதாக அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர். ஆசீவகம், தமிழ்நாட்டில் தோன்றி வடபுலம் வரை சென்ற அறிவியல் சமயம் என்று பேரா. க. நெடுஞ்செழியன் தனது 'ஆசீவகமும் ஐயனார் வரலாறும்' நூலில் குறிப்பிடுகிறார்.

### திருக்குறளும் வடபுலமும்:

வடபுலம் என்பதில் ஆரியம், சமஸ்கிருதம், வேதம், புராணங்கள், மனுஸ்மிருதி ஆகியவை அடங்கும். ஆரியர் என்பதை இனமாகக் கொள்ளாமல் ஆடவரில் உயர்ந்தவர் என்ற பொருளில் புத்தர் வழங்குவார். ஆனால் திருவள்ளுவர் ஆரியரைப் போற்றவில்லை. மனுதர்மத்தின் வர்ணாசிரமத்திற்கு எதிர்ப்புக் காட்டுகிறார். நாம் இன்று வழங்கும் பொருளில் அந்தணர் அன்று குறிக்கப்படவில்லை. சிரமணர்களில் உயர்ந்த அறஹத்துகளே அந்தணர்

எனப்பட்டனர். அவர்கள் சமூகத்தில் உயர்நிலையில் மதிக்கப்பெற்றனர். திருவள்ளுவர் காலத்தில் வேள்விக் கொலை புரிந்துவந்த ஆரியர், சமூக மதிப்புக் கருதித் தங்களையும் அந்தணர் என்று சொல்லிக்கொண்டனர். அதனால் தான் அந்தணர் என்போர் அறவோர் என்று வள்ளுவர் விளக்கம் கொடுக்க நேர்ந்தது. இப்படி அகச்சமயங்களான சமணம், பௌத்தம், ஆசீவகம் ஆகியவற்றை எதிர்த்தழிக்கத் தொடங்கிய புறச்சமயமான வைதிகத்தை நேரடியாகவும், மறைபொருளாகவும் தோலுரித்துக் காட்டும் குறள்கள் நூல் முழுவதும் விரவியுள்ளன.

வடபுலத்தை முற்றாக எதிர்க்கவே தென்புலத்தார் என்கிறார் வள்ளுவர். தென்புலத்தார் என்பது முன்னோர் வழிபாட்டையும், தென்மதுரை, குமரிக்கண்டங்களில் கடல்கோளால் அழிந்தவர் நினைவையும் போற்றுவதற்கான வழிபாடு என்று பாவாணர் கூறுகிறார். தங்கள் புலன்கள் தென்பட சாதிக்கும் (ஐந்தவிக்கும்) சமண முனிவர்களையும், அறஹத்து களையும் குறிக்கும் சொல்தான் தென்புலத்தார் என அயோத்திதாசர் குறிப்பிடுகிறார். ஆரியத்தையும், வடபுலத்தையும் பல்வேறு நிலைகளில் எதிர்க்கும் குறள்களை மேற்கூறிய இருவருமே பெரும் பட்டியல் இட்டுள்ளனர். வயதான பெற்றோர், மனைவி, குழந்தைகள் பசியால் வாடும் நிலையில் எப்பாவம் செய்தாயினும்

*அவர்களைக் காப்பாற்றுக என்று ஆரிய நூல்கள் அறம் உரைக்கின்றன. ஆனால் அதையெல்லாம் மறுத்து எத்துணை இடர்வந்தாலும் பாவகாரியம் எதுவும் செய்யக்கூடாது என்று திருவள்ளுவர் உரைப்பதாகத் திருக்குறளுக்கு வைதிகப் போர்வை போர்த்திய பரிமேலழகரே கூறுகிறார். (செய்யற்க சான்றோர் பழிக்கும் வினை (குறள் - 656), குன்ற வருப விடல் (குறள் - 961).*

*உயர் பிறப்பாளர்களுக்கே மேலுலகம் என்று கூறி அவர்கள் வீடுபேறடைந்தால் அவர்களை மேலோர், உயர்ந்தோர், வானோர், தெய்வம், தேவர் என்று கூறும் வழக்கமிருக்க 'தேவர் அனையர் கயவர்' என்றும், 'நன்று அறிவாரில் கயவர் திருவுடையர்' என்றும், 'மக்களே போல்வர் கயவர்' என்றும் திருவள்ளுவர் குறிப்பிடுவது கயவர்களைத் தேவர்களுக்கு ஒப்பிட்டு, மக்களிலும் தேவர்கள் தாழ்ந்தவர் என்ற கருத்தில் அமைந்ததே என்று புலவர் குழந்தை மதிப்பீடு செய்துள்ளார். திருக்குறளில் உரைகளில் பின்னர் சேர்க்கப்பட்ட 'திருவள்ளுவ மாலை' நூலிலும் சில இடைச் செருகல்கள் போக பெரும்பாலான வெண்பாக்கள் வள்ளுவரின் வருண, வேத, வடபுல எதிர்ப்பினைச் சுட்டியே செல்கின்றன.*

*வடபுலத்து அரசுகள் தொடக்கக் காலங்களில் 23 ஆவது தீர்த்தங்கரரான பார்சுவநாதரின் அறக் கொள்கைகளை ஏற்று அமைதி வழிப்பட்ட அதே காலத்தில், வைதிகத்தின்*

மனுஸ்மிருதிக் கொள்கை ஆரியர்வழி வர்ணாசிரமக் கொள்கையாக அரசுகளின் மீது திணிக்கப்பட்டது. இதில் அசோக மாமன்னனும் தத்தளித்திருந்த வேளையில்தான், நால்வருணம் சாராத அரசையும், அறவழியில் அரசு மற்றும் குடிகளை இணைக்கும் சமூக அமைப்பினைப் புத்தரின் போதனையில் இருந்து அசோகர் பெற்றார். பல்வேறுபட்ட மனிதர்கள், இனங்கள், சமயங்கள் சேர்ந்து வாழும் சமுதாயம், அடிப்படையில் அறநிலையில் அமைய வேண்டிய இன்றியமையாமையை அவர் புத்தரிடம் இருந்து பெற்றார். இதையொட்டி தமது அரசியல் கொள்கைகளை வகுத்துக் கொண்ட அசோகரின் அரசில் ராஜகுரு, மத குருக்களுக்கு இடமில்லை. உயிர்ப்பலி கொடுக்கும் வேள்விகள் அசோகரால் தடைசெய்யப்பட்டன. அனைத்து உயிர்களையும் சமமாகப் பாவிக்கும் புத்தரின் போதனை, வைதிகத்தின் வேரை ஆட்டம் காண வைத்ததுடன் அவர்களின் கூட்டத்தைப் புலம் பெயரவும் வைத்தது.

வடபுலம் பெயர்ந்தால் தென்புலத்தைத் தவிர வேறு வசதியுள்ள புலமில்லை. இதனால் தமிழர்கள் மீதும், தமிழ் அரசுகள் மீதும் மிகப்பெரிய பண்பாட்டுத் திணிப்பும், போரும் நடை பெற்றபோது அவர்களுக்கு வடபுலத்தில் புத்தர் கிடைத்ததைப் போல் ஒரு தத்துவ வழிகாட்டி கிடைக்கவில்லை. ஆனால் அப்படிப்பட்ட அறிவுசார் சமயங்களை அறிந்திருந்த வள்ளுவர் தமிழர்களுக்கு

அரணாக இருந்தார். மனுஸ்மிருதி, புராணம், வருணம் ஆகியவற்றைத் தடுக்கும் நோக்கிலேயே மதகுரு இல்லாத அரசன் – அமைச்சர் கொண்ட அரசியலைத் தத்துவக் கோட்பாடாகத் தந்தார். அரசன் அருள் உள்ளம் உடையவனாகவும், செங்கோல் செலுத்துபவனாகவும் அறம்பிறழாமல் *'ஐந்து சால்பு ஊன்றிய தூண்'* (குறள் – *983*) போல ஆட்சிபுரியவேண்டும் என்ற வள்ளுவரின் அரசியல் கோட்பாடுதான் அன்றைய தமிழ் அரசுகளுக்குப் பெரும் அரணாக விளங்கியது. மனுநீதி வெறுக்கும் உழவுத் தொழிலைத் தலைமைத் தொழிலாக உயர்த்திப் பிடித்தவர் வள்ளுவர். வருணங்கள் நுழையாத பழந்தமிழ்ச் சமுதாயம் காதலை உயர்த்திப்பிடித்தது. அதை இலக்கியங்களில் பாடி வைத்தது. வைதிகத்தின் வழியாக வருணம் தமிழ்நாட்டில் நுழைந்த காலத்தில் அறமும், பொருளும் பாடித்தந்த வள்ளுவர், இன்பத்துப் பாலையும் பாடிவைத்து சமத்துவச் சமுதாயம் நிலைத்திருக்கும் வகை செய்தார்.

பௌத்தத்திற்கும், வைதிகத்திற்கும் இரண்டு முக்கியமான வேறுபாடுகளை அண்ணல் அம்பேத்கர் குறிப்பிடுகிறார். முதலாவதாக, பௌத்தத்தில் கூறப்படும் தம்மம் என்பது ஒழுக்கமே. அது கடவுளுக்கு நிகரானது. ஒழுக்கநெறி இல்லையென்றால் பௌத்தமே இல்லை. ஆனால் வைதிகம் ஒழுக்கத்தின் அடிப்படையில் நிறுவப்பட்டதல்ல. வைதிக தர்மம் என்பது சடங்கு, யாகம், பலி, பெண் போகப்பொருள்

என்ற தன்மையைக் கொண்டது. இரண்டாவதாகச் சமத்துவம். பௌத்தம் நால்வருணத்தின் எதிரி. மனுதர்மம், நால்வருணம் ஆகியவற்றின் எதிர்ப்பை நீண்டகாலப் போராட்டமாகப் பௌத்தம் கைக்கொண்டது. ஆனால், வைதிகத்தில் ஒருவருக் கொருவர் சமம் இல்லை. ஆண்களுக்குள் சமம் இல்லை. ஆண் – பெண் சமம் இல்லை. பிறப்பினால் கடைநிலையில் உள்ளவர்களும், பெண்கள் அனைவரும் சன்னியாசம் பெறமுடியாது. கடவுளை அடைய முடியாது. மேலும் இதை மீறினால் அருவருக்கத்தக்கத் தண்டனைகள். இதுவே வேதத்தின் ஆணை. இதைத் தடுக்கத்தான் வள்ளுவர் தமிழ் மக்களுக்கு அரணாக நின்று, அவர் காலத்து நன்னெறிகளைத் திரட்டித் திருக்குறளாகத் தந்தார் என்று கொண்டால் தமிழர்கள் ஒற்றுமை பூண்டு, எதிரிகளை அடையாளம் கொள்ளவேண்டிய தேவை விளங்கும்.

**துணை நின்ற நூல்கள்:**

1. G.U. Pope, Thirukkural, 2018, சாரதா பதிப்பகம், சென்னை.

2. க. அயோத்திதாசப் பண்டிதர், திரிக்குறள்., 2015, மெத்தா பதிப்பகம், சென்னை.

3. ஞா. தேவநேயப் பாவாணர், திருக்குறள் தமிழ் மரபுரை, 2000, இந்து பப்ளிகேஷன்ஸ், சென்னை.

4. புலவர் குழந்தை, திருக்குறள், 2007, பூம்புகார் பதிப்பகம், சென்னை.

*5. பி.எஸ். சுப்ரமணிய சாஸ்திரி, திருக்குறள்–அறத்துப்பால், 1939, திருச்சி.*

*6. திருக்குறள் மூலமும் பரிமேலழகருரையும், 1967, கழகம், சென்னை.*

*7. ப.மருதநாயகம், எல்லீசின் திருக்குறள் விளக்கக் கையெழுத்துப் பிரதி, 2009, சீதைப் பதிப்பகம், சென்னை.*

*8. திருக்குறள் பன்முக வாசிப்பு, 2009, மாற்று, சென்னை.*

*9. மருதமுத்து, திருக்குறள் – தமிழ்த் தேசிய அரசியல் நூல், 2013, போர்க்கொடி பதிப்பகம், சென்னை.*

*10. தர்மானந்த கோசம்பி, பகவான் புத்தர் (மொழிபெயர்ப்பு கா.ஸ்ரீ.ஸ்ரீ.) 2018, சாகித்ய அகாதமி, புதுதில்லி.*

*11. டாக்டர் பாபாசாகேப் அம்பேத்கர், புத்தரும் அவர் தம்மமும் (தமிழில் வீ.சித்தார்த்தா), 1996, பௌத்த ஆய்வு மையம், சென்னை.*

*12. மயிலை சீனி. வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், 1940, கழகம், சென்னை.*

*13. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், 2017, நாம் தமிழர் பதிப்பகம், சென்னை.*

*14. க.நெடுஞ்செழியனின் ஆசிவகமும் ஐயனார் வரலாறும், 2014, பாலம், சென்னை.*

*15. சாகர் முனிமகராஜ், குழந்தை ஞானம் (5 தொகுப்புகள்), 2015 பகவான் 1008 ஸ்ரீ நேமி தீர்த்தங்கரர் பஞ்சகல்யாண விழா, ஏதாநெமிலி.*

*16. சோ.ந. கந்தசாமி, இந்தியத் தத்துவக் களஞ்சியம் (3 தொகுதிகள்), 2016, மெய்யப்பன் பதிப்பகம், சிதம்பரம்.*

*17. ஆர்.பி.சேதுப்பிள்ளை, திருவள்ளுவர் நூல் நயம், 1931, கழகம், சென்னை.*

*18. திருவள்ளுவர் நினைவுமலர், 1935, திருவள்ளுவர் திருநாட்கழகம், சென்னை.*

*19. தமிழ் மரபு அறக்கட்டளை இணையதளம்.*

*முனைவர் சிவ. இளங்கோ,*
*6, கவிஞர் புதுவைச் சிவம் வீதி,*
*வெங்கட்ட நகர், புதுச்சேரி – 605 011.*
*பேசி: 99940 78907.*
*Mail ID: ilangosiva57@gmail.com*

## 19. திருவள்ளுவ மாலை: ஒரு மீள்பார்வை

— கவிஞர் நா.முத்துநிலவன்

*திருவள்ளுவ மாலை எனும் நூல், திருக்குறளின் பெருமைகளையும், திருவள்ளுவரின் பெருமைகளையும் புகழ்ந்து எழுதப்பட்ட பாடல்களின் தொகுப்பு ஆகும். ஒருநூலுக்கோ, நூலாசிரியனுக்கோ இப்படி எல்லாப் புலவர்களும் வரிசை கட்டிப் புகழாரம் தொடுத்தளித்தது, திருக்குறளுக்கும் திருவள்ளுவருக்கும் மட்டுமே கிடைத்த முதற் சிறப்பு. திருவள்ளுவமாலையில் ஐம்பத்தைந்து பாடல்கள் உள்ளன. ஐம்பத்து மூன்று புலவர்கள் பாடியுள்ளார்கள். இடைக்காடர் ஔவை யார் இருவரும் குறட்பாவிலும், ஏனைய ஐம்பத்து மூவரும் வெண்பாக்களாலும், வள்ளுவரையும் திருக்குறளையும் புகழ்ந்த பாமாலைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன – எனும் இந்த வரிகளும் இக்கட்டுரைக்கான ஆதார நூலும் விக்கிப்பீடியாவில் உள்ளன. திருக்குறளை ஆழ்ந்து படித்தவர்கள், திருக்குறளைப் புகழ்ந்து(?) எழுதப்பட்ட திருவள்ளுவமாலை என்னும் நூலைப்பற்றி அறிந்திருப்பார்கள்.*

திருவள்ளுவமாலை என்னும் நூல், திருக்குறள் தோன்றி சுமார் ஆயிரம் ஆண்டு கழித்துத் தொகுக்கப்பட்டதாகத் தெரிகிறது. இதனை எழுதியவர் ஒருவரா, பலரா என்னும் சந்தேகம் எழுவதோடு, திருக்குறளின் மூலக் கருத்துகளுக்கு முற்றிலும் முரணான கருத்துகளை இந்நூல் கொண்டுள்ளது என்பதால் இது பற்றிய ஆய்வை இக்கட்டுரையின் வழி முன்வைக்கிறேன்.

*திருதராட்டிர ஆலிங்கனம்:*

மகாபாரதக் கதையில் "திருதராஷ்டிர ஆலிங்கனம்" என்றொரு தொடர் வரும். இறுதிப் போரில் தன்மகன் துரியோதனனைக் கொன்ற பீமனை, பிறகு பழி வாங்க நினைப்பான் துரியோதனன் தந்தையான திருதராட்டிரன். ஆனால், கண்பார்வையற்ற தன்னால் அவனுடன் போரிட்டுக் கொல்ல முடியாது என்பதால், பீமனை அருகில் அழைத்து, இருகரங்களாலும் பீமனை நெருக்கி அணைத்தே கொல்லத் திட்டமிடுவான். வழக்கம்போல இதனை முன் உணர்ந்த கண்ணன், தந்திரமாகத் தடுத்துவிடுவான் என்றாலும், இப்படி "நெருக்கி அணைத்தே கொன்று விடத் திட்டமிடுவது" என்னும் பொருளில் "திருதராட்டிர ஆலிங்கனம்" என்னும் தொடர், இன்றும் மக்கள் வழக்கு உரையாடலில் கூட சொல்லப்படுகிறது. திருவள்ளுவ மாலைக்கும் இந்தத் தொடர் பொருந்தும்! அதாவது குறளில் இல்லாததையும் பொல்லாததையும் இருப்பதாகச் சொல்லி புகழ்ந்தே

இழிவுபடுத்தி திருக்குறளின் புகழைக் கெடுத்து விடுவது! இது எல்லாருக்கும் புரிந்துவிடாது என்பதே இந்நூலைத் தொகுத்தவர்களின் உளவியல் அறிவு! இன்று வரை, திருவள்ளுவ மாலை எனும் நூல் திருக்குறளையும் திருவள்ளுவரையும் புகழ்ந்து எழுதப்பட்டதான பொதுப் புத்தியே இதற்குச் சான்று!

## திருவள்ளுவ மாலை என்னும் பொய் மாலை:

திருவள்ளுவ மாலையில், (நாலடி கொண்ட நேரிசை/இன்னிசை வெண்பா 53 உடன், குறட் பாக்கள் 2 சேர்த்து) மொத்தம் 55 வெண்பாக்கள் உள்ளன. இதில் – முதல் வெண்பா அசரீரி (ஆளற்ற ஒலி) எழுதியதாக உள்ளது! இரண்டாம் வெண்பா – கலைமகள் எழுதியதாக உள்ளது மூன்றாம் வெண்பா – இறையனார் எழுதியது. இதிலிருந்தே இது எந்த அளவிற்கு மிகையானது என்பது புரியும். இறையனார் என்னும் பெயரிலான புலவர் ஒருவர் சங்க இலக்கியமான குறுந்தொகையில் ஒரு பாடல் எழுதியதாக உள்ளது. (பாடல் எண் – 02) இதில் இறையனார் என்ற குறிப்பு மட்டுமே உள்ளது. இந்தப் பெயரை வைத்துக் கொண்டு, பெரிய புராணத்தில் (படலம் – 52, தருமிக்கு பொற்கிழி அளித்த படலம்) என ஒரு கதை உள்ளது. இதை வைத்து, “திருவிளையாடல்” என்றொரு திரைப்படமும் வந்தது! உண்மையில் சங்கக் குறுந்தொகை அடிக்குறிப்பில் இப்படி எதுவும் இல்லை!, நாகேஷ் – தருமியும் இல்லை, சிவாஜி

கணேச – சிவனும் இல்லை! “நெற்றிக் கண் திறப்பினும் குற்றம் குற்றமே” என்ற நக்கீர – ஏ.பி.நாகராஜனின் புகழ்பெற்ற வசனமும் இல்லை! இதற்கு, கரந்தைப் பாவலர் பாலசுந்தரம் எழுதிய ஓர் இலக்கிய நாடகமே ஆதாரம்! இந்தப் பெயரோடு திருவள்ளுவ மாலையில் ஒரு பாடல் என்ன கதை! இந்தக் கதைக்குரிய இறையன் பெயரைத் திருவள்ளுவ மாலையில் சேர்த்தது நல்ல நகைச்சுவை! (இறையனார் வேறு எந்த சங்கப் பாடலும் எழுதியிருப்பதாகவோ, சங்கம் பற்றிய பற்பல கற்பனைகளுக்கு இடம்தந்த இறையனார் அகப்பொருள் என்னும் பிற்கால இலக்கண நூல்தவிர திருவிளையாடல் நிகழ்ச்சிகள் நடந்ததாக வேறெந்த ஆதாரமும் இல்லை!)

நான்காம் வெண்பா – உக்கிரப் பெருவழுதி எனும் மன்னன் எழுதியதாக உள்ளது. ஆனால் இந்த மன்னன் எழுதியதாக சங்கஇலக்கியத்தில் இரண்டு பாடல்கள் நற்றிணை(98) அகநானூறு(26) உள்ளன. இரண்டுமே அகப்பாடல்கள்! (https://ta.wikipedia.org/s/twd) எனில் இதையும் நம்புவதற்கில்லை! எனினும் இதைத் தொகுக்க உதவியிருக்கலாம். அதோடு பாடல் ஒன்றையும் எழுதியிருக்கலாம் என்று வேண்டுமானால் ஏற்கலாம் என்றாலும் காலக் குழப்பம் நீடிக்கிறது. அப்படி வைத்துக் கொண்டாலும், அந்த சங்கப் புலவர்கள் 49பேர், மற்றும் இந்த நால்வர் ஆக 53தானே வரவேண்டும். 55பேர் திருவள்ளுவ மாலையில் எழுதியிருக்கிறார்களே என்றும் குழப்பம்

*வருகிறது. ஏனெனில் அதே நூலில் (இறையனார் அகப்பொருளில்) உள்ள "கடைச்சங்கப் புலவர்கள்" பட்டியலில் உள்ள பலர் பெயர் இந்த திருவள்ளுவ மாலையில் இல்லை! அதில் இல்லாத பலர் பெயர்கள் இதில் உள்ளன! அட என்னடா! இந்த மதுரைக்கு (நகரில் அரங்கேற்றப்பட்ட திருவள்ளுவ மாலை நூலுக்கு) வந்த சோதனை!*

*இந்த நூல், பலபெயர்களில் ஒருவர் அல்லது ஒரு குழுவினரே பலபெயர்களில் எழுதியிருக்கலாம் என்று நான் சொல்வதற்கான ஆதாரங்கள் – வள்ளுவர் பாடாததை யெல்லாம் பாடியதாகப் புகழும் பாடல்கள் பல உள்ளன. வள்ளுவர் அறம் பொருள் இன்பம் என முப்பாலே பாடியிருக்க, அவர் பாடாத நான்காம் பொருளான வீடும் குறளில் உள்ளதாகப் புகழ்வது "அறம் முதலாகிய மும்முதற் பொருள்" என, தொல்காப்பிய (செய்யுளியல் நூற்பா-102) தமிழ்நெறியில் எழுதப்பட்ட திருக்குறளில், வட மொழியில் உள்ள (தர்ம அர்த்த காம மோட்சம் எனும்) நான்காவது பொருளான வீடுபேறு இல்லை! ஆனால் திருக்குறள் வீடுபேறு எனும் நான்காம் பொருளையும் பாடி இருப்பதாகப் பெருமையோடு பாராட்டும் பத்து வெண்பாக்கள் இதில் உள்ளன (திருவள்ளுவ மாலை பாடல் எண்கள் – 7, 8, 19, 20, 22, 33, 38, 40, 44, மற்றும் 50) பத்துப் பொய்களில் குத்து மதிப்பாய் ஒரே ஒரு பொய்யைப் பார்ப்போம்;*

*அறம்பொரு ளின்பம்வீ டென்னும் அந்நான்கின்*
*திறம்தெரிந்து செப்பிய தேவை – மறந்தேயும்*
*வள்ளுவன் என்பானோர் பேதை அவன்வாய்ச்சொல்*
*கொள்ளார் அறிவுடையார்.*

(*பாடல் 8: மாமூலனார், திருவள்ளுவ மாலை*)

*இதற்கு விளக்கம் தேவையில்லை என்று கருதுகிறேன். வடமொழி வேதம் சொன்னதையே வள்ளுவர் பாடினார் என்பது வர்ண தர்மத்தை வலியுறுத்தியே வேதமும், மனு(அ)தர்ம நூலும், பகவத்கீதையும் பாடியிருக்க, இவற்றுக்கு எதிரான "மனித சமத்துவத்தை" வலியுறுத்தியே வாழ்வியல் பாடியிருக்கும் வள்ளுவரை வேதம் சொன்ன வழிகளைத் தமிழில் பாடியவர் என்பது அவருக்குப் பெருமையா என்ன? இப்படியான ஒன்பது வெண்பாக்கள் உள்ளன. (பாடல் எண்கள் – 2, 4, 15, 18, 28, 30, 32, 37 மற்றும் 42) இதற்கும் ஓர் உதாரணம் பார்ப்போம்;*

*அறமுப்பத் தெட்டுப் பொருளெழுப தின்பத்*
*திறமிருபத் தைந்தால் தெளிய – முறைமையால்*
*வேத விழுப்பொருளை வெண்குறளால் வள்ளுவனார்*
*ஓதவழுக் கற்ற துலகு.*

(*பாடல் 37: மதுரைப் பெருமருதனார், திருவள்ளுவ மாலை*)

வள்ளுவர் மனிதரே அல்ல, தெய்வத்தன்மை வாய்ந்தவர் எனப்புகழ்வது – மிகையாகப் புகழ்வது நம் காலத்திலும் சாதாரணமாக நடப்பதுதான். என்றாலும் "மனிதர் உணர்ந்து கொள்ள இது மனிதப் பாடலே அல்ல அல்ல அதையும் தாண்டி புனிதமானது" என, (கமலகாசன் போல) இதில் 9பாடல்கள் உள்ளன. இதுவும் வள்ளுவரின் இயல்புக்கு மாறானதுதான். அவர் சொல்வன்மையில் எதை எந்த அளவுக்கு எப்படிச் சொல்லவேண்டும் என்றவர். ஆனால் அவரைப் புகழ்கிறேன் பேர்வழி என்று இவர் மனிதரே அல்ல, தெய்வத்தன்மை பொருந்தியவர் என்பது அவருக்குப் பெருமையா என்ன? பாடல் எண்கள் – 1, 3, 6, 21, 28, 36, 39, 41, 49 இப்படி உள்ளன. இதற்கும் ஓர் உதாரணம் பார்ப்போம்;

பொய்ப்பால பொய்யேயாயப் போயினபொய் அல்லாத
மெய்ப்பால மெய்யாய் விளங்கினவே – முப்பாலின்
தெய்வத் திருவள் ளுவர்செப் பியகுறளால்
வையத்து வாழ்வார் மனத்து.

(பாடல் 49: தேனீக்குடிக் கீரனார், திருவள்ளுவ மாலை)

ஒருசில அருமையான பாடல்களும் உள்ளன வெறும் பொய்யைச் சொன்னால் எப்போதுமே பருப்பு வேகாதல்லவா? எனவே பொய்யைக் கொஞ்சம் உண்மை கலந்தும் தருவதுதானே உலக நடப்பு! இந்தக் கருத்துக் கேற்ப

நல்ல சில பாடல்களையும் – திருக்குறளின் உண்மையான பெருமைகளைச் சொல்வதான பாடல்களும் இதில் உள்ளன. கபிலர் பாடல் அப்படி நல்லவிதமாகவே உள்ளது பாடலைப் பாருங்களேன்;

தினையளவு போதாச் சிறுபுன்னீர் நீண்ட
பனையளவு காட்டும் படித்தால் – மனையளகு
வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார்
வெள்ளைக் குறட்பா விரி.

(பாடல் 5: கபிலர், திருவள்ளுவ மாலை)

வடமொழியில் தோன்றிய வேதம் மூலநூல், குறள் அதன் வழிநூல் என்று ஒரு பாடல் கருத்து உரைக்க அதற்கு மாறாகத் திருக்குறள் மூலநூலே, திருக்குறளோடு எந்த நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்தல் பொருத்தமாகாது என்பதை வேறு ஒரு பாடல் உணர்த்துகிறது. பண்டைத் தமிழ் இலக்கியத்தில் காணப்பெறும் ஒரே திறனாய்வு நூல் திருவள்ளுவமாலையே என்பர் அறிஞர். திருக்குறள் பற்றிய ஆராய்ச்சிக்கு வள்ளுவமாலையில் ஒரு தொடக்கம் உண்டானது எனலாம். இது திருக்குறளுக்குச் செய்யப்பட்ட சிறப்பு எனவும் கொள்வர். எவ்வாறாயினும் மூலம் கொண்டிருந்த கருத்துகள் காலப்போக்கில் வள்ளுவமாலையாலும், உரைகளாலும் மாறிப்போயின என்பது உண்மை.

தொன்மை நூலாகிய தொல்காப்பியம், சங்க நூல்கள், திருக்குறள் முதலியவற்றில் 'வீடு' பற்றிப் பேசும் நான்காம் உறுதிப்பொருள் இல்லை; அறம், பொருள், காமம் என்ற மூன்று மட்டுமே பேசப்படுகின்றன; திருக்குறள் உணரும் நெறியை மாற்றிவிட்டது என்பார் கு.ச.ஆனந்தன். நூற்றாண்டு வரிசையில் தமிழ் இலக்கிய வரலாறு எழுதியுள்ள அறிஞர் மு.அருணாசலம் அவர்களும் திருவள்ளுவமாலை திருக்குறளுக்குப் பெருமை சேர்க்காத வண்ணம் பொய்யாகத் தொகுக்கப்பட்டது என்னும் பொருளிலேயே கருத்துரைக்கிறார். எனவே, திருக்குறளை அதன் மூலம்கொண்டு மட்டுமே அறிவது நல்லது. மிகையாகப் புகழ்வதும் தவறு, பழிதூற்றுவதும் தவறு என்பதை, திருக்குறளையும் திருவள்ளுவ மாலையையும் ஒப்பிட்டு ஆய்வு செய்தால் புரியும் எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு (குறள்–423)

நன்றி:

வளரும் கவிதை: நா.முத்துநிலவன்

https://valarumkavithai.blogspot.com/2022/01/blog-post_30.html

தீக்கதிர்: திருவள்ளுவ மாலை எனும் தில்லுமுல்லு மாலை

நா.முத்துநிலவன்

# 20. முத்தமிழ் விரும்பியின் தேநீர் கவிதைகள்

– முனைவர்.செ. இராஜேஸ்வரி

*நான் நேசிப்பதும் அதுதான் முப்பொழுதும்*
*என் மோகம் தீர்ப்பதும் அதுதான்*

*தத்தரிகிட தித்தோம் என்று கவிஞர் தேநீரைப் பாராட்டினார். கவிஞர்களின் உற்சாக ஊற்றாக விளங்குவது தேநீர். மது போதைக்கு ஆட்படாத கவிஞர்கள் கூட தேநீர் போதையிலிருந்து தப்புவதில்லை. முத்தமிழ் விரும்பியும் நண்பர்களோடு தேநீர் சுவைத்து மகிழ்ந்து கதைத்து உரையாடி உறவாடிய பொழுதைக் கவிதையாக படைத்திருப்பதைக் காணலாம். தேநீர் என்பது உலகப் பாடுபொருளாக விளங்குகிறது. தேநீர் பாடுபொருளாக அமைவதன் சிறப்பை அறிவதற்கு அதன் வரலாற்றை முன் அறிவது இன்றியமையாததாகும்.*

*தமிழகத்தில் தேநீர் (வ) அல்லது காப்பி என்பது வெறும் சுடுநீர் அல்லது பருகுநீர் அல்ல. அது நண்பர்களுக்கு விருந்து அனுபவம் (tea party) ஆகும். பலருக்குப் பசி தீர்க்கும் உணவாகும். சிலருக்குத் துன்பம் தீர்க்கும் மருந்தாகும். களைப்பைப் போக்கும் காயகல்பம் ஆகும். தேநீர்*

*தொழிலாளியின் அடையாளம். காபி மேட்டுக்குடியின் ஆடம்பரச் சின்னம். ஆனால் காபி அல்லது தேநீர் பயிரிடல் என்பது உலகில் மிகப் பெரிய சூழலியல் சீரழிவைக் கொண்டுவந்தது.*

*தேநீரின் வரலாறு சுவையானது. கி. மு. 2737இல் ஒரு சீன மன்னன் காட்டில் இளைப்பாறிக் கொண்டிருந்த வேளையில் அவனுடைய குடிநீரில் காற்றில் பறந்து வந்த சில காய்ந்த இலைச் சருகுகள் விழவும் அந்த குடிநீரின் நிறமும் சுவையும் மாறியது. அந் நீரைக் குடித்த பின்பு மன்னன் உற்சாக மனநிலையை எய்தினான். மேலும் வேண்டுமெனக் கேட்டான். பணியாட்கள் அந்த இலையைத் தேடிப்பிடித்துக் கொண்டு வந்து தண்ணீரில் காய்ச்சி வடிகட்டி தேநீர் தயாரித்து மன்னனுக்கு வழங்கினர். அந்த இலையைத் தே இலை என்றனர்.*

*காபிக்கும் ஒரு கதை வழங்குகிறது. எகிப்து நாட்டில் ஒரு நாள் ஆடுகள் உறங்காமல் இருந்ததைப் பார்த்து ஆட்டிடையர்கள் மறுநாள் அந்த ஆடுகள் ஒரு செடியின் இலையைத் தின்றதால் தான் அவை தூங்காமல் விழித்திருந்ததைப் புரிந்து கொண்டனர். அன்று முதல் அவர்களும் இரவில் ஆடுகளைக் காவல் காக்கும் பணியின் போது அந்த இலையைக் கொதிக்க வைத்து அதன் சாற்றைப் பருகினர். இவ்வாறு காபி அருந்தும் பழக்கத்திற்கு அடிமை ஆயினர்.*

*கிபி பதினேழாம் நூற்றாண்டுக்குப் பிறகுதான் தேநீர் மேலை நாடுகளில் பிரபலமாயிற்று. பிரிட்டிஷ் அரசாங்கம் தன் ஆளுகையின் கீழ் இருந்த நாடுகளில் மலையில் இருக்கும் மரங்களை அழித்து அங்குத் தேயிலையும் காப்பியும் பயிரிட்டது. முதலில் அரசு தம் குடிமக்களுக்கு இலவசமாகக் கொடுத்துப் பழக்கியது. பிறகு காசு கொடுத்தால் தான் தருவோம் என்று விலைக்கு விற்கத் தொடங்கியது. பின்னர் உலகம் முழுக்க தேநீர் தவிர்க்க இயலாத ஒரு பருகு நீராகப் பரவிற்று. ஒவ்வொருவரின் அதிகாலைப் பொழுதும் தேநீர் அல்லது காபியுடன் தொடங்கியது. உலக அளவில் குடிநீருக்கு அடுத்தபடியாகத் தேநீர் தான் அதிகளவில் பருகப்படுகிறது.*

*சீனாவின் யுனான் மாகாணம் தேநீரின் பிறப்பிடமாக அறியப்படுகிறது. ஜப்பான், கொரியா, தைவான் போன்ற நாடுகளில் தேநீர் சடங்கு என்பது விருந்தினர்களை வரவேற்கும் முக்கியச் சடங்காகும். கிமு 300 க்கும் முன்னாடியே இந்நாடுகளில் தேநீர்ச் சடங்கு நடைபெற்றதாக அறிகிறோம். இந்தியாவில் மணி ராம் தேவான் என்பவர் முதன் முதலில் தேயிலையைப் பயிரிட்டார். தே என்பது 1500 மீட்டர் உயரத்தில் வளரக்கூடிய மரம் . ஆனால் இதன் இலக்காக செடி போல இடுப்பளவிற்கு மட்டும் வளர்க்கின்றனர். இதன் குருத்து இலைகள் பறிக்கப்பட்டு பதப்படுத்தப்பட்டு தேயிலைத் தூள் தயாரிக்கப்படுகிறது.*

*அசாம் மாநிலத்தில் பெரிய அளவு தேயிலைகளும் சீனாவில் சிறிய தே இலைகளும் வளருகின்றன. நடுத்தர அளவிலான தேயிலையும் உண்டு. உலக அளவில் தேயிலை சீனாவில் 36 சதவீதமும் இந்தியாவில் 23 சதவீதமும் விளைகின்றது. உலகின் தேநீர் பருகுகின்றவர்களில் கால் பகுதி இந்தியாவில் தான் இருக்கின்றனர். இந்தியாவிலுள்ள அசாம் மாநிலம் தேயிலை விளைச்சலில் முதல் இடத்தில் உள்ளது. சுமார் 3 லட்சம் ஹெக்டேர் நிலத்தில் இங்குத் தேயிலை பயிரிடப்படுகின்றது. இது தேயிலை சர்வதேச அளவில் மிகவும் புகழ்பெற்றதாகும்.*

*காபி என்பது பெரியவர்களின் பருகுநீர் என்று வெளிநாடுகளில் கருதப்படுவதால் அங்குக் குழந்தைகளுக்கு இதனைக் கொடுப்பது கிடையாது. ஆனால் இந்தியாவில் குழந்தைகளும் காப்பி அருந்தும் பழக்கத்திற்கு ஆட்பட்டு உள்ளனர். சர்வதேச அளவில் சுமார் 10 மில்லியன் ஹெக்டேர் நிலத்தில் காபி பயிரிடப்படுகிறது. கொடைக்கானலில் மட்டும் 50 ஏக்கர் நிலத்தில் காபி விளைகிறது. காபியில் இரண்டு வகை உண்டு ஒன்று அராபிகா இன்னொன்று ரோபஸ்டா. ரோபஸ்டா என்பது பெரிய அளவிலான காப்பிக் கொட்டைகளை உடையது.*

*ஆங்கிலேயர் ஆட்சியின் போது இலங்கையில் தேயிலைத் தோட்டங்கள் உருவாக்க தமிழ்நாட்டிலிருந்து ஆட்கள்*

*அழைத்துச் செல்லப்பட்டனர். சாதிப்பாகுபாடு தீரும் என்ற நம்பிக்கையில் அல்லது சாதிக்கொடுமைகள் ஒழியும் என்ற நம்பிக்கையில் தமிழ்நாட்டிலிருந்து லட்சக்கணக்கில் கூலிகள் புறப்பட்டனர். மதுரை, நெல்லை, இராமநாதபுரம், திருச்சி, தஞ்சை, புதுக்கோட்டை, வட ஆற்காடு மாவட்டங்களிலிருந்து தாழ்த்தப்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த லட்சம் பேருக்கு அதிகமானோர் நடைப்பயணமாக இராமநாதபுரம் கடற்கரைக்கு அழைத்து வரப்பட்டு அங்கிருந்து கப்பலில் ஏற்றப்பட்டனர்.*

*ஒருமுறை ஆதிலட்சுமி என்ற கப்பலில் பயணம் செய்தவர் பலர் கப்பல் கவிழ்ந்ததால் நூற்றுக் கணக்கில் கடலில் மூழ்கி உயிரிழந்தனர். படகுகளின் மூலம் அங்கிருந்து கண்டி மாநிலத்திலுள்ள காடுகளுக்குத் தமிழ் கூலிகள் கொண்டு செல்லப்பட்டனர். இவர்களைக் கொண்டு கண்டி மலைப்பகுதியில் உள்ள மரங்களை வெட்டி அங்குத் தேயிலை பயிரிடுவதற்கான நிலம் பண்படுத்தப்பட்டது. அங்குச் சென்ற பல்லாயிரம் தொழிலாளிகள் காட்டுயிர்களுக்குப் பலியாயினர். 1841 முதல் 1849 வரை சுமார் 70 ஆயிரம் பேர் இவ்வாறு உயிரிழந்தனர் எஞ்சியவர்கள் மலையகத் தமிழர் என்ற பெயரில் தேயிலைத் தோட்டங்களில் பணி செய்து அங்கேயே வாழ்ந்து வந்தனர். இலங்கைக்கு 70 சதவீத வருமானம் மலையகத் தமிழர்களின் உழைப்பால் அவர்களின் வியர்வையால் கிடைத்தது. ஆரம்பத்தில் காப்பி*

*செடி பயிரிடப்பட்டது. அதற்கு நோய் வந்தபோது காபியை விடுத்துத் தேயிலையை அதிகமாகப் பயிரிட்டனர். இவர்களுக்குப் பத்துக்கு எட்டு அடி அளவில் தகரக் கொட்டகை வீடுகள் என்ற பெயரில் வழங்கப்பட்டன. அவற்றில் அவர்கள் குடியிருக்க நேரிட்டது.*

*ஸ்ரீலங்கா விடுதலைக்குப் பிற்பாடு, 1974இல் இக் கூலிகள் கட்டாயமாக இந்தியாவுக்குக் கப்பலில் திருப்பி அனுப்பப்பட்டனர். அவர்கள் இராமேஸ்வரம் கடற்கரைக்கு அனாதைகளாக வந்து சேர்ந்தனர். இங்குள்ள சொந்த ஊர்களின் தொடர்பும் விட்டுப் போனதால் அவர்கள் இங்கு இலங்கை அகதிகளாக இருக்கும் நிலை ஏற்பட்டது. ஏழைகளாகச் சென்று ஏழைகளாகவே தாயகம் திரும்பினர்.*

*தேயிலை உற்பத்தியில் சீனா முதலிடத்திலும் இந்தியா இரண்டாம் இடத்திலும் உள்ளது. ஆனால் தேநீர் அருந்துவதில் துருக்கி மக்கள் முதல் இடத்தில் இருக்கின்றனர். இவர்கள் ஒரு நாளைக்கு 3 லிட்டர் அளவுக்குத் தேநீர் பருகுகின்றனர். இவ்வாறான முக்கியத்துவம் பெற்ற தேநீர் கவிஞர்களுக்கும் மிகவும் விருப்பமான உற்சாகப் பானமாக, சோர்வு நீக்கி சுறுசுறுப்பு ஊட்டும் பருகுநீராக விளங்குகிறது.*

மழலை கவி என்பவர்,
"மழையில் குடையாக நான்
இதழில் இதமான தேநீராக நீ"
என்று தேநீரின் சுவையைத் தனது கவிதையில் வடித்தார்.

நளினி விநாயகமூர்த்தி என்ற சென்னைக் கவிஞர்,
"என்னவளே
நீ பருகித் தந்த தேநீரை
நான் பருகப் பருக
என் இளமை இன்னும் நீள்கிறது"
என்கிறார்.

சுமையா என்பவர்,
"இனிப்பும்
சற்று தூக்கலாகவே தெரிகிறது
உன் இதழ் தொட்டபின்
பருகும் தேநீரில் "
என்றும்,

"நுரைத்த குளம்பியில்
நிரம்பித் தவிக்கிறது
சுடச்சுட காதல் குமிழிகள்"
என்றும் தேநீரையும் காப்பியையும் காதலோடு இணைத்துக் கவிதை பாடினார்.

**கவிஞர் முத்தமிழ் விரும்பியின் தேநீர் கவிதைகள்:**

கவிஞர் முத்தமிழ் விரும்பியின் தேநீர் கவிதைகள் பல சூழல்களில் உருவெடுத்துள்ளன. கவிஞர் முத்தமிழ் விரும்பி தேநீர் பருகுவதை நண்பர்களோடு நடத்தும் கலந்துரையாடலின் ஓர் அங்கமாகக் கொள்கிறார் அடுத்தடுத்து அவர்கள் தேநீர் பருகுகின்றனர். இன்னொரு சூழலில் இயற்கை அழகில் மயங்கித் திளைக்கும் போது அந்த இரசனைக்கு இன்னும் சுவை ஊட்டுவதாக தேநீர் பருகும் பழக்கம் அமைகின்றது.

**1. நட்பு:**

இன்பத்திலும் துன்பத்திலும் தேநீர் கவிஞர் முத்தமிழ் விரும்பியின் வாழ்க்கையின் ஓர் அங்கமாகி இருப்பதைக் காணலாம். தான் காப்பி குடிப்பது மட்டுமின்றி அடுத்தவன் காபிக்கு என்ன செய்வான் அவன் எங்கே போய் காபி குடிப்பான் என்று அடுத்தவனுக்காகக் கவலைப்படும் நிலையையும் இவர் கவிதைகளில் காணலாம். உறவுகளையும் நட்புகளையும் கொண்டாட முடியாத ஏக்கத்தையும் காப்பி அருந்தும் போது அவர் உணர்கின்ற நிலையைப் பார்க்கலாம். தனக்குத் தேநீர் குடிக்க வேண்டும் என்ற ஓர் உந்துதல் இல்லாவிட்டாலும்கூட நண்பர்களுக்காக அவர்களின் வேண்டுகோளுக்காக காப்பி அருந்துகின்ற பழக்கம் இருந்து வருவதை அவரது கவிதைகளில் காணலாம். இது நட்புக்கு வழங்கும் கௌரவம் ஆகும்.

"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின்
நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்"
என்ற இலக்கிய வரிகளை நினைவூட்டும் வகையில் விரும்பாத நேரத்திலும் நண்பர்களின் விருப்பத்திற்காக தேநீரும் காபியும் குடிக்கும் மரபு இருப்பதை அறியலாம்.

பூமர நிழல் என்ற கவிதைத் தொகுதியில்,
"தேநீர் கூட
நண்பர்களின் வற்புறுத்தலுக்காக
விரும்புவதில்லை எனினும்
தருணங்களைக் கருதி அருந்துவது தப்பாது"
என்கிறார்.

பல்வேறு சாதி மற்றும் தொழில் செய்யும் குடும்பங்களில் பிறந்தவர்கள் அனைவரையும் ஒன்று சேர்த்து தேநீர் பருகும் சூழ்நிலையை ஏற்படுத்தும் போது நண்பர்கள் சாதி, தொழில் வேறுபாடுகளை மறந்து நட்பு என்ற ஓர் அன்புத் தளத்தில் இணைகின்றனர். அவர்களை அங்கு இணைக்க தேநீர் ஒரு கருவியாகச் செயல்படுகிறது. எனவே

"இந்தத் தேநீர்
சில கோடுகளையாவது
அழிக்கிறது"

என்று நுட்பமாக எடுத்துரைக்கிறார்.

"எனக்கும் இன்னொரு
வெல்லம் போட்ட தேநீர் சொல்லு"
என்று கவிஞர் கவிதையை முடிக்கும்போது 'கோடுகளை அழித்த' மன நிறைவு தொனிக்கிறது.

தேநீர் குடிப்பதற்காக அனைவரையும் அழைக்கின்ற பாங்கும் அவர்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு தெருவைச் சேர்ந்தவர்கள் என்று சுட்டும் போது அவர்களுடைய அவர்களுடைய சாதி மற்றும் தொழில் வேறுபாடுகள் அதில் நுட்பமாகக் குறிக்கப்படுவதும் உணர்ந்து இன்புறத்தக்கது. இதுபோன்ற பாகுபாடுகளைத் தவிர்க்க தேநீர் விருந்து உதவும் என்ற நம்பிக்கையோடு கவிஞர் கவிதையைப் படைத்திருக்கிறார்.

**2. காதலின் அழகு:**
காதலின் அழகை மேம்படுத்தவும் காதல் உணர்வுகளின் ஆழத்தையும் அழுத்தத்தையும் புலப்படுத்தவும் காப்பி காதலர்களின் ஓர் அங்கமாக விளங்குகின்றது. நுண்கலை மருத்துவன் என்ற கவிதைத் தொகுதியில்,
"நீண்ட
காலத்திற்குப் பிறகு
ஒரு பனிக் காலத்தில்

*நாம் சந்தித்தபோது*
*அவசரம் கருதி உடனே*
*பிரிந்தோம்*
*அன்று மாலையில்*
*நாம்*
*அருந்த வேண்டிய சர்க்கரை இல்லாத*
*காபி இன்னும் மீதமிருக்கிறது*
*எப்போது வரும்*
*அந்த மாலை*
*அதே மாலை*
*பச்சையிலைத் தேநீருடன்"*

*என்ற கவிதை காதலி அருகில் இருக்க அவளோடு மனநிறைவாக உரையாட முடியாத சூழ்நிலையில் பிரிய வேண்டிய வேளையில் குடித்து முடிக்கப்படாத காப்பி ஒரு குறியீடாகக் காட்டப்படுகின்றது. மீண்டும் அந்த மாலைப் பொழுதை எதிர்பார்க்கும் மனம் சர்க்கரை இல்லாத காப்பி பச்சையிலைத் தேநீராக மாறி இருப்பதையும் உணரலாம்*

*காதலியோடு குடித்து முடிக்காத காப்பிக்காகக் கவலைப்பட்டு எழுதிய கவிதையைப் போலவே இன்னொரு கவிதை காதலனைப் பற்றி அமைந்துள்ளது. தேநீர் பருகும்போது கனவில் நுழையும் காதலனைக் குறிப்பிடும் தொடரும் என்ற கவிதை,*

*"அரைகுவளை*

பச்சையிலைத் தேநீர்
அருந்திய சில நிமிடங்களில் கனவில் நுழைகிறான்
கையில்
பீங்கான் கோப்பையுடன்"

ஒரு காதலி தேநீர் அருந்தத் தொடங்கிய சில நிமிடங்களிலேயே அவளுடைய காதலனும் கையில் தேநீர்க் கோப்பையுடன் அவள் கனவில் நுழைகிறான். ஒருவர் தேநீர் அருந்தும் போது கனவில் இன்னொருவரும் இணைந்து கொள்வது காதலின் சிறப்பியல்பாகும். தேநீர் காதலையும் ஊற்றெடுக்கச் செய்யும் சுவை நீராக விளங்குவதை இக்கவிதையில் காணலாம்.

**3. வேடிக்கை:**

தூறல் மழை பெய்யும் நேரங்களில் தேநீர்க் கடையில் நின்று காப்பியோ தேநீரோ குடித்துக்கொண்டு வேடிக்கை பார்க்கும் வேளைகளில் மழையின் அழகை ரசிப்பதும் அங்கு வரும் மனிதர்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பதும் இனிய அனுபவம் ஆகும். கவிஞர் முத்தமிழ் விரும்பி இவ் அனுபவத்தைக் கவிதைகளாகப் புனைந்துள்ளார். அவற்றில் ஒன்று எதிர்ப்பு என்ற கவிதையாகும்.

"காத்திருப்பின் சுவரெங்கும்
பிளாஸ்டிக் இலைகள் படர்ந்திருக்க
இலை திணற வெள்ளாடாய்

காலம்
சிறு தூறல் விழும் இக்கணத்தில்
வரசித்தி விநாயகர் கோவில்
அரசமரத்தடிக் கடையில்
இனிப்பில்லாத தேநீர்ச் சாறு குடிக்கும்
என் முகத்தில் அவசரமாய் வந்து புகைக்கிறார்"

யாரோ ஒருவர் தான் மழையின் அழகை ரசிக்கும் வேளையில் வேகவேகமாக வந்து இவர் இருப்பதை உணராதவர் போல முகத்தில் புகையை ஊதி விட்டுச் செல்கிறார். இவர் முகத்தில் பட்ட புகை மழைத் தூறலின் அழகையும் ரசிக்க விடாமல் பருகும் தேநீர் சாற்றையும் ருசிக்க விடாமல் இரண்டுக்கும் இடையூறாக அமைந்து விட்டது.

உள்ளங்கை என்ற கவிதை கவிஞர் பயன் தரு மழையையும் குளிர் தரு காற்றையும் தேநீர் குடித்தபடி ஒரு சேர அனுபவித்துப் பாடியதாகும். ஏரியின் அழகைக் கண்டு ரசிக்கும் வேலையில் தென்மேற்கு பருவக்காற்று சில்லென்று வீசும் பொழுதில் ஒரு தேநீர்க் கடையில் தேநீர் குடித்த படி அந்த அழகை உள்வாங்கித் திளைக்கும் அனுபவத்தைக் கவிதையாகப் படைத்துள்ளார்.

"துறையூர் அண்ணா பேருந்து நிலையத்தில்
தேநீர்

*குடித்தபடி*
*எதிரே நீர் தளும்பும்*
*ஏரியைப் பார்க்கிறேன்.*

*செங்கொன்றைப் பூக்கள்*
*ஆனி மாதம்*
*நீர்ப்பரப்பில்*
*அலையாடுகின்றன.*

*தென்மேற்குப் பருவக்காற்று கொல்லிமலை*
*புளியஞ்சோலை பச்சைமலை தொட்டுத்*
*தவழுகிறது.*

*உள்ளங்கையில் மழை பெய்ததால் ஏரி நிறைந்து காணப்படுகிறது. ஏரிக்கரை ஓரத்தில் இருக்கும் செங்கொன்றை மரங்களின் பூக்கள் நீர்ப்பரப்பின் அலைகள் மீது விழுந்து அலையலையாக அசைகின்றன. அத்தருணத்தில் தென்மேற்குப் பருவக்காற்று கொல்லி மலை, பச்சை மலை வழியாகத் தவழ்ந்து வந்து தேநீர் அருந்தும் கவிஞரின் உள்ளங்கையைத் தொட்டு சிலிர்ப்பூட்டுகிறது.*

***4. ஒரு பொருள் ஒரு இடம் இரு கவிதை:***

*ஒரு நீண்ட இரவு ரயிலில் பயணம் முடித்து அதிகாலையில் தமிழகத்தின் தலைநகரில் காலடி எடுத்து வைத்து அங்குள்ள*

ஒரு தேநீர்க் கடையில் தேநீர் அருந்தியபடி சென்னை மாநகரின் அதிகாலைப் பொழுதை அதன் குறைந்த பரபரப்பை ரசித்து எழுதப்பட்ட கவிதை விடிந்தது கண்டேன். இதே இடத்தில் மீண்டும் ஏழு மாதங்களுக்குப் பிறகு தேநீர் பருகும் போது அங்குக் காணப்படும் மாற்றங்களைத் திரும்ப எழுதிய கவிதை விவரிக்கின்றது.

இவ்வாறு ஒரே இடம் ஒரே சூழ்நிலை தேநீர் பருகும் அனுபவம் ஆனால் அங்கே இருக்கும் மனிதர்கள் மற்றும் செயல்பாடுகளில் காணப்படும் மாற்றங்கள் ஆகியவை விடிந்தது கண்டேன் என்றும் பின்பு திரும்ப எழுதிய கவிதை என்றும் இரண்டு கவிதைகளாக வடிக்கப்பட்டுள்ளன.

விடிந்தது கண்டேன் கவிதையில் கவிஞர் தேநீர் பருகும்போது அந்தக் கென்னத் சந்தின் பெயர்க் காரணத்தை அறிய விரும்புகிறார். ஆனால் அந்த பெயரைத் தவறாகப் புரிந்து கொண்ட ஒரு பெரியவர் தன் பெயர் தான் அது என்று சொல்லி தனது ஊரின் பெயரையும் சேர்த்துச் சொல்கிறார். தேநீர் குடித்த பிறகு சிறிது தூரம் நடந்து வேனல்ஸ் சாலை சென்ற கவிஞர் மீண்டும் ஒரு கடையில் தேநீர் பருகுவதோடு கவிதை நிறைவு பெறுகிறது. அடுத்தடுத்து தேநீர் பருகும் இவரது பழக்கத்தை இன்னும் ஒரு சில கவிதைகளிலும் பதிவு செய்துள்ளார்.

*விடிந்தது கண்டேன்*
*எழும்பூரில்*
*தொடர்வண்டி நிலையத்திலிருந்து*
*வெளியே வந்து*
*இம்பாலா விடுதியில்*
*பச்சை தேநீர் அருந்த*
*மார்கழியின் முற்பகுதிப்*
*பனிமூட்டம் கலைகின்றது*

*தொடர்வண்டி நிலையத்தை விட்டு வெளியே வந்து பச்சை இலை தேநீர் அருந்தும் வேளையில் அது வரை இருள் படர்ந்திருந்த அதிகாலைப் பொழுது மெல்லமெல்ல தன் இருட்டை விலக்கி அருணோதயத்தைக் காண்கிறது. பனிமூட்டமும் விலகத் தொடங்குகிறது. அப்போது அவர் தேநீர் அருந்தியபடி கென்னத் விடுதியில் கென்னத் யார் என்று விசாரிக்கிறார். அங்கு படுத்திருந்த பெரியவர் என் பெயர் கென்னடி என்றார். என் ஊர் மம்சாபுரம் என்றார். கவிஞர் அங்கிருந்து அகன்று வேனல்ஸ் சாலையில் திரும்பித் திரும்பவும் தேநீர் வருந்துகிறார். இப்போது நன்றாக விடிந்து விட்டது. புதிய மனிதர்கள் நடமாடத் தொடங்கிவிட்டனர்*

*திரும்ப எழுதிய கவிதையில் ரயிலை விட்டு இறங்கியதும் எழும்பூரில் புதிதாக அழகுமுத்துக்கோன் என்ற விடுதலை வீரனுக்கு ஒருசிலை எழுப்பப்பட்டு இருப்பதைக் கவிஞர்*

காண்கின்றார். பிறகு சென்னையில் உள்ள குதிரைகளுக்குத் தீவனமாக இலை தழைகள் வெளியூர்களிலிருந்து பேருந்தில் கொண்டு வரப்பட்டு அங்கு இறக்கி வைக்கப்பட்டிருப்பதைப் பார்க்கிறார். உள்ளூர்க்காரர்கள் வந்து உடனடியாக வாங்கிச் செல்கின்றனர். நோய்த்தொற்று காலத்தில் பேருந்துகள் ஓட்டம் இல்லாத போது பாவம் இந்த குதிரைகள் எதைத் தின்று இருக்கும் என்று குதிரைகளுக்காகக் கவலைப்படுகிறார். கிராமங்களின் தோட்டத்து மூலிகைகள் காய்ந்துபோய் இருக்குமே அந்த விவசாயிகளுக்கு அது பேரிழப்பை ஏற்படுத்தி இருக்குமே என்று விவசாயிகளுக்காக வருந்துகின்றார். அதன்பிறகு இங்கு வேலை செய்யும் முனியப்பன் எங்கே போய் தேநீர் குடித்திருப்பான். தேநீர்க் கடைகள் எல்லாம் அடைக்கப்பட்டிருந்த வேளையில் அவன் தேநீருக்கு என்ன செய்திருப்பான் என்று அவனை நினைத்தும் கவலைப் படுகிறார். தேநீர் குடித்த படி பல ஊர்க்காரர்கள் அங்கு கதைகள் பேசுவதைக் கவனிக்கிறார். நிறைவாக இந்த ஆண்டு நல்ல மழை பெய்யட்டும் நான் மீண்டும் இந்த ஊருக்கு வரும்போது எல்லோரும் மகிழ்ச்சியாக ஊர்க் கதைகளைப் பேசிக்கொண்டு இருக்க வேண்டும் அப்போது நானும் வருவேன் காலை தேநீருடன் உங்கள் கதைகளைக் கேட்க என்று தன் மனதுக்குள் சொல்லிக் கொள்கிறார்.

இவ்வாறாக இந்த திரும்ப எழுதிய கவிதை பல நிகழ்வுகளை எதிர்பார்த்துப் பல எண்ணங்களை விவரிப்பதாக அமைகின்றது. எழும்பூரில் எழுந்துள்ள
தமிழக விடுதலை வீரன் ஒருவனது இடது கையில் கேடயம் இருக்கிறது.

வேனல்ஸ் சாலையில் நடைமேடையில்
புத்தம்புதுக் கட்டுகளாக பசுமை மாறா
தழைகளும் இலைகளும்
நடைப்பயிற்சி செய்வார் ஒதுங்கிப் போவர்
இது என்னவாக இருக்கும்?

இராமநாதபுரம்
சிவகங்கை
திருவாடானைப் பகுதியிலிருந்து
தினமும்
ஆம்னி பஸ்களில் இருந்து இறக்கப் படுகின்றன
இருபது நிமிடங்களில்
இடம் காலி

ஏதெனக்கேட்டான் கவிஞன்
குதிரைகளுக்குத் தீவனம் மூலிகைச் செடிகள்
என்றார் முனியப்பன்
கோவிட்-19 காலத்து

*ஏழு மாதங்களில்*
*பெருநகரத்துக் குதிரைகள்*
*எதைத் தின்றன*

*தோட்டத்து மூலிகை காய்ந்திருக்கலாம்*
*தென் மாவட்ட வேளாண்மை*
*என்னவாய் இருந்திருக்கும்*
*முனியப்பன் எங்கே வேலை செய்து*
*தேநீர் குடித்திருப்பார்?*

*பெருநகரத்துச் சாலைகள் நடமாட்டம்*
*குதிரையோட்டம்*
*யாதென நினைத்தல்*
*இனி வேண்டாம்*
*பசுமை படரட்டும்*

*ஸ்ரீராம் விடுதியருகே*
*மக்கள் குழுவாய்த்*
*தேநீர் அருந்தும் பொழுதில்*
*சொந்த ஊர் கதையாடட்டும்*

*கிபி 2021 நலமாய்க்*
*கிடைக்க*
*இந்த ஐப்பசி மாதம்*

வடகிழக்குப் பருவமழை சேதாரமின்றிச்
சரியாய்ப் பொழியட்டும்
நண்பா

நானும் வருவேன்
காலைத் தேநீருடன்
கதைகள் கேட்க

திரும்ப எழுதிய கவிதை முதலில் எழுதப்பட்ட கவிதையில் இரண்டாவது தேநீர் பருகிய வேனல்ஸ் சாலையிலிருந்து தொடங்குகிறது. அந்தச் சாலையில் குவிக்கப்பட்ட குதிரை தீவனத்தை பற்றிய சிந்தனையோடு தொடர்ந்து தொடங்கி நாடு செழிக்க வேண்டும், நல்ல மழை பெய்ய வேண்டும், நண்பா என்ற நல்லெண்ண வெளிப்பாட்டுடன் கவிதை நிறைவு பெறுகிறது.

தேநீர் என்பது உற்சாகத்துக்குப் பருகப்படும் வெறும் பருகுநீர் மட்டும் அல்ல. ஒரு சமூக அலசலை உள்ளுக்குள்ளே தூண்டுகின்ற ஊக்க நீராகவும் அமைகின்றது. இவ்வாறான தேநீர் அல்லது காபி பற்றிய கவிதைகளில் பச்சை இலை தேநீர், சர்க்கரை இல்லாத தேநீர் காபி போன்றவை அடிக்கடி வருகிறது. காபி அல்லது தேநீரில் பால் அல்லது சர்க்கரை சேர்க்கப்பட்டதாக குறிப்பு காணப்படவில்லை. ஒரு கவிதையில் மட்டும் வெல்லம்

*குறிப்பிடப்பட்டுள்ளது. பச்சை இலைத் தேநீரும் சர்க்கரை இல்லாத தேநீரும் மேட்டுக்குடியினரின் பருகு நீராக விளங்குவது இவண் குறிப்பிடத்தக்கது.*

*பாலுக்கு வழியற்று கடுங்காப்பி குடிக்கும் ஏழைகளின் காபி அனுபவம் எதுவும் எந்தக் கவிதையிலும் காணப்படவில்லை. ஆரோக்கிய சிந்தனையுடன் பாலில்லாத சர்க்கரை சேர்க்காத மேட்டுக்குடி காப்பியும் தேநீரும் தான் கவிதைகளில் இடம் பெற்றுள்ளது. இனிப்புக் காப்பியை விட கசப்புக் காப்பி, கசப்பு தேநீர் அதிகம் இடம்பெறுவதைக் காண முடிகிறது. கவிஞரின் பிற கவிதைகளிலும் ஆதொண்டங்காயின் கசப்பு சுவை, சோற்றுக் கற்றாழையின் கசப்புக் கூழ்மம் என கசப்பின் சுவை ரசிக்கப் படுவதைக் காணலாம்.*

*ஆங்கிலேயர்கள் அல்லது வெளிநாட்டவர் காபி மோச்சா, கப்புச்சினோ, எக்ஸ்பிரசோ என்று பலவகையான சுவையில் காபி குடிக்கின்றனர். தமிழ்நாட்டில் காப்பி பார்ப்பனர்களுக்கு என்று தனிச் சுவையில் தயாரிக்கப்படுவதாக தொன்றுதொட்டு ஒரு கருத்து நிலவுகின்றது அதற்கு கும்பகோணம் டிகிரி காபி என்ற பெயரும் சூட்டி உள்ளனர். அது கசப்புச் சுவை மிகுந்தது. இங்கு காபி வசதியானவர்களின் பருகுநீராகவும் தேநீர் என்பது உழைப்பாளர்களின் பசியைப் போக்கும் உணவாகவும் கருதப்படுகின்ற நிலை உள்ளது. இந்த*

இரண்டுக்குமான வேறுபாடு எதுவும் முத்தமிழ் விரும்பியின் கவிதைகளில் காணப்படவில்லை. சில கவிதைகளில் காபி என்று என்று குறிப்பிட்டாலும் அதுவும் சர்க்கரை இல்லாத மேட்டுக்குடிக் காப்பியைத் தான் குறிக்கிறது. அல்லது மேட்டுக்குடியினரின் பச்சை இலைத் தேநீர் இடம் பெற்றுள்ளது. கவிஞர் மாநிலத்தின் ஓர் அரசு உயர் அதிகாரி ஆவார். அவர் கவிதைகளில் எங்கும் ஏழைகளின் தேநீர் பற்றிய தகவல்கள் எதுவும் இடம்பெறவில்லை. பணக்காரர்களின் பச்சைத் தேநீர் இடம்பெற்றுள்ளது.

காதலர்கள் பருகும் காபி அல்லது தேநீர் அனுபவத்தை விட நட்பு மற்றும் சமூக அக்கறை சார்ந்த காப்பி பருகும் அனுபவம் கூடுதலாகக் கவிதையில் இடம் பெற்றுள்ளது. காவிரி ஆற்றங்கரையின் நெல் விவசாயி என்பதால் பருவ மழை, வேளாண்மை, ஊர்க் கதைகள் போன்ற கிராமத்துத் தகவல்கள் கவிதைகளின் உள்ளடக்கக் கூறுகளாக விளங்குகின்றன.

கவிதையின் சரளமான நடையும் போக்கும் வாசிப்பு அனுபவத்தை சுவைமிக்கதாக ஆக்குகிறது. எதிர்மறைச் சொற்கள், வன்மம், வெறுப்பு, வசை போன்றவை இல்லை. அன்பும் நட்பும் சமூக அக்கறையும் காதலும் ஏழைகளின் பால் இரக்கமும் மழை, காற்று போன்ற இயற்கை நேசமும் நிறைந்திருப்பதால் கவிதைகள் சிறப்பு நிலை பெறுகின்றன.

# 21. அம்பேத்கரின் மனிதர் - நூல் மதிப்புரை

— முனைவர் க.சுபாஷிணி




*எளிய முறையில் புரிந்து கொள்ளும் வகையில் சட்டமேதை டாக்டர் பி.ஆர்.அம்பேத்கர் அவர்களைப் பற்றி வெளிவந்திருக்கும் ஒரு நூல் இது. கேள்விகளுக்குப் பதில் விளக்கம் என்ற வகையில் இந்த நூல் அமைந்திருக்கின்றது. அண்ணல் அம்பேத்கர் அவர்கள் இந்திய சமூக நிலை மாற்றத்திற்கு மேற்கொண்ட நடவடிக்கைகள், செயல்படுத்திய சட்ட மாற்றங்கள் ஆகியவற்றைச் சுருக்கமாக, அதேவேளை*

தெளிவாக இந்த நூல் வாசகர்களுக்குக் கொண்டு சேர்க்கின்றது.

நூலின் தலைப்பு வாசிக்கும் நம்மை யோசிக்க வைக்கின்றது. அம்பேத்கர் விவரிக்கும் மனிதர், அம்பேத்கரின் பார்வையில் மனிதர், இந்தியாவில் ஒரு மனிதர் எவ்வகையில் உணரப்படுகின்றார் போன்ற செய்திகளைத் தத்துவார்த்த அடிப்படையில், அதேவேளை சமூகவியல் பார்வையில், சமூக நீதி சிந்தனையை இணைத்து நூலாசிரியர் விளக்குகின்றார். நூலாசிரியர் கௌதம சன்னா நீண்டகாலமாக அண்ணல் அம்பேத்கர் பற்றிய ஆய்வுகளில் ஈடுபட்டவர் என்பது இந்த நூலில் அவர் வழங்கும் விளக்கங்களின் வழியாக வாசகர்களுக்கு வெளிப்படுகிறது.

அண்ணல் அம்பேத்கர் ஒடுக்கப்பட்ட மக்களுக்காக மட்டுமே செயல்பட்டார் என்றும், ஒடுக்கப்பட்ட மக்களுக்கான தலைவர் என்றும் காணப்படும் குறுகிய பார்வை எவ்வளவுக்கு எவ்வளவு தவறானது என்பதை நூலை வாசிக்கும் வாசகர்களுக்குத் தெளிவு படுத்துகிறது. நவீன இந்தியாவில் ஏற்படுத்தப்பட்ட பல்வேறு மாற்றங்கள், இன்று இந்தியாவில் தொழிலாளர்கள் அனுபவித்துக் கொண்டிருக்கும் பல்வேறு சலுகைகள், இந்தியப் பொருளாதாரக் கட்டுமானம்.. அரசியல் அமைப்பு... என நூல் தரும் விளக்கங்கள் நம்மை வியக்க வைக்கின்றன.

அண்ணல் அம்பேத்கரின் சமூகநீதி செயல்பாடுகளை மட்டுமன்றி நவீன இந்தியாவின் கட்டமைப்பில் அவர் ஆற்றிய பணிகளை ஒவ்வொரு இந்தியரும் புரிந்து கொள்ள உதவும் ஒரு கையேடாக இந்த நூல் அமைகின்றது என தாராளமாகக் கூறலாம். அண்ணல் அம்பேத்கர் அவர்களது பிறந்த நாளில் வெறுமனே இரண்டு வார்த்தைகளில் அவருக்குப் பிறந்தநாள் வாழ்த்துக்களைக் கூறுவதோடு மட்டுமல்லாது, அம்பேத்கரின் சிந்தனையை, அம்பேத்கரின் செயல்பாட்டை விவரிக்கும் இந்த நூலை வாங்கி வாசித்து அவரது செயல்பாடுகளைப் புரிந்து கொள்வது நிச்சயம் பயனளிக்கும்.

சமத்துவ நாள் மற்றும் பாபாசாகேப் அம்பேத்கர் அவர்களின் பிறந்தநாள் வாழ்த்துக்கள்.

நூல் விவரம்:
அம்பேத்கரின் மனிதர் : எளிய தத்துவார்த்த உரையாடலுடன்
நூலாசிரியர்: கௌதம சன்னா
நூல் விலை: 100₹
பதிப்பகம்: எழிலினி
பதிப்பாண்டு - 2022
நூலைப் பெற: Google pay - 9840696574

# 22. விளையாடிய தமிழ்ச்சமூகம் - நூல் மதிப்புரை

— முனைவர் வா.நேரு




விளையாட்டு என்றாலே நம் கண் முன்னால் விரிவது நம் இளமைக் காலம்தான். கிராமங்களில் காடு, மேடுகளில் ஓடியதும், ஆடியதும், தொட்டுப் பிடித்து விளையாடியதும், தொடர்ந்து ஓடி, ஓடித் தொட்டுப் பிடித்ததும் என நம் மனக்கண் முன்னால் விரியும் காட்சிகள் பல பல. 40, 50 ஆண்டுகளுக்கு முன்னால் சிறுவர்,சிறுமிகளால் விளையாட்டுக்களமாய் இருந்த தெருக்கள் இன்று நகரம் என்றாலும், கிராமம் என்றாலும் அமைதியாக இருக்கும்

நிலையில், ஒரு கல்லூரிப் பேராசிரியர் ஆய்வுக்காக அந்த விளையாட்டுகளை ஆய்வுக் களமாக எடுத்துக்கொண்டு, கள ஆய்வாக கிராமங்களுக்குச்சென்று, அங்கு விளையாடும் பிள்ளைகளைக் கண்டு, அதனைப் போல பிள்ளைகளை விளையாடச்சொல்லி அவற்றை எல்லாம் ஆவணப்படுத்தி ஒரு புத்தகமாகக் கொடுத்திருக்கின்றார், அந்தப் புத்தகத்தின் தலைப்பு 'விளையாடிய தமிழ்ச்சமூகம்'. அட்டையிலேயே தலைப்பிற்குக் கீழ் 'விளையாட்டில் கட்டமைக்கப்பட்ட தமிழ்ச்சமூக உறவுகள் குறித்த ஓர் அலசல் ' என்று கொடுத்திருக்கிறார்கள்.

நூல் ஆசிரியர் பற்றி பின் அட்டையில் குறிப்பிட்டுள்ளார்கள். முனைவர் ஆ.பாப்பா அவர்கள் மதுரை டோக் பெருமாட்டி கல்லூரி, தமிழ் உயராய்வு நடுவத்தில் உதவிப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார். 'நாட்டுப்புற விளையாட்டுக்கள்: சமூகவியல் உளவியல் பகுப்பாய்வு' என்னும் தலைப்பில் முனைவர் பட்டம் பெற்றவர். விளையாட்டுக்கள் பற்றியும் தமிழ் இலக்கியங்கள் பற்றியும் முப்பத்தைந்து ஆய்வுக் கட்டுரைகள் எழுதிப் பல நூல்களில் வெளியிட்டுள்ளார் போன்ற பல தகவல்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

"தமிழ் மக்களின் வாழ்வியல் கூறுகளில் விளையாட்டு மரபுகள் பண்பாட்டு விழுமியங்களாக அமைகின்றன.

இதனை வலியுறுத்தும் வகையில் தமிழ் நாட்டின் நிலப்பரப்பில் தற்சமயம் மேற்கொள்ளப்படுகின்ற அகழாய்வுகளில் விளையாட்டுப்பொருள்கள் கண்டுபிடிக்கப்படுகின்ற செய்திகள் வெளிப்படுத்தியுள்ளன. இதற்குச்சான்றாக அண்மைய காலக் கொடுமணல், கீழடி, சிவகளை போன்ற பகுதிகளில் நிகழ்த்தப்பட்ட ஆய்வுகளைக் கூறலாம்." என்று குறிப்பிட்டு தமிழ்ச்சமூகம் 3000 ஆண்டுகளாக விளையாடிய சமூகம் என்பதனை நினைவுபடுத்திப் பதிப்புரையை தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் தலைவர் முனைவர் க.சுபாஷிணி அவர்கள் கொடுத்துள்ளார்.

இந்த நூல் நான்கு இயல்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. முதல் இயல் 'நாட்டுப்புற விளையாட்டுக்களும் சமூகவயமாதலும்' என்னும் தலைப்பில் அமைந்துள்ளது.'சமூகவயமாதல் என்கிற சொல் கற்றுக்கொள்ளுதல் அதாவது சமூகச்செயல்பாடுகளை, சட்ட திட்டங்களைக் கற்றுக்கொள்ளுதல் என்கிற பொருளைக் குறிக்கிறது ' என்று குறிப்பிட்டிருக்கிறார் நூலாசிரியர். சமூகவயமாதல் இல்லை என்றால் மனிதனும் விலங்காகவே வாழ்வான் என்பதைச்சொன்ன மேனாட்டு அறிஞர்களின் மேற்கோள்களை எடுத்துக்காட்டுகிறார்.

விளையாட்டினால் குழந்தைகளுடைய திறன் வளர்வதையும், புதுமை உருவாக்கும் மனப்பான்மை தோன்றுவதையும், பிறரின் தந்திரங்களை அறிவது மட்டுமல்லாது தானே தந்திரங்களை உருவாக்கக் கற்றுக்கொள்வதும் உண்டாகிறது என்று குறிப்பிடுகிறார். சிறு குழந்தையாக இருக்கும்பொழுதே விளையாடுவதால்,விளையாட்டில் இருக்கும் சட்ட, திட்டங்களுக்குக் கட்டுப்பட்டு விளையாடுவதால் பின்னால் சமூக கட்டுப்பாடுகளுக்கும் கட்டுப்பட்டு நடக்கும் மனிதர்களாக உருவாகிறார்கள். விளையாட்டில் ஒரு தலைவனுடைய கட்டளைக்கு அடிபணிந்து நடக்கும் அவர்கள் பின்னாட்களில் தலைமைக்குக் கட்டுப்பட்டு நடப்பது என்பதைக் கற்றுக்கொள்கிறார்கள். விளையாடுவதின் மூலமாக குழந்தைகள் சகிப்புத்தன்மை, விட்டுக்கொடுத்தல், உதவி மனப்பான்மை, கவனமாக இருத்தல், சுறுசுறுப்பு, தன்னம்பிக்கை வளர்தல் போன்ற பல குணங்களை வளர்த்துக் கொள்கிறார்கள். சமூகம், அரசியல், பண்பாடு, உறவு போன்ற பலவற்றைப் புரிந்து கொள்வதற்கு உதவும் ஒரு கருவியாக விளையாட்டு இருக்கிறது என்று குறிப்பிடுகிறார்.

இரண்டாவது இயலில் 'நாட்டுப்புற விளையாட்டுக்களும் பாலினமும்' என்னும் தலைப்பில் ஆராய்ச்சியை மேற்கொண்டிருக்கும் நூலாசிரியர் நிறைய கள ஆய்வின் வழியாகக் கண்டறிந்ததை ஆவணப்படுத்தியுள்ளார்.

*பாலினப்பாகுபாடு என்பது குழந்தைப் பருவத்திலிருந்தே தமிழ்ச்சமூகத்தில் காட்டப்படுகிறது என்பதனை பட்டியலிடுகிறார். வாய்மொழி இலக்கியங்களில் ஆண்களை விடப் பெண்களின் பங்கே அதிகம் எனக்குறிப்பிடுகிறார். "பொதுவாக நமது சமூகத்தில் ஓர் ஆண் குழந்தையின் பிறப்பைவிட ஒரு பெண் குழந்தையின் பிறப்பு சிறப்பற்றதாகக் கருதப்படுகிறது. இதுவே பாலினப் பாகுபாட்டிற்கு அடிப்படையாகும்," என்று குறிப்பிடுகின்ற நூலாசிரியர் பெண் குழந்தை தாலாட்டிற்கும் ஆண் குழந்தை தாலாட்டிற்கும் உள்ள வேறுபாட்டை ஆதாரங்களோடு சுட்டிக்காட்டுகிறார். இந்தப் பாலினப் பாகுபாடு தொட்டிலை ஆட்டும்போதே ஆரம்பிக்கிறது என்பதையும், ஆண் எப்படி உயர்ந்த நிலையில் வரவேண்டும் என்பதையும், பெண் எப்படி அடுப்பங்கரைக்கு மட்டும் உரியவள் என்பதையும் தாலாட்டுப் பாடல்களின் உட்பொருள் உணர்த்துவதைச்சொல்கிறார்.*

*நாட்டுப்புற விளையாட்டுகளில் பாலினக்கூறுகள் வெளிப்படையான நிலை,உள்ளார்ந்த நிலை என்று இரண்டு நிலைகளில் இருப்பதைக் கூறுகின்றார். விளையாட்டை விளையாட்டாக எடுத்துக்கொள்ளக்கூடாது என்பதைச் சுட்டும் விதமாக சிறுவயது விளையாட்டிலேயே, விளையாடும் விளையாட்டுப் பெயர்களிலேயே பாலினப்பாகுபாடு இருப்பதைக் காட்டுகிறார்.*

விளையாட்டுப் பொருள்கள், விளையாட்டின் அமைப்பு, விளையாடும் நேரம், இடம்,விளையாட்டில் பயன்படுத்தும் சொற்கள் என நூலாசிரியர் சுட்டிக்காட்டுவதை யோசிக்கும்போது பாலினப் பாகுபாடு விதைக்கப்படும் இடம் எது என்பது தெளிவாகத் தெரிகிறது. "உடல் திறன் மற்றும் அறிவுத்திறன் கொண்ட வன்மை விளையாட்டுகள் சிறுவனுக்குரியதாகவும் பொழுது போக்கு விளையாட்டுகள் சிறுமிக்குரியதாகவும் நம் சமூகத்தில் பாகுபடுத்தப்பட்டிருக்கின்றன" என்று குறிப்பிடும் நூல் ஆசிரியர் சில பயமுறுத்தல்களையும் ஆவணப்படுத்தியுள்ளார்.

"இருபாலரும் இணைந்து விளையாடுவதற்குச் சமூகம் சில கட்டுப்பாடுகளை விதித்திருக்கிறது. சிறுமிகள் பையன்களோடு சேர்ந்து விளையாடக்கூடாது. குறிப்பிட்ட வயதிற்கு(எட்டு வயதிற்கு) மேல் சிறுமிகள் பையன்களோடு சேர்ந்து விளையாடினால் சிறுமிகளின் மூக்கு விழுந்துவிடும், காது அறுந்து போகும், வயிற்றில் கை முளைத்துவிடும்" என்று ஒரு பெண் (தாயம்மாள்,48,மதுரை) சொன்னதைப் பதிவு செய்து எப்படிப் பெண் குழந்தைகள் பயமுறுத்தப்படுகிறார்கள் என்பதைச்சுட்டியுள்ளார். பிராய்டு அவர்களின் மேற்கோள்களோடு விவரிக்கப்பட்டிருக்கும் 'கற்பனைத் தோழமை ' என்னும் பகுதியை இன்னும் விரிவாக ஒரு தனிப்புத்தகமாகவே நூல்

ஆசிரியர் எழுதலாம். அவ்வளவு ஆர்வம் ஊட்டும் பகுதியாக அந்தப் பகுதி உளவியலோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

"நாட்டுப்புற விளையாட்டுக்களின் இன்றைய நிலை" என்பது அடுத்த இயல். கடந்த 50,60 ஆண்டுகளில் நடந்த மாற்றங்களை.சமூகத்தில் நடந்த மாற்றங்கள், அதனால் விளைந்த விளைவுகளின் விவரிப்பாக இந்த இயல்... அடுக்குமாடிக் குடியிருப்பில் குழந்தைகள் விளையாட இடமெங்கே? அடுத்தடுத்து டீயுசனுகளுக்குப் பறக்கும் குழந்தைகளுக்குத் தரையில் விளையாட நேரமிருக்கிறதா? இன்றைக்கெல்லாம் தனிக்குடித்தனங்கள் மட்டுமே... நாமிருவர் நமக்கொருவர் என்றாகிவிட்டது. ஒற்றைக்குழந்தை யாரோடு விளையாடும்? வேலைக்கு ஓடும் பெற்றோர்களுக்கு பிள்ளைகளைக் கவனிக்க நேரமிருக்கிறதா? கூட்டுக்குடித்தனங்கள் சிதைந்தது குழந்தைகளின் விளையாட்டிற்குப் பேரிடர் போன்ற பல சிக்கல்களைப் பேராசிரியர் பாப்பா அவர்கள் போகிறபோக்கில் சுட்டிக்காட்டுகிறார்.

இன்றைய குழந்தைகள் இயந்திரத்தனமாக வாழப் பழக்கப்படுத்தப்படுகிறார்கள். அதனால் இயந்திரங்களோடு விளையாடுவதையே விரும்புகிறார்கள் என்று சொல்கின்றார். கணினி, இணையம், வாட்சப், முக நூல்,

வீடியோகேம் என விரிந்திருக்கும் இணைய உலகம் ஒரு புதிய பாதையைக் காட்டினாலும் இதனால் விளைந்த ஓர் இழப்பை விவரிக்கும் இயலாக இந்த இயல் உள்ளது எனலாம். "இன்றைய தலைமுறைக்கு உடல் அசைவும் உடல் உழைப்பும் குறைவு. இவர்களது செயல்கள் அனைத்தும் லாப/நட்டக் கணக்கை அடிப்படையாகக் கொண்டவை. அதனால் தேவையில்லாமல் உடல் அசைவு மிகுந்த விளையாட்டுக்களை விளையாட இவர்கள் தயாராக இல்லை. மேலும் கேட்புத்திறன்(Auditory) , பார்க்கும் திறன்(Visual) என்று பார்த்தால் இவர்கள் கேட்கும் திறனைவிடப் பார்க்கும் திறனையே அதிகமாகப் பயன்படுத்துகிறார்கள். அதனால் மற்றவர்களோடு பேசுவதும் அவர்கள் சொல்வதைக் கேட்பதும் குறைவு. தனி நபராகவே வாழப்பழகிக் கொண்டவர்களாக இருக்கிறார்கள். அதனால் குழு விளையாட்டுத் தன்மை அதிகமாகக் கொண்ட நாட்டுப்புற விளையாட்டுக்களை விளையாட இவர்கள் விரும்புவதில்லை " என்று நூலாசிரியர் தன் கருத்தாகக் கூறியுள்ளார். இது விவாதத்துக்குரியது. இன்றைய தலைமுறை இப்படி ஆனதற்கு சென்ற தலைமுறைதானே காரணம்.

இந்த நூலின் மிகச்சிறப்பாக நான் கருதுவது 'நாட்டுப்புற விளையாட்டுகள்" என்னும் பகுதி. முழுக்க முழுக்க, களத்தில், கிராமங்களுக்குச்சென்று, நாட்டுப்புற

விளையாட்டுக்களை விளையாடுபவர்களிடம் பேட்டி எடுத்து, விளையாடச்சொல்லி, அதனை எப்படி விளையாடுகிறார்கள் என்பதனை ஆவணப்படுத்திக் கொடுத்திருக்கும் பகுதி. காலஞ்சென்ற தமிழ் அறிஞர் பேரா.தொ.பரமசிவம் அவர்களின் ஆய்வேடான 'அழகர் கோவில்' மிகப்புகழ் பெற்றது. அதற்கு முதன்மையான காரணம் கள ஆய்வு. களஆய்வின் அடிப்படையில் அமைந்த தொகுப்பு நூல் அது. அதைப் போலவே இந்த இயல் களப்பணியால் விளைந்த கனி. இந்த நூலின் ஆசிரியர் "களப்பணியில் சேகரிக்கப்பட்ட வடிவத்திலேயே அதே மொழி அமைப்புடன் விளையாட்டுகள் பனுவலாகத் தரப்பட்டுள்ளன. இப்பகுதியில் தரப்பட்டுள்ள விளையாட்டுகள் சிறுவர்கள் விளையாடிய விளையாட்டின் அடிப்படையில் அப்படியே தரப்பட்டுள்ளன." என்று குறிப்பிட்டு, களப்பணி அனுபவங்களையும் கொடுத்துள்ளார்.

வண்ணாம்பாறைப்பட்டி என்னும் ஊரில் கள ஆய்வில் கண்ட வெத்தலக்கட்டு பிடியாத விளையாட்டு, வலையபட்டியில் சேகரித்த வெத்தலப்பட்டி வருது விளையாட்டு, தேன்கல்பட்டியில் கண்ட 'ஒரு குடம் தண்ணி ஊத்தி ஒரு பூ பூத்தது விளையாட்டு, வலையபட்டியில் கண்ட திரிதிரியம்மா திரிதிரி விளையாட்டு, கச்சைகட்டியில் பார்த்த கிளித்தட்டு விளையாட்டு, புளியங்குளத்தில் சேகரித்த கிச்சு கிச்சு தாம்பாளம் எனப்படும் தில்லி தில்லி பொம்மக்கா

*விளையாட்டு, இந்த விளையாட்டில் பயன்படுத்தப்படும் பாட்டு, சின்ன உடைப்பு ஊரில் கண்ட தென்னை மரம் விளையாட்டு கச்சை கட்டியில் கண்ட கொல கொலயா முந்திரிக்கா விளையாட்டு என்பன போன்ற முப்பத்து மூன்று விளையாட்டுகளைப் பற்றி மிக விரிவாக, ஆவணமாகக் கொடுத்துள்ளார். இந்த முப்பத்து மூன்று விளையாட்டுகளையும் ஆவணப்படுத்துவதற்கு உதவிய 91 பேர்களின் பெயர்களை நன்றியோடு ஊர்ப்பெயரோடு சேர்த்துக்கொடுத்திருக்கிறார்.*

*நூன்முகம் எனத் தலைப்பிட்டு நூல் ஆசிரியர் பாப்பா அவர்கள் தன்னுரையைக் கொடுத்திருக்கிறார். அதில் தன்னுடைய பால்ய காலத்தை ஓவியம் போல வடித்திருக்கிறார்." சிறு வயது முதல் வளரிளம் பருவம் வரையிலும் வீட்டினுள் இருந்ததை விடத் தெருவிலும் திறந்த வெளிகளிலும் விளையாடியதே அதிகம். வெயிலிலும் பனியிலும் இரவிலும் பகலிலும் கால நேரமின்றித் திரிந்ததும் விளையாடியதும் கொஞ்சங்கூட இப்பொழுது நினைத்துப்பார்த்தாலும் அலுக்கவேயில்லை. பாகுபாடின்றிப் பையன்களோடு விளையாடிச்சுவரேறிக் குதித்ததே அதிகம். சிறுவயதில் படித்ததைவிட விளையாடியதே அதிகம். படிக்காமல் விளையாடி வீணாகி விடவில்லை. அனுபவப் பாடம் அறிய முடிந்தது" என்று குறிப்பிடுகிறார். சமூகத்தை நேசிக்கும் ஒருவராக*

*அன்றைக்கும் இன்றைக்குமான வேறுபாட்டை உணர்ந்து ஆவணப்படுத்தி இருக்கிறார்.*

*இந்த நூலுக்கு மதுரை டோக் பெருமாட்டி கல்லூரி முதல்வர் டாக்டர் கிறிஸ்டியானா சிங் அவர்கள் வாழ்த்துரை அளித்திருக்கிறார். அக்கல்லூரியின் தமிழ் உயராய்வு நடுவத்தின் தலைவர், பேரா.முனைவர் கவிதாராணி அவர்கள் அணிந்துரை கொடுத்துள்ளார்கள். அதில் "திரையில் மட்டுமே விளையாடி மகிழும் இன்றைய இளம் தலைமுறைக்குத் தரையில் விளையாடும் விளையாட்டுக்களின் சிறப்புகளையும் அவற்றின் பன்முகத் தன்மைகளையும் சமூகப்பரிவோடு இந்நூல் பரிந்துரைக்கிறது.மேலும் விளையாட்டு என்றாலே இருவராகவோ அல்லது குழுவாகவோ இணைந்து விளையாடுவது என்கிற நிலை மாறி தானும் தன் கைபேசியும் எனும் ஒற்றைமயமான இன்றைய நிலை குறித்துக் கவலைப்பட வைக்கிறது. நூலாசிரியர் முனைவர் பாப்பா பூச்சு இல்லாத பேச்சுக்காரர். அவ் வெளிப்படத்தன்மையையும் இயல்புத் தன்மையையும் இந்நூலுள் நம்மால் இனங்காண முடிகிறது " என்று குறிப்பிட்டுள்ளார், உண்மைதான். இன்றைய சமூகச்சூழலை மிக வெளிப்படையாக பேசும் நூலாகவும், நமது தமிழ்ச்சமூக விளையாட்டுக்களை ஆவணப்படுத்தி, நமது அடுத்த தலைமுறையை தரையில் விளையாட வைக்கும்*

உண்மையான முயற்சியாகவும் இந்த நூல் திகழ்கிறது, வாங்கிப் படிக்கலாம். பாதுகாத்து வைத்து நாம் விளையாடிய விளையாட்டுகளை குழந்தைகளுக்குச்சொல்லி மகிழலாம். அதன் மூலம் அவர்களையும் தரையில் விளையாடப் பழக்கப்படுத்தலாம், ஊக்கப்படுத்தலாம்.

நூல் விவரம்:

விளையாடிய தமிழ்ச்சமூகம்

ஆசிரியர் : முனைவர் ஆ.பாப்பா

வெளியீடு : தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

பதிப்பு : முதலாம் பதிப்பு பிப்ரவரி 2022

பக்கங்கள்: 256

விலை: ரூ 300/=

நன்றி: சங்கப்பலகை, வல்லினச் சிறகுகள் - மார்ச் 2022

# 23. நீதிக்கு வாதிப்பேன் நின்று - நூல் மதிப்புரை

— நிவேதிதா லூயிஸ்




தமிழகத்தின் முதல் கிறிஸ்தவப் பெண் சட்டமன்ற உறுப்பினர் என ஜெபமணி மாசிலாமணி அம்மாளின் பெயர் பதிவாகியுள்ளது. எனது "முதல் பெண்கள்" நூலாக்கத்தின்போது மானுடவியல் ஆய்வாளர் முனைவர் ஆ.சிவசுப்பிரமணியன், பிலோ ஜாண் அம்மாள்தான் ஜெபமணி அம்மாளின் பெயர்த்தி என தகவல் தந்து, அவரைத் தொடர்புகொள்ள வழியேற்படுத்தித் தந்தார்.

முதல் பெண்கள் நூலில் ஜெபமணி அம்மாளைப் பற்றி எழுதிய தகவல்கள் பிலோ அம்மாள் தந்தவையே. நூல் வெளியீட்டு விழாவுக்கு அவரால் வர இயலவில்லை என்பதால், ஜெபமணி-மாசிலாமணி தம்பதியின் உறவினரை மனமுவந்து அனுப்பினார். தொடர்ச்சியாக அவர்கள் குடும்பத்துடன் பேசிவருகிறேன் என்பதில் எனக்கு மகிழ்ச்சி. பெரியவர் வ.உ.சிதம்பரனார், திரு வி.க., ம.பொ.சி. உள்ளிட்டவர்கள் பற்றி அவ்வப்போது அம்மாவுடன்

பேசிக்கொள்வதில் ஓர் ஆனந்தம். விடுதலைப் போராட்டத்தில் முழுமூச்சாக ஈடுபட்டிருந்த அன்றைய காலத்தையும் ஒவ்வொருவர் பட்ட துன்பத்தையும், சின்னச் சின்ன விஷயங்களில் அவர்கள் கொண்ட மகிழ்வையும் பேசிக்கொண்டிருப்போம்.

கொரோனா பெருந்தொற்று காலத்திலும், பிலோ அம்மாவின் கணவர் மறைந்த ஜாண் ஐயாவின் நூலைப் பெறுவதற்காக ஒரு நாள் இரவு 9 மணிக்கு அவர் வீட்டுக்குச் சென்று பேசிக்கொண்டிருந்தேன். அப்போதுதான் தன் தாத்தா மாசிலாமணி, பாட்டி ஜெபமணியின் வாழ்க்கை வரலாற்றைத் தான் நன்றாக இருக்கும்போதே தொகுக்கப் போவதாக பிலோ அம்மா சொன்னார். மிகுந்த உற்சாகத்துடன் அவரை ஊக்கப்படுத்தி, பாராட்டிவிட்டு வந்தேன்.

அதன்பின் அவ்வப்போது பேசுவார். கொம்பாடி, சில்லாநத்தம் என மாசிலாமணியுடன் தொடர்புடைய ஊர்களுக்குச் சென்று வரும்போதெல்லாம் சிறு குழந்தை போன்ற குதூகலத்துடன் அங்கு சென்று வந்ததை அழைத்து விவரிப்பார். தன் 84வது வயதில் இவ்வளவு அலைந்து திரிந்து தன் குடும்ப வரலாற்றை ஆய்ந்து, தமிழ் மக்களுக்கு பிலோ அம்மா அளித்திருக்கும் நூல், 'நீதிக்கு வாதிப்பேன் நின்று'.
இந்நூல் நாம் கண்டிராத ஒரு புதிய தமிழ்நாட்டை நமக்கு அறிமுகம் செய்கிறது. மாசிலாமணி, ஜெபமணி இருவரது

*வாழ்க்கை வரலாறு மட்டுமல்லாது, அவர்கள் வழி வ.உ.சி., ரோச் விக்டோரியா, ரோட்ரிக்ஸ், முத்தையா தாஸ், ஐயாத்துரை பாகவதர், ராஜாஜி, என நாம் நன்றாக அறிந்த, அறியாத தலைவர்களை நூல் பேசுகிறது. ஏரியூர் அரசியல் மகாநாடு உள்ளிட்ட நாம் வாசிக்க மறந்த வரலாற்றின் பக்கங்களை இந்த நூல் கண்முன் விரிக்கிறது.*

*என்னை மிகவும் கவர்ந்தவை என நூலின் சில பகுதிகளைச் சுட்டலாம். தாதாபாய் நெளரோஜி குறித்து மாசிலாமணி எழுதிய கவிதை, மாசிலாமணியை பிபின் சந்திர பாலுடன் ஒப்பிட்டு தமிழ்நாட்டின் சந்திரபாலர் என வழங்கியது, சாதியை மாசிலாமணி சாடியது போன்றவை மிக முக்கியப் பதிவுகள்.*

*"மானிடவர்க்கத்துள்ளே மாபழி மேல் கீழ் என்னும்*
*பாரிடை நிற்கச் செய்த பாவமே பற்றிற் றென்னக்*
*கூறிட வழியுமாகிக் குறைகளும் மெத்த வாச்சே*
*யாரிடை செப்பச் சொல்லாய் யாமுறுந் துயரைத் தீராய்"*

*என்று மாசிலாமணி பாடியுள்ள கவி அவரது எண்ண ஓட்டத்தைச் சொல்கிறது. வ.உ.சி. யின் உண்மையான ஆத்ம நண்பர் என முத்தையா தாஸ் மாசிலாமணியைக் குறிப்பிட்டுக் கைப்பட எழுதியுள்ள குறிப்பு நூலில் இடம்பெறுகிறது. சில்லாநத்தத்தில் மாசிலாமணி ஏற்படுத்திய கதர் தொழிலும், அங்கிருந்து வார்தாவிலிருந்த காந்திக்கு*

*நூல் அனுப்பப்பட்டதையும் அறியமுடிகிறது. தனி நபர் சத்தியாகிரகப் போராட்டத்தில் பங்கேற்க காந்தியிடம் மாசிலாமணி சிறப்பு அனுமதி பெற்றது, அவரது கூட்டங்களில் மொழிபெயர்ப்பாளராக மேடையேறியது, கராச்சி மாநாட்டில் மாசிலாமணி ஆங்கில உரை நிகழ்த்தியது என வாசிக்க, அன்றைய காலத்தில் விடுதலைப் போராட்டம் எப்படி மாநிலங்களின் எல்லைகளை விரிவாக்கியிருந்தது; வடவர் தெற்கைச் சேர்ந்தவர்களுக்கு இடையே இருந்த இணக்க உணர்வு போன்றவற்றைத் தெரிந்துகொள்ள முடிகிறது.*

*தூத்துக்குடி பனிமய மாதா ஆலயம் எப்படி விடுதலைப் போரில் மேடையாக மாறியது என்பதையும் அங்காங்கே நூல் சுட்டிச்செல்கிறது. ஆலயத்தின் முன்பு நடந்த 'நாத்திக அக்கிரமப் பிரச்சாரத்தைக் கண்டிக்கும் கூட்டம்', அதில் மாசிலாமணி ஆற்றிய உரையையும், அதே மாசிலாமணி பெரியாருடன் அமர்ந்திருக்கும் படத்தையும் ஒருங்கே நூலில் காணமுடிகிறது. பெரியாரை எதிர்த்து அவரது கூட்டத்திலேயே பேசி, அதனால் பல சங்கடங்களுக்கு மாசிலாமணி ஆளானதாகவும் நூல் குறிப்பிடுகிறது. ஆனாலும் இருவருக்கும் இடையே இருந்த புரிந்துணர்வு, அரசியல் நாகரிகம் வியப்பு கொள்ளச்செய்கிறது.*

*அதே சமயம் இந்த நூல் மாசிலாமணியை 'அரசியல்ரீதியாக சரியான' மனிதராகக் கட்டமைக்கவும் இல்லை. அவரது*

முரண்களை பூடகமாகக் கண்முன் விரிக்கிறது. சாதியத்தை சாடிப் பாடல் எழுதிய மாசிலாமணி, சிறையில் தன் மூத்திரக் கலயத்தை எடுக்க மறுத்து, தோட்டியை வரச்செய்யும் கதையும் நேர்மையாக நூலில் எடுத்தாளப்படுகிறது. ஒரு படைப்பின் சிறப்பு அதன் நேர்மையில் இருக்கிறது என்பதைத் திடமாக நம்புவதால், தன் தாத்தாவின் பண்புகளை எந்த ஒளிவு மறைவுமின்றி குறிப்பிடும் பிலோ அம்மாவைப் புரிந்துகொள்ளமுடிகிறது; அவர் மேல் மதிப்பு இன்னும் கூடுகிறது.

கடைசி வரை தன்னை 'கத்தோலிக்கர்' என்ற அடையாளத்துக்குள் மாசிலாமணி வைத்திருந்தார் என பிலோ அம்மாள் எழுதுகிறார். 'இந்தியக் கத்தோலிக்கன் என்ற அடைமொழிகளுக்குள் கத்தோலிக்கனுக்கே அவர் முன்னுரிமை கொடுத்தார். அது அவர் அறியாமை என்று கொண்டாலும், தமது கருத்தில் உறுதியாக இருந்தார்', என நூல் குறிப்பிடுகிறது. போலவே ஜெபமணி அம்மாள் தினமும் காலையில் ஜெபமாலையையும், குறிப்பிடம் நூலையும் எடுத்துக்கொண்டு ஆலயம் போகும் வழக்கம் உள்ளவர் எனவும் பிலோ பதிவு செய்கிறார். கத்தோலிக்கக் கிறிஸ்தவம் என்ற அமைப்புக்குள் இருந்துகொண்டே, விடுதலைப் போராட்டத்தில் தாங்களும் பங்கேற்று, பலருக்கு வழிகாட்டியாகவும் இந்தத் தம்பதி இருந்துள்ளனர்.

1909ம் ஆண்டே திருமணம் ஆனாலும், 1937ம் ஆண்டு தான் இவர்கள் திருமணம் சான்று பெற்றுள்ளது. ஒருவேளை ஜெபமணி அம்மாள் தேர்தலில் பங்கேற்கும் எண்ணம் வந்த பிறகு, அதற்குச் சமர்ப்பிக்கவேண்டிய அஃபிடவிட்டுக்காக மணச்சான்று பெற்றிருக்கக் கூடும். 'ஆர்ப்பாட்ட அரசியலை' மாசிலாமணி செய்யவில்லை எனக் குறிப்பிட்டு மூத்த கிறிஸ்தவ ஆய்வாளர் கலாபன் வாஸ் (Kalaban Vaz) எழுதிய கடிதம், நூலில் இடம்பெற்றுள்ளது. நூலின் பல பகுதிகள் மாசிலாமணி-ஜெபமணி தம்பதியின் மகன் அலாஷியஸ் ராஜ் நேரடியாகக் கண்டுணர்ந்து எழுதிய 'நீதிக்கு வாதிப்பேன் நின்று' நூலிலிருந்து எடுக்கப்பட்டுள்ளன என்பதால் முதன்மை சான்றுகள் அவை என்பது தெளிவாகிறது. ம.பொ.சி. இந்த நூலைப் பள்ளிகளில் பாடநூலாக்க வேண்டும் என பாராட்டுக் கடிதம் எழுதியுள்ளார்.

'தேசியப் போராட்டத்தில் ஈடுபட்ட முதல் கிறிஸ்தவர்; தென்னாடு விழிப்படையக் காரணமாயிருந்த தலைவர்களில் ஒருவர்' என தமிழ்மணி இதழ் மாசிலாமணியைப் பாராட்டியிருப்பதை நூல் குறிப்பிடுகிறது. 'கத்தோலிக்கப் பிரமுகர்களின் சத்தியாகிரகம்: இந்த ஜில்லாவின் பிரபல நீண்டநாள் காங்கிரஸ்வாதியான ஸ்ரீ. ஏ. மாசிலாமணியும், அவரது மனைவி ஜெபமணி எம்.எல்.ஏ.வும் இன்று காலை மாதா கோவில் முன் ஆயிரக்கணக்கான கத்தோலிக்கரிடையில் யுத்த எதிர்ப்பு கோஷம் செய்து

*சத்தியாகிரகம் செய்தனர்' என தினமணி பதிவு செய்துள்ளதையும் நூல் சுட்டுகிறது. விடுதலைப் போராட்டத்தில் கிறிஸ்தவர்களின் பங்கு அதிகம் பேசப்படவில்லை என்ற என் நீண்ட நாள் ஆதங்கத்தை இந்த நூல் ஓரளவுக்கேனும் தீர்க்கிறது.*

*நூலின் பின் இணைப்புகள் இன்னும் சுவாரசியமானவை. மாசிலாமணி குறித்து மற்றவர்கள் படைப்புகள் மட்டுமல்லாமல், அவரது படைப்புகளும் இடம்பெற்றுள்ளன. 'பஞ்ச நிவர்த்திப்பா', 'இந்திய பிரலாபப் பத்து', 'சட்டசபை நிராகரணச் சிந்து', 'பாரதமாதா புலம்பல்' போன்றவை ஐந்தாவது ஃபார்ம் (அன்றைய பத்தாம் வகுப்பு) வரை கற்ற மாசிலாமணியின் மொழிப்புலமையை எடுத்துச் சொல்கின்றன. இவை தவிர அவரது ஆங்கிலக் கவிதை, உரைநடையும் இடம்பெற்றுள்ளன. (கர்ப்பத்தடை எதிர்ப்பு குறித்த அவரது பாடலும் உண்டு; எனக்கு அதில் முற்றிலும் உடன்பாடில்லை)*

*1935 முதல் 1956 வரை சென்னை சட்டப்பேரவை உறுப்பினராக இருந்தவர் ஜெபமணி அம்மாள். 'அகில இந்திய அளவில் இப்பெருமை பெற்ற கிறிஸ்தவப் பெண்மணி அவர் ஒருவரே' என 1973ம் ஆண்டு வெளியிடப்பட்ட அன்னையின் அருட்சுடர் நூலில் குறிப்பிடப்பட்டுள்ளதாக பிலோ அம்மாள் பதிவு செய்கிறார். தியாகிகளுக்கு*

*வழங்கப்பட்ட நிலத்தையும் வாங்கவில்லை, தாமிரப் பத்திரமும் அம்மையார் பெற்றுக்கொள்ளவில்லை எனப் பதிவு செய்யப்பட்டுள்ளது.*

*நாட்டுக்காகவும், தாய் திருச்சபையின் நலனுக்காகவும் வாழ்ந்து தியாகம் செய்த மாசிலாமணி அவர்களைக் கிறிஸ்தவத் தமிழ்ச் சமுதாயம் விழித்தெழுந்து நினைத்துக் கொள்ளுமா? என லயோலா கல்லூரி முன்னாள் பேராசிரியர் எம்.எக்ஸ். மிராண்டா கேள்வி எழுப்பியிருக்கிறார். அதே கேள்வியை நானும் முன்வைக்கிறேன். தமிழ்க் கிறிஸ்தவச் சமூகம் இந்தத் தம்பதியைக் குறித்துக் குறைந்த பட்சம் அறிந்துகொள்ள முன்வருமா? 150 ரூபாய் மதிப்புள்ள நூலை 100 ரூபாய்க்குத் தரமுடியும் என பிலோ அம்மாள் குறிப்பிடுகிறார்.*

*"நீதிக்கு வாதிப்பேன் நின்று"*
*பிலோ ஜாண்*
*செல்வி பதிப்பகம், 9443702800*
*சிறப்புச் சலுகை விலை ரூ.100/-*
*தொடர்பு கொள்க: திரு. இளங்கோ- 9443702800*

## 24. ஐவகை மன்றம்

— சொல்லாக்கியன்

*வேண்டும் வேண்டும் வேண்டும்*
*இலஞ்சி மன்றம் வேண்டும்*
*பசியும் பிணியும் வெறுப்பும்*
*பொய்யும் புறணியும் புரட்டும்*
*இந்திய மண்ணில் அறுத்திட*
*இலஞ்சி மன்றம் வேண்டும்.*

*வேண்டும் வேண்டும் வேண்டும்*
*வெள்ளிடை மன்றம் வேண்டும்*
*மக்கள் பணத்தைச் சுருட்டியக்*
*கயவர் கழுத்தை ஒடித்திட*
*கனவிலும் களவை ஒழித்திட*
*வெள்ளிடை மன்றம் வேண்டும்.*

*வேண்டும் வேண்டும் வேண்டும்*
*நெடுங்கல் மன்றம் வேண்டும்*
*மதவாத வஞ்சம் உண்டோர்*
*சாதிபேத நஞ்சம் கொண்டோர்*
*நெஞ்சம் தெளிந்து அமைதியுற*

நெடுங்கல் மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
பாவை மன்றம் வேண்டும்
எளியர்க்கும் வலியர்க்கும் சமநீதி
பெண்ணுக்கும் ஆணுக்கும் ஒருநீதி
அதையும் விரைந்து அளித்திட
பாவை மன்றம் வேண்டும்.

வேண்டும் வேண்டும் வேண்டும்
சதுக்கப் பூதங்கள் வேண்டும்
பெண்கள் மோசம் செய்வோர்
மழலைகள் நாசம் செய்வார்
நையப் புடைத்து உண்ணும்
சதுக்கப் பூதங்கள் வேண்டும்.

(பூம்புகாரில் வெள்ளிடை மன்றம், பூதச்சதுக்கம், இலஞ்சிமன்றம், நெடுங்கல் நின்ற மன்றம், பாவைமன்றம் ஆகியவை ஐவகை மன்றங்கள் இருந்ததாய் 'சிலம்பு' செப்பும்.)

## 25. இன்று...

— ருத்ரா இ.பரமசிவன்

*இன்று நாள் நல்ல நாள்.*
*நேற்று அந்த தந்திக்கம்பத்து சிட்டுக்குருவி*
*ஜோஸ்யம் சொல்லிவிட்டது.*
*மனசுக்குள் இந்த இன்பச்சுமையை*
*திணித்து திணித்து சுமையாக்கி*
*சுமப்போம் வாருங்கள்.*
*எல்லா நிகழ்வுகளுக்கும்*
*நாம் "சந்தோஷம்" என்றே பெயர் சூட்டுவோம்.*
*பாருங்கள்*
*நம் பாரங்கள் இலேசாகி விட்டன.*

*இன்றுகளின்*
*முகமூடிகள் தான்*
*நேற்றுகளும் நாளைகளும்!*
*இப்போது*
*அந்த சுட்டெரிக்கும் கண்ணீர்த்துளிகள்*
*கூட*
*நம் முகத்தின் எதிரே படலம் காட்டும்*
*மனத்திரையில்*

நிறப்பிரிகை செய்து காட்டுகிறது.
புற ஊதாக்கதிர்களும் அகச்சிவப்புக்கிரணங்களும்
"சந்தோஷ"ப்பிசிறுகளை
மாலையாக்கி விட்டது.

அழுவதும் ஆனந்தம்.
ஆனந்தமும் அழுகை.
தீம் திரிகிட..தீம் திரிகிட..
அக்கினிக்குஞ்சுகளும்
அல்வா இனிப்புகள்.
சாம்பலாய் விழுவதிலும்
சண்பகப்பூ பனித்துளியை
சுமந்து நிற்கிறது.
விஞ்ஞானிகளின் "க்ராண்ட் யூனிஃபிகேஷன்"
இந்த எல்லா பிரபஞ்சங்களையும்
க்ரஷ் செய்து அதோ கோப்பையில் நீட்டுகிறது.
அந்த ஜனன மரண ரசம்
பஜகோவிந்த ரசமாய் மழைபெய்கிறது.
ஏமாந்து கொள்வதே பரம சுகம்.
அதுவே எல்லாவற்றையும் நனைக்கட்டும்.
அறியாமை அறிவை விழுங்கித்தீர்க்கட்டும்.
சுபம்..சுபம்..சுபம்!

## 26. மடியதனில் தூங்கு மின்ப மதிவதன!

— முனைவர் சே. பானுரேகா

.......... மெல்லின வண்ணப்பா..........

பணிபுரிய வேண்டு மென்று
பதமலரை நாடு முந்தன்
பசுங்கிளியைத் தேடி வந்த
பரந்தாம
பலவினைக ளாலும் வென்று
பருவமக ளான உந்தன்
படைமுழுதும் யாவும் வென்ற
பதிதேவ
மணிதவழு மார்ப ணிந்த
மலரணிந்த மேனி ராதை
மனமகிழ நாடி வந்த
மகிழ்மார்ப
மனதிலெழு மாசை யன்பு
மலைமிகவு மேலு முள்ள
மடியதனில் தூங்கு மின்ப
மதிவதன
அணிகலனும் சூடி வந்த

அழகுமயி லாக நின்ற
அறிவுடைய மாது மிந்த
அதிதேவி
அதிசயமு மாகு மென்று(ம்)
அடிமுதலு மேனி மின்னும்
அருமைமிகு மாது நிந்தன்
அருளாள
மணிகளிடை யாடு கின்ற
மதுவதன மோக னுந்தன்
மணியிதழும் பாடு மென்ற
மணவாள
மயிலிறகு மாடு மென்று
மனமுழுது மாவ லுந்தும்
மணிமகுட நீல வண்ண
மணிமாலே!

இலக்கிய மாமணி,
திருக்குறள் மாமணி,
- சே. பானுரேகா
ஆற்காடு.

## 27. நான் நானே தான் !

— முனைவர் சந்திரிகா சுப்பிரமணியம்

*நான் காளியுமில்லை,*
*சீதையுமில்லை*
*நான் பெண் எனும்*
*பெரும் அற்புதம்*
*சிறுமை மண்ணில் கால் புதைந்து*
*தடைகள் மழைத் தலை வாங்கி*
*எதிர்ப்பு வெள்ளம் மீறி வந்து*
*வீறு கொண்ட வித்து நான்.*
*வீழ்ந்தாலும் வெளிப்படுவேன்*
*பயன் தரும் விருட்சமாக.*
*வீழும் முன்பு*
*நூறு வித்து,*
*என் அறிவு தடவி*
*அன்பு நனைத்துக்*
*காடென சூழக்*
*காலடி வீழ்வேன்.*
*வீழ்ந்த பின்னும்*
*வித்தக வீணை தரும்*
*மரமாவேன்*

சுடர் தூண்டத் தீயாகும்
சருகாவேன்
பிணியறு மருந்தாகும்
வேராவேன்
ஏனெனில் நான்
கற்றலும்
கற்பித்தலும்
கற்ற படி நிற்றலும்
கற்றதன் பயன்
பெற்றலும்
வாழ்க்கையாகக் கொண்டு
கற்பிதம் தாண்டி
அற்புதம் செய்யும்
அறிவூட்டல் பணியின்
அடித்தள அடிமை
அறிவுப் பொறி ஏற்றும்
பெண் எனும் பேராசான்,
நான் நானே !
சுயம்! அதுவே நான்.

# 28. பெண்களாய் வாழ்வதே சாதனை தான்

— தீபிகா சுரேஷ்


An exhibit displayed at the Kolkata Fine Arts Academy

தொலைந்து போன பால்யம்
தூக்கி எறியப்பட்ட கனவுகள்
இளமையில் துரத்திய வறுமை
விதியென வாய்த்த வாழ்க்கை
உரிமை இல்லா உறவுகள்
உண்மை இல்லா உணர்வுகள்

*புரிதல் இல்லா புணர்வுகள்*
*அடைகாக்கும் சமையலறை*
*அடுத்த சிறையாய் படுக்கையறை*
*அலுவலகத்தில் அசடுகள்*
*அங்கும் அக்னி பரீட்சை தான்*
*உடல்மொழி தனிக்கதை*
*உளவியலானது விடுகதை*
*பிள்ளை வளர்ப்பு பெருங்கதை*
*குடும்பமது போர்க்களம்*
*சுயம் மறந்து நாட்களாக*
*நட்புகள் ஏது சிந்தையில்*
*பெரியாரும் பாரதியும்*
*பெருமூச்சிறைக்கச் செய்ய*
*வாசிக்கப் பழகியவள்*
*எழுதத் தொடங்கினாள்*
*எழுத்துகள் தந்தது விடுதலை எண்ணங்களில் எழுச்சி*
*வேர்களைத்தேடிய எழுத்தில்*
*அவளை அவளே கண்டெடுத்தாள்*
*ஆறாம் விரலாய் அவள் பேனாவும்*
*அஞ்சாத அறமுறைத்தது.*
*பெண்களாய் வாழ்வதே சாதனை தான்*
*அனுதினம் உன்னை நீ கொண்டாடு*

*-- தீபிகா சுரேஷ்*

# தமிழ் மரபு அறக்கட்டளை நிகழ்வுகள் மற்றும் வெளியீடுகள் – செய்திகள் தொகுப்பு

– முனைவர் தேமொழி

---

*தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பின் இணையத்தளம்*
*https://www.facebook.com/TamilHeritageFoundation*

*தமிழ் மரபு அறக்கட்டளையின் நிகழ்வு-செய்தி வெளியீடுகள்*
*http://thf-news.tamilheritage.org/*

*தமிழ் மரபு அறக்கட்டளையின் யூடியூப் காணொளி அலைவரிசை*
*https://www.youtube.com/Thfi-Channel*

---

***தமிழ் மரபு அறக்கட்டளையின் காணொளி வெளியீடுகள்:***
*திசைக் கூடல்:*
*திசைக்கூடல் – 259 [ஜனவரி 22, 2022]*
*ஆரோக்கியமான உணவும் உடற்பயிற்சியும்:*
*– கிருத்திகாதரன் மற்றும் முனைவர் தா.காட்வின்*
*https://youtu.be/vpB3IFn-Z0E*

*திசைக்கூடல் – 260 [ஜனவரி 29, 2022]*
*நாகர் வழிபாடு:*
*– முனைவர் செ. இராஜேஸ்வரி*
*https://youtu.be/1YQ2NgYampw*

திசைக் கூடல் – *261* [பிப்ரவரி *5, 2022*]
மதுரை மீனாட்சி அம்மன் கோயில் கல்வெட்டுகள் காட்டும் வரலாறு:
— முனைவர் மீ. மருது பாண்டியன்
*https://youtu.be/ewnnzTBu44M*

திசைக் கூடல் – *262* [பிப்ரவரி *12, 2022*]
தமிழக நாட்டார் வழக்காற்றியலுக்கு நா.வா.வின் பங்களிப்பு:
— பேரா. ஆ. சிவசுப்பிரமணியன்
*https://youtu.be/93D2VU1R9vU*

திசைக் கூடல் - *263* [பிப்ரவரி *19 , 2022*]
தமிழ்ப் பதிப்பு வரலாற்றில் உ.வே.சா
— பேரா. முனைவர் பா. ஜெய்கணேஷ்
*https://youtu.be/YdtMhy7M-Fs*

திசைக் கூடல் - *264* [பிப்ரவரி *26, 2022*]
தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும்
— முனைவர் கோ. சசிகலா
*https://youtu.be/GrX5fZRzwu4*

திசைக் கூடல் - *265* [பிப்ரவரி *27 , 2022*]
கல்வெட்டில் தேவதாசி
— பேராசிரியர் முனைவர் எஸ். சாந்தினிபீ
*https://youtu.be/50VEf5zZ0s8*

திசைக் கூடல் - *266* [பிப்ரவரி *28 , 2022*]
"அறியப்பட வேண்டிய தமிழகம் "-நூல் திறனாய்வு
— முனைவர் சிவ இளங்கோ, எழுத்தாளர், புதுச்சேரி
*https://youtu.be/VHDLlDJoSbc*

திசைக் கூடல் – *267* [மார்ச் *1, 2022*]
விளையாடிய தமிழ்ச்சமூகம்
— முனைவர் ஆ. பாப்பா
*https://youtu.be/0v8AK3NMm-Q*

திசைக் கூடல் – *268* [மார்ச் *5, 2022*]
பெண்ணின் பெருந்தக்க யாவுள ?
— முனைவர் இர. பிரபாகரன்
*https://youtu.be/snHzltsFJBI*

திசைக் கூடல் – *269* [மார்ச் *12, 2022*]
பெண்களும் நிதி மேலாண்மையும்
— திரு.கார்த்திகேயன் சுப்ரமணியன்
*https://youtu.be/7xx-Pd505Pw*

திசைக் கூடல் – *270* [மார்ச் *13, 2022*]
"திருவள்ளுவர் யார்?" – நூல் திறனாய்வு:
— முனைவர் அரசு செல்லையா
*https://youtu.be/eRl0rBWAhl4*

திசைக் கூடல் – 271 [மார்ச் 19, 2022]
ஜெர்மானிய பாதிரியார்களின் தமிழக வருகையும்:
— முனைவர்.செ.சு.மோகனவேலு
https://youtu.be/crIFjP2unL8

திசைக் கூடல் – 272 [மார்ச் 20, 2022]
"வரலாற்றில் பொய்கள்" – நூல் திறனாய்வு:
— திரு. கோ. ஒளிவண்ணன்
https://youtu.be/0t8Du8OcRZo

திசைக் கூடல் – 273: [மார்ச் 26, 2022]
வந்தியத்தேவனின் வாணர்குடியும் தமிழகத்தில் வருணாசிரம வரலாறும்
— முனைவர் சு. பழனியப்பன்
https://youtu.be/ZT262FPBZrQ

திசைக் கூடல் – 274 [ஏப்ரல் 2, 2022]
மகாவித்வான் மீனாட்சி சுந்தரம்பிள்ளை பிறந்த நாள் சிறப்புரை
— முனைவர் க.சுபாஷிணி
https://youtu.be/6hb4S2N3HIw

திசைக் கூடல் – 275 [ஏப்ரல் 9, 2022]
அண்ணல் அம்பேத்கர் பிறந்த நாள் சிறப்புரை
— வழக்கறிஞர் கௌதம சன்னா
https://youtu.be/g1z982TOvyc

---

**தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பக நூல் வெளியீடுகள் :**

*பிப்ரவரி 19 ம் தேதி, சனிக்கிழமை, 2022*
*தமிழ் மரபு அறக்கட்டளையின் 3 நூல்கள் வெளியீடு*
*https://youtu.be/lLHt7SwUvmg*
*நூல்கள்:*
*1. கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள்*
*2. தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும்*
*3. வரலாற்றில் பொய்கள்*

*பிப்ரவரி 26 ம் தேதி, சனிக்கிழமை, 2022*
*தமிழ் மரபு அறக்கட்டளையின் 4 நூல்கள் வெளியீடு*
*நூல்கள்:*
*1. விளையாடிய தமிழ்ச்சமூகம் -நூலாசிரியர்: ஆ.பாப்பா*
*2. ராஜராஜனின் கொடை -நூலாசிரியர்: க.சுபாஷிணி*
*3. நாகர் நிலச் சுவடுகள் -நூலாசிரியர்: மலர்விழி பாஸ்கரன்*
*4. கல்வெட்டில் தேவதாசி -நூலாசிரியர்: எஸ்.சாந்தினிபீ*

---

**தமிழ் மரபு அறக்கட்டளையின் கல்விச் சுற்றுலா:**

*பிப்ரவரி 20 ம் தேதி, ஞாயிற்றுக்கிழமை, 2022*
*திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயில்*

---

**தமிழ் மரபு அறக்கட்டளை மின்னூலகத்தில் இணைக்கப்பட்ட நூல்கள்:**

"பெண் பூப்பின் புனித வழிபாடு"
பிரிவு: சமூகப் பண்பாட்டு ஆய்வு நூல்
ஆசிரியர்: முனைவர் செ. இராஜேஸ்வரி
http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/03/Penn-Puuppu-Book.pdf

ஆங்கில மொழிபெயர்ப்பில் சங்கத் தமிழ்ப் பாடல்கள்
ஆசிரியர்: முனைவர் செ. இராஜேஸ்வரி
Category: Sangam Classics in English Series —
[1] Ainkurunuru (Selected Poems of Love) in English
ஐங்குறுநூறு பாடல்கள் ஆங்கில மொழிபெயர்ப்பில்
http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/03/Ainkurunuru-Book.pdf

[2] Kuruntokai (Selected Poems of Love) in English
குறுந்தொகை பாடல்கள் ஆங்கில மொழிபெயர்ப்பில்
http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/03/Kurunthokai-Book.pdf

[3] Purananuru (Selected Short Poems) in English
புறநானூறு பாடல்கள் ஆங்கில மொழிபெயர்ப்பில்
http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/03/Purananuuru-Book.pdf

**தமிழ் மரபு அறக்கட்டளையின் "திணை" – செய்திமடல்கள்:**

*செய்திமடல்-20: ஜனவரி 2022*
*https://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/02/THFi-Newsletter-Thinai-Madal-20-January-2022.pdf*

*செய்திமடல்-21: பிப்ரவரி 2022*
*http://thf-news.tamilheritage.org/wp-content/uploads/2022/04/THF-Newsletter-Thinai-Madal-21-February-2022.pdf*

---

## திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயில்

## கல்விச் சுற்றுலா



*தமிழ் மரபு அறக்கட்டளையின் பிப்ரவரி 2022 திருவொற்றியூர் மரபு பயணத்தில் வரலாற்று ஆர்வலர்கள் ...படம் உதவி – எழுத்தோவியர் நாணா*

தேவாரம் பாடிய மூவரும் வந்து தரிசித்த திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயில்..தமிழ்நாட்டின் இலக்கியம் மற்றும் வரலாற்றில் இதன் சிறப்புகள்... இக் கோயில்

கொண்டிருக்கின்ற கல்வெட்டுகள்.. அவை சொல்லும் செய்திகள்..ஞாயிற்றுக்கிழமை-20/02/2022 அன்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்த திருவொற்றியூர் தியாகராஜ சுவாமி கோயில் கல்விச் சுற்றுலாவில்.. இவற்றை நேரடியாக நமக்கு விளக்குகிறார் தமிழகத் தொல்லியல் துறையின் ஆய்வாளர் முனைவர் பத்மாவதி



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு ஏற்பாடு செய்திருந்த திருவொற்றியூர் பயணம் கல்விச்சுற்றுலா நேற்று மதியம் நடைபெற்றது. தமிழ்நாட்டின் பல்வேறு பகுதிகளில் இருந்து பதிவு செய்துகொண்டு இந்த நிகழ்ச்சியில் நேரில் வந்து வரலாற்று ஆர்வலர்கள் கலந்து சிறப்பித்தனர்.பல்வேறு

வரலாற்றுச் சிறப்புகளைக் கோயில் தொடர்பான செய்திகளை தொல்லியல் துறையில் நீண்ட காலம் பணியாற்றி ஓய்வு பெற்ற முனைவர் பத்மாவதி அவர்கள் விளக்கமளித்தார்கள். அவருடன் துணையாக முனைவர் சசிகலா அவர்களும் வரலாற்றுச் செய்திகளையும் கல்வெட்டுச் செய்திகளையும் வழங்கினார்.இந்த நிகழ்ச்சி சிறப்பாக நடைபெற உதவிய திருவொற்றியூர் கோவில் நிர்வாகத்தினருக்கும் தமிழ்நாடு இந்து அறநிலையத்துறை அலுவலகத்திற்கும் தமிழ் மரபு அறக்கட்டளையின் நெஞ்சார்ந்த நன்றி.கோயில் என்பது வழிபாட்டிற்கு மட்டுமே என்ற சிந்தனையில் இருந்து விடுபட்டு திருவொற்றியூர் கோயில் பல்வேறு வரலாற்றுச் செய்திகளைத் தங்கியிருக்கும் ஒரு வரலாற்று ஆவணப் பாதுகாப்பகம் என்ற சிந்தனையை நேற்றைய கல்விச் சுற்றுலா வழங்கியது. இத்தகைய எண்ணற்ற கோயில்கள் தமிழ்நாட்டில் இருக்கின்றன. அவற்றை முறையாக அறிந்து கொள்வதும் அவற்றை பாதுகாப்பது அவசியமாகும்.

-முனைவர் க. சுபாஷிணி

# தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின் நூல் வெளியீடுகள்

தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின்
3 நூல்கள் வெளியீடு

அரங்கு எண்: F6
நாள்:19.02.22 (சனிக்கிழமை)
நேரம்: மாலை
6:00 - 6:30 மணி

கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள்
நூல்வெளியீடு: முனைவர் ஆ.பாப்பா, மதுரை
நூல் பெறுபவர்: முனைவர்.அரசு செல்லையா, வாஷிங்டன்

தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும்
நூல்வெளியீடு: திரு.ஒளிவண்ணன், எமரால்டு பதிப்பகம், சென்னை
நூல் பெறுபவர்: முனைவர்.ஆ.பத்மாவதி, சென்னை

வரலாற்றில் பொய்கள்
நூல்வெளியீடு: முனைவர் சிவ இளங்கோ, புதுவை
நூல் பெறுபவர்: திரு.பீர் முகமது, பத்திரிக்கையாளர், இப்போது.காம்

45வது சென்னை புத்தகக் கண்காட்சி – 2022
இடம் YMCA மைதானம், நந்தனம், சென்னை.

தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகத்தின்
4 நூல்கள் வெளியீடு

45வது
சென்னை புத்தகக் கண்காட்சி – 2022
26/2/2022 சனிக்கிழமை
மாலை 6 மணி

அரங்கு
எண்:433
ஆழி
பதிப்பகம்

விளையாடிய தமிழ்ச்சமூகம்
நூல்வெளியீடு: கோ.எழில், கோவை
நூல் பெறுபவர்: ஆழி செந்தில்நாதன்

நாகர் நிலச் சுவடுகள்
நூல்வெளியீடு: ஆர்.எம்.பாபு
நூல் பெறுபவர்: அ. முத்துக்கிருஷ்ணன்

ராஜராஜனின் கொடை
நூல்வெளியீடு: முனைவர்.அரசு செல்லையா
நூல் பெறுபவர்: முனைவர்.சங்கர சரவணன்

கல்வெட்டில் தேவதாசி
நூல்வெளியீடு: எழுத்தோவியர் என்.எஸ் நாணா
நூல் பெறுபவர்: வாஷிங்டன் சிவா



நூல்கள்:

1. கொங்கு நாட்டுத் தொல்லியல் சின்னங்கள்

2. தொல்லியல் நோக்கில் தமிழ்நாட்டுக் கடவுளரும் வழிபாட்டு மரபுகளும்

3. வரலாற்றில் பொய்கள்




நூல்கள்:

1. விளையாடிய தமிழ்ச்சமூகம் -நூலாசிரியர்: ஆ.பாப்பா

2. ராஜராஜனின் கொடை -நூலாசிரியர்: க.சுபாஷிணி

3. நாகர் நிலச் சுவடுகள் -நூலாசிரியர்: மலர்விழி பாஸ்கரன்

4. கல்வெட்டில் தேவதாசி -நூலாசிரியர்: எஸ்.சாந்தினிபீ

# தமிழ் மரபு அறக்கட்டளை பதிப்பகப்பிரிவின் வெளியீடுகள்




இந்த நூல்களைப் பெற விரும்புவோர்

*https://www.commonfolks.in/books/tamil-heritage-foundation*

*https://wisdomkart.in/books-category/tamil-heritage-foundation/*

வலைப்பக்கம் சென்று நூல்களைப் பெறலாம்.




# மின்தமிழ்மேடை

29

எளிய வகையில் வரலாற்றை மக்களிடம் கொண்டு சேர்ப்போம்!



தமிழ் மரபு அறக்கட்டளை பன்னாட்டு அமைப்பு

வெளியிடும் காலாண்டிதழ் காட்சி: 29 ஏப்ரல் - 2022

https://www.tamilheritage.org/